# கூனும் சிறிய கோத்தாயும்



ஆர். வீரபத்திரன்

கம்பன் காவியம்

# கூனும் சிறிய கோத்தாயும்

(மந்தரையும் கைகேயியும்)

(கம்பர், வான்மீகி துளசிதாசர் — இவர்கள் படைப்புக்களின் ஒப்பாய்வு)



ஆசிரியர்:

ஆர் வீரபத்திரன், எம். ஏ., எல். ற்றி.,
(முன்னைத் தமிழ்ப் பேராசிரியர்,
கேரளப் பல்கலைக் கழகக் கல்லூரி, திருவனந்தபுரம்.)
இராமலிங்க விலாஸ், வணிகர் தெரு, வடசேரி,
நாகர்கோவில்.

ஆசிரியர் வெளியீடு

1994

**Justice M. M. Ismail,**
Former Chief Justice,
Madras High Court.

8, Justice Sundaram Road,
Mylapore,
Madras-600 004.

# முன்னுரை

இந்நூலின் ஆசிரியர் புலவர் ஆர். வீரபத்திரன் அவர்கள் திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழகக் கல்லூரியின் முன்னைத் தமிழ்ப் பேராசிரியர், சிறந்த தமிழறிஞர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களுடனும், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களுடனும் தொடர்பு கொண்டிருந்தவர். பல தமிழ் இலக்கிய நூல்களுக்கு ஆசிரியர். எதையும் கூர்ந்து ஆய்ந்து பார்க்கும் நுண்ணிய அறிவு படைத்தவர். இத்த இயல்புகளை எல்லாம் இந்நூலில் காட்டியிருக்கிறார்.

கூனும் சிறிய கோத்தாயும் என்பது இந்த நூலின் தலைப்பு. இந்தச் சொற்றொடர் கம்பனுடைய இராம காதையின் இரண்டாவது காண்டமாகிய அயோத்தியா காண்டத்தில் கடவுள் வாழ்த்து என்று கொடுக்கப்பட்டிருக்கும் பாடலில் காணப்பெறுகிறது. இது,

*வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த*
*மா பூதத்தின் வைப்பு எங்கும்*
*ஊனும் உயிரும் உணர்வும் போல்*
*உள்ளும் புறத்தும் உளன் என்ப*
*கூனும் சிறிய கோத்தாயும்*
*கொடுமை இழைப்ப, கோல் துறந்து*
*கானும் கடலும் கடந்து, இமையோர்*
*இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்*

என்பதில் மூன்றாவது அடியின் முற்பாதி என்பது தெளிவு.

ஆசிரியரும் நூலின் விரிந்த தலைப்பாக:

கம்பன் காவியம்

கூனும் சிறிய கோத்தாயும்

(மந்தரையும் கைகேயியும்)

(கம்பர், வான்மீகி, துளசிதாசர் - இவர்கள் படைப்புக்களின் ஒப்பாய்வு)

என்று கொடுத்திருக்கிறார்.

கம்பன் தன்னுடைய இராம காதையில் ஒவ்வொரு காண்டத்துக்கும் தனித்தனியாக ஒரு கடவுள் வாழ்த்துப் பாடியிருக்கிறான் என்பதைப் பற்றிக்கூட விவாதத்திற்கு இடம் உண்டு. இப்போது நமக்குக் கிடைக்கின்ற காப்பியப் பிரதிகளில், அயோத்தியா காண்டத்திலிருந்து தொடங்கி, ஒவ்வொரு காண்டத்துக்கும் ஒரு கடவுள் வாழ்த்துப் பாடல் இருப்பதைக் காண்கிறோம். அப்படியானால், 'பால காண்டத்துக்கும் ஒரு கடவுள் வாழ்த்துப் பாடல் இருக்க வேண்டுமே?' என்ற கேள்வி தர்க்க ரீதியாகத் தோன்றவே செய்யும். எனினும், பாலகாண்டம் பாயிரத்தோடுதான் தொடங்குகிறது. அதற்கு முன்னால் கடவுள் வாழ்த்து என்று எந்தப் பாடலும் இல்லை. சென்னைக் கம்பன் கழகப் பதிப்பின்படி, பாயிரம் என்ற தலைப்பின் கீழ் கடவுள் வணக்கம் என்ற சிறு தலைப்புக் கொடுத்து, 'உலகம் யாவையும்' என்று தொடங்கும் பாடலை உள்ளிட்ட மூன்று பாடல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அப்படியானால் இந்த மூன்று பாடல்களும் பால காண்டத்துக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் என்று ஆகுமோ? என்ற கேள்வி தோன்றத்தான் செய்யும். ஆனால், முதல் பாடலைத் தவிரப் பிற இரண்டும் சற்று மாறுபட்டிருப்பதன் காரணமாக, மூன்றையும் ஒன்றாகச் சேர்த்துக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் என்று சொல்வதன் பொருத்தம் பற்றி ஐயப்பாடு இருக்க முடியும். எது எப்படியிருப்பினும், பிற காண்டங்களுக்கு இருப்பது

போலப் பால காண்டத்துக்குப் பாயிரத்துக்கு முன் தனியாக ஒரு கடவுள் வாழ்த்துப் பாடல் இல்லை. இதிலிருந்து பால காண்டத்துக்குப் பாயிரம் ஒன்றே போதும் என்று கம்பன் நினைத்திருக்க வேண்டும். அப்படி நினைத்து விட்டுப் பிற காண்டங்களுக்குத் தனித்தனியாக ஒரு கடவுள் வாழ்த்துப் பாடல் வேண்டும் - அதுவும் அந்தந்தக் காண்டத்தில் வரும் செய்திகளைக் குறிக்கும் வகையில் அவை அமைந்திருக்க வேண்டும் என்று எண்ணியிருப்பானா? என்பவை சிந்திக்க வேண்டியவை

இனி, இந்நூலாசிரியரின் கருத்துக்கு வருவோம். ஆசிரியர் தம்முடைய முகவுரையில் கவிதைக்கும் வசனத்திற்கும் இடையிலுள்ள வேறுபாடுகளைக் குறிப்பிட்டு விட்டு, இந்த நூலில் அவருடைய நீண்ட தலைப்பு பறை சாற்றுவது போலக் கம்பனின் அயோத்தியா காண்டத்து நிகழ்ச்சிகளை விரிவாக விளக்கிக் காட்டுகிறார். குறிப்பாக இராம பட்டாபிஷேகத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்ட சூழ் நிலையையும், அப்படிச் செய்வதற்கான உள்நோக்கம் என்னவாகத்தான் இருக்க முடியும் என்பதையும் விளக்கு கிறார்.

அவருடைய வாதத்தின் அடிப்படை, தசரதன் கைகேயியைத் திருமணம் செய்து கொண்ட வேளையில், தனக்குப் பின் அரசு அவளுடைய வயிற்றில் பிறக்கும் பிள்ளைக்கே என்று கைகேயியின் தகப்பனிடம் வாக்குக் கொடுத்து விட்டான் என்றும், பின்னர் அந்த வாக்கைக் காப்பாற்றாமல், தன்னுடைய முதல் மகனாகிய இராமனுக்கு முடி சூட்ட விரும்பினான் என்றும், அதன் காரணமாகவே இராமனுடையவும் அவனுடைய சகோதரர்களுடையவும் திருமணத்திற்குப் பிறகு, அயோத்திக்குத் திரும்பி வந்து, பரதனை அவன் பாட்டன் காண விழைகிறான் என்று சொல்லிக் கேகய நாட்டுக்கு அவனை அனுப்பிவிட்டு, பரதனுக்கோ, சத்துருக்னனுக்கோ அறிவிக்காமல், கேகய நாட்டு மன்னனையோ, மிதிலை நாட்டு மன்னனையோ

அழைக்காமல், கோசல நாட்டு ஆட்சியின் கீழுள்ள அரசர்களை மாத்திரம் அழைத்து, அவசர அவசரமாக மறுநாளே இராமனுக்கு முடிசூட்ட ஏற்பாடு செய்தது, கைகேயியின் திருமணத்தின் போது கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் தன்னுடைய முதல் மகனும் பிரிய மகனுமான இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற எண்ணம்தான் என்றும், தன் முகத்தில் ஒரு நரை முடியைக் கண்டது இத்துணை அவசர முடிவுக்கும் செயலுக்கும் காரணமாக இருக்க முடியாது என்றும், மன்னன் மணவேளையில் கொடுத்த வாக்கை மணப்பெண்ணாக இருந்த கைகேயி அறியாமல் இருந்தபோதிலும், அவளுடைய அரண்மனையில் நீண்ட நாளாக இருந்து, கைகேயியின் நம்பிக்கைக்கு உரிய சேடியாக இருந்த மந்தரை அறிந்திருக்கக் கூடும் என்றும், ஆகவேதான் மந்தரை கைகேயியைத் தூண்டிவிட்டு, மன்னன் மணவேளையில் கொடுத்த வாக்கை நிறைவேற்றப் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்றும் வற்புறுத்தினாள் என்பது நூலாசிரியருடைய பரவலான கருத்து என்று கூறலாம்.

கம்பனுடைய காப்பியத்திலே 'கன்னியா சுல்கம்' என்று பொதுவாகச் சொல்லப்படும் இந்த வாதம் காணப்பெறாதபோதிலும், இங்கொன்றும் அங்கொன்றுமாக இடம் பெற்றிருக்கும் சொற்களின் அடிப்படையில் அதுதான் உண்மை நிலை என்பது ஆசிரியரின் கூற்று. இதற்குச் சான்றாக, இராமன் காட்டுக்குப் போகவும், பரதனுக்கு முடிசூட்டவும் கைகேயி கேட்ட வரங்களைத் தசரதன் கொடுத்துவிட்டான் என்று தெரிந்த இலக்குவன் போர்க்கோலம் பூண்டு ஆர்ப்பரிக்கும் பொழுது, அவன் முன் இராமன் தோன்றி,

*முன் கொற்ற மன்னன், "முடி கொள்க"*
*எனக் கொள்ள முண்டது*
*என் குற்றம் அன்றோ? இகல் மன்னவன்*
*குற்றம் யாதோ?* (கம்ப. நகர் நீங்கு, 128)

என்று அவனைச் சமாதானப்படுத்த முயன்றதை இந்த வாதத்துக்கு ஆதாரமாகக் கொள்வதாகவும் தெரிகிறது. விரிவஞ்சி ஓரிரு வாதங்களை மாத்திரம் குறிப்பாகக் காட்டுகிறேன். எனினும் கம்பனுடைய காப்பியம் சம்பந்தப்பட்ட மட்டில் இந்தக் கன்யா சுல்க வாதத்திற்குத் தெளிவான இடமில்லை.

முதலாவதாக, தசரதனிடத்துக் கைகேயி கேட்ட வரங்கள், சம்பராசுரனோடு தசரதன் போரிட்ட காலத்து, அவனுக்கு அவள் செய்த உதவிக்காக இரண்டு வரங்களைத் தான் கொடுப்பதாக வாக்களித்த வற்றையே, அப்போது அவை என்ன வரங்கள் என்று சொல்லாத வற்றை இப்போது பரதனுக்கு முடிசூட்டுவதும், இராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்வதும் என்று கேட்டுப் பெறுகிறாள். கன்னியா சுல்கம் கம்பனது காப்பியத்தில் இடம் பெற்றிருக்குமானால், பரதனுக்கு முடிசூட்டுவது சம்பராசுரனோடு தசரதன் செய்த போரில் தசரதன் கொடுப்பதாகச் சொன்ன வரங்களில் ஒன்றாக அது இருக்க முடியாது. எனினும் எல்லாக் காப்பியங்களும் சரித்திரமல்ல. எனவே, சரித்திரத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஆராய்வது போல, ஒரு காப்பியத்தில் இடம் பெறும் நிகழ்ச்சிகளை ஆராய முடியாது.

இந்த நிலையிலும் கம்பன் தன்னுடைய காப்பியத்தில் கன்னியா சுல்கத்தைப் பற்றிக் கண்டு கொள்ளவே இல்லை என்று கூறுவதற்கும் இடமிருக்கிறது. இராமனுக்கு முடிசூட்டுவது என்று எடுக்கப்பெற்ற முடிவு வள்ளுவர் முரசறைவதன் மூலம் மக்களுக்கு அறிவிக்கப் பெறுகிறது. மக்களும் மகிழ்ந்து நகரை அழகு செய்கின்றனர். அதனைக் கண்ட மந்தரை கோபம் கொள்கிறாள். அவள் நிலையைக் கவிச்சக்கரவர்த்தி,

*தோன்றிய கூனியும், துடிக்கும் நெஞ்சினாள்;*
*ஊன்றிய வெகுளியாள்; உளைக்கும் உள்ளத்தாள்;*
*கான்று எரி நயனத்தாள்; கதிக்கும் சொல்லினாள்;*
*மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்,*

*தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்*
*மண்டினாள் - வெகுளியின் மடித்த வாயினாள்,*
*பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்*
*உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்.*
(மந்தரை சூழ்ச்சி. 48, 49.)

என்று காட்டுகிறார். இந்த நிலையில் கைகேயியை நெருங்கிய மந்தரை, மன்னன் இராமனுக்கு முடிசூடச் செய்திருக்கும் முடிவைக் கூறுகிறாள். அதைக் கேட்டு மகிழ்ச்சியில் மூழ்கிய கைகேயி மந்தரைக்கு ஒரு மாலையைப் பரிசாக அளிக்கிறாள். கைகேயியினுடைய இந்தச் செயலைக் கூறுமிடத்து, ''மங்கை உள்ளமும் ஆற்றல் சால் கோசலை அறிவும் ஒத்தவால்'' என்று கம்பன் பாடுகிறான். மந்தரையோ மாலையை எடுத்தெறிந்துவிட்டு, பரதனுக்கு முடிசூடாமல் இராமனுக்கு முடிசூடத் தசரதன் செய்த முடிவைக் கண்டித்து, அது பொருத்தமற்றது என்று கூறுகிறாள். மந்தரையின் இந்தக் கூற்றினால் கைகேயி சினமுறுகிறாளே தவிரப் பரதனுக்கு முடிசூடாமல் இராமனுக்கு முடிசூட மன்னன் முடிவெடுத்தது முறையற்றது என்று எண்ணவும் இல்லை. மாறாகத் தலைமகனாகிய இராமனுக்கு முடிசூடாமல் பரதனுக்கு முடிசூடுவது முறையற்றது என்றே கூறுகிறாள். அவளுடைய இந்தக் கூற்றைக் கம்பனுடைய அடியிற் கண்ட மூன்று பாடல்களிலிருந்தும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

*'வெயில் முறைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்*
*உயிர் முதல் பொருள் திறம்பினும்,*
*உரை திறம்பாதோர்;*
*மயில் முறைக்குலத்து உரிமையை, மனு முதல் மரபை;*
*செயிர் உற, புலைச் சிந்தையால்,*
*என்சொனாய் - தீயோய்,*
*'பிறந்து இறந்து போய்ப் பெறுவதும்,*
*இழப்பதும், புகழே;*
*நிறம் திறம்பினும் நியாயமே திறம்பினும், நெறியின்*
*திறம் திறம்பினும், செய்தவம் திறம்பினும், செயிர்தீர்*
*மறம் திறம்பினும், வான்முறை திறம்புதல் வழக்கோ?'*

*போதி, என் எதிர்நின்று; நின் புன் பொறி நாவைச்*
*சேதியாது இதுபொறுத்தனன்; புறம் சிலர் அறியின்.*
*நீதி அல்லவும், நெறிமுறை அல்லவும், நினைந்தாய்*
*ஆதி. ஆதலின், அறிவு இலி அடங்குதி' என்றாள்.*

(மந்தரை சூழ்ச்சி. 72, 74, 75.)

இவற்றுள் முதற்பாடலில் இடம் பெற்றிருக்கும் மூன்றாம் அடிக்கு திரு. வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் உரையில் காணப்பெறும் குறிப்பாவது:

''மயின்முறைக் குலத்துரிமையை மனுமுதன் மரபை யென்பதற்கு. 'மயிலினது முறைமையைக் கொண்ட குலத் துரிமையையுடைய மனுமரபை' யென்று கூறி, மயில் முட்டையிட்டுப் பொரிக்கும்போது முதற் பார்ப்பின் கலா பத்துப் பீலி பொன்னிறமடைய, மற்றைப் பார்ப்புக்களின் பீலிகள் பொன்னிற மடையாதவாறு போல, முதற் குமா ரனே தனிமுடி புனைய, மற்றையோர் முடிபுனையா மையையுடையது மனுகுலம் என்று கருத்து விரிப்பர். மூத்த மயிற் குஞ்சுக்கே கலாபம் முளைக்குமென்று தணி கைப் புராணத்துக் களவுப் படலத்து,

*'பலாவம் பொழிலி னொருதா யுயிர்த்த பல மயிற்கும்*
*கலாவம் புனைந்த களிமயின் மூத்தது'*

என்று வந்துள்ளது. இத் தொடர்க்கு இன்னும் வெவ் வேறு வகையாகவும் உரைப்பர்.''

மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் எந்த இடத்திலும் கன்னியாசுல்கம் அடிப்படையில் பரதனுக்கு முடிசூட்டு மாறு தசரதனிடம் கேட்கும்படி கைகேயிக்கு மந்தரை ஆலோசனை சொல்லவே இல்லை. சம்பராசுரனோடு நடந்த போரில் தசரதன் அளித்த இரண்டு வரங்களை யும், இப்போது பரதனுக்கு முடியும், இராமனுக்குக் காடும் ஆகக் கேட்குமாறு கைகேயிக்கு ஆலோசனை சொல் கிறாள்.

இவற்றோடு இன்னொன்றையும் நோக்கலாம். திருவடிசூட்டு படலத்தில், தசரதன் இராமன் காட்டுக்குச் சென்றதைக் கேட்டவுடன் உயிர்நீத்து விட்டான் என்ற செய்தியைக் கேட்ட இராமன் புலம்புகிறான். இராமனின் புலம்பலாக,

*'நந்தா விளக்கு அனைய நாயகனே! நானிலத்தோர்*
*தந்தாய்! தனி அறத்தின் தாயே! தயா நிலையே!*
*எந்தாய் இகல் வேந்தர் ஏறே! இறந்தனையோ!*
*அந்தோ! இனி, வாய்மைக்கு ஆர் உளரே மற்று'*
*என்றான்.* (திருவடிசூட்டு. 60.)

என்று கம்பன் பாடுகிறான். கன்னியா சுல்கத்தை எடுத்துக் கொண்டு கம்பன் காவியத்தைப் படைத்திருப்பானேயானால், இராமன் வாயிலாக அவன் இங்கே, 'இனி வாய்மைக்கு ஆர் உளரே மற்று?' என்பது பொருத்தமற்றதாக மாத்திரம் அமையாமல், பொய்யுரையாகவும் ஆகிவிடும்.

சொல்லப் போனால் இராமாயணத்திலே, எத்தனையோ, நிகழ்ச்சிகளில் வேறுபட்ட இராமாயணங்கள் இருக்கின்றன. இந்நூலாசிரியர் இந்நூலுள் தாம் கொடுத்திருக்கும் விரிந்த தலைப்பின் படியே அயோத்தியா காண்டத்தின் நிகழ்ச்சிகளை வான்மீகி, கம்பன், துளசிதாசர் ஆகிய மூவரும் கூறியிருக்கிற முறைகளை ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டுக் காட்டுகிறார். அப்படிக் காட்டும் பொழுது சிலவற்றில் மூவரும் வேறுபடுகிறார்கள். வேறு சிலவற்றில் மூவரும் ஒன்றுபடுகிறார்கள். இன்னும் சிலவற்றில் இருவர் ஒருவிதமாகவும் மூன்றாமவர் வேறு விதமாகவும் கூறுகிறார்கள்.

இந்நூலாசிரியர் தமது முயற்சியால் இத்தகைய ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் எடுத்துக்காட்டி, எது சிறக்கிறது, எது சிறக்கவில்லை என்பதையும் குறிப்பிட்டு, அவற்றிலிருந்து நாம் என்னென்ன பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம் என்பதை வலியுறுத்துகிறார்.

நூலாசிரியர் தம்முடைய முகவுரையில் நூலின் கருப் பொருளைப் பின்வருமாறு எடுத்துரைக்கிறார்.

''அயோத்தியா காண்டத்தில் கூறப்படும் முக்கிய நிகழ்ச்சிகள் இந்நூலில் இடம் பெறுகின்றன. இராமன் தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றுவதன் பொருட்டு முடி துறந்து, சீதையுடனும் இலக்குவனுடனும் கானகம் செல்வதற்குக் கூனியும் கைகேயியும் காரணமாக இருந்து ஆற்றும் பணி கம்பன் காவியத்தை ஒட்டி விளக்கிக் கூறப்பட்டுள்ளது. கதை நிகழ்ச்சிகளைக் கூறிவரும் போதே கம்பரின் புலமைச் சிறப்பு, கற்பனைத் திறன், வருணனையழகு, சொல் நயம், பொருள் நயம் முதலியவை அவ்விடங்களில் வைத்து விளக்கப்படுகின்றன சிறந்த கவிதைகள் தக்க இடங்களில் மேற்கோளாக ஆளப்படுகின்றன. அவற்றின் அரும்பதவுரையும் அடிக்குறிப்பாகத் தரப் படுகிறது.

''இராமன் முடி துறந்து சீதையுடன் கானகம் செல்வதற்கும், அங்கு சீதை சிறை வைக்கப்பட்டு ஆற்றொணாத் துயரத்தை அனுபவிப்பதற்கும், இராமன் அவளை மீட்பதற்குப் பல துன்பங்களைத் தாங்க வேண்டியிருந்ததற்கும், மந்தரையும் கைகேயியும் காரணமாக இருந்தார்கள் என்பது பற்றி, இவ்விருவரும் தீய பாத்திரங்களாகக் கருதப்பட்டு வரும் செய்தியின் உண்மை நிலையும் இதன்கண் ஆராயப் படுகிறது. அவ்விரு பாத்திரங்களையும் முதனூலாசிரியராகிய வான்மீகியும், வழிநூலாசிரியர்களில் ஒருவராகிய துளசிதாசரும் சித்திரித்துள்ள முறையும் கம்பர் படைப்புடன் ஒப்பு நோக்குமுகத்தான் ஆராய்ந்து கம்பரின் மேதையும் விளக்கப்படுகிறது''.

இவ்வுரைகளால் நூலாசிரியருடைய பணியின் நோக்கத்தையும், அதனை நிறைவேற்ற அவர் கையாண்ட முறையையும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

இருந்து சிந்தித்து எழுதியும், சீர் செய்தும், கவிதை புனையத் தொடங்கியபோது, கவிதைகள் எளிமையை இழந்து, ஆழ்ந்த கருத்துக்களையும், கருத்துக்களின் செறிவையும், தொடர்ச்சியையும், கருத்துக்களுக்கேற்ற வடிவங்களையும் பெற்றன. தமிழில் சங்க இலக்கியங்கள் முதல் அண்மைக் காலத்தில் தோன்றிய கவிதை நூல்கள் வரை அனைத்தும் இவ்வாறு சிந்தித்துப் பலவகையான கருத்துக்களை உள்ளடக்கியும், யாப்பமைதியை நினைவிற் கொண்டும் பாடப்பட்டனவாம்.

கவிதையின் பண்பு — தெளிவு

கவிதையின் இலக்கணத்தை வரையறுத்தல் எளிதன்று என்பர் கவிமணியவர்கள்.

*தெள்ளத் தெளிந்த தமிழில் - உண்மை*
*தெரிந்துரைப்பது கவிதை*

என்று, கவிதை தெளிவாக இருக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். கவிதை தெளிவாக இருப்பதற்கு, அதிலுள்ள சொற்கள் எளிதில் பொருள் விளங்குவனவாயும், கருத்துக்கள் மயக்கத்திற்கு இடமின்றியும் இருத்தல் வேண்டும். கல்வியில் பெரிய கம்பருக்கும் இக்கருத்து உடன்பாடேயாம். கோதாவரியாற்றை வர்ணிக்கும் கீழ்வரும் பாடலில், ஆற்றின் தெளிந்த நீருக்கு அவர் ஆன்றோர் கவிதையை உவமை கூறுவதிலிருந்து இதனைத் தெரியலாம்.

*புவியினுக்கு அணிஆய் ஆன்ற*
*பொருள்தந்து புலத்திற்று ஆகி*
*அவி அகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவி*
*சவி உறத் தெளிந்து தண்ணென் (று)*
*ஒழுக்கமும் தழுவி, சான்றோர்*
*கவி எனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்.*[1]

(ஆரண்ய. சூர்ப்ப. பட. 1)

---

[1] புலம் - (1) அறிவு; (2) வயல் அகத்துறை - (1) அகப்பொருள் துறைகள்; (2) வெப்பம் தணியும் இடம்.

இக்கவிதையைக் கற்கும்போது ஓர் ஐயம் நமக்கு எழுகிறது. கவிதை தெளிவாக இருக்க வேண்டும் என்று கூறும் இக்கவிதை தன்னளவில் தெளிவாக இருக்கிறதா? இக்கேள்விக்கு இல்லை என்பதே விடையாக வரும். இக்கவிதை கோதாவரி ஆற்றுக்கும், சான்றோர் செய்யுளுக்கும் பொருந்தும்படி இருபொருள் பயக்கும் சிலேடைச் சொற்கள் அமையப் பாடப்பட்டுள்ளது. சிந்தித்து உணர வல்ல புலமையாளர்க்கே இதன் பொருள் புலனாகும்.

கம்பராமாயணப் பாடல்களை மூவகையாகப் பகுத்தல்

கம்பர் தெளிவு பற்றிக் கூறிய கருத்து, அவரது பாடல்களில் ஒரு பெரும் பகுதியுள் அமைந்துவரக் காணோம். அவர் நூலில் ஏதேனும் ஒரு படலத்தில் வரும் சில செய்யுள்களைத் தொடர்ச்சியாகக் கற்பவர்கள் இவ்வுண்மையை உணர்வர். அந்நூலை நன்கு கற்ற அறிஞர்கள் அதிலுள்ள கவிதைகளை முக்கூறாகப் பகுத்து, அவற்றைத் திராட்சாபாகம், கதலிபாகம், நாளிகேர (தேங்காய்) பாகம் என்று வகைப்படுத்தியுள்ளனர். திராட்சைப்பழம் வாயிலிட்டபோதே கரைந்து சுவையளிப்பது போல, முதற்கூற்றில் அடங்கும் கவிதைகள், கற்றவுடனேயே பொருள் புலப்பட்டு இன்பம் பயக்கின்றன. வாழைப்பழத்தின் தோலை உரித்துத் தின்னும் போது அது சுவையளித்தல் போல, இரண்டாவது பிரிவினுள் அடங்கும் கவிதைகள் சற்றுக் கூர்ந்து நோக்கிச் சிந்திக்கும்போது பொருள் புலனாகிக் கற்பவர்க்கு இன்பம் விளைக்கின்றன. தேங்காயை உடைத்து உள்ளிருக்கும் பருப்பை வெளியே எடுத்து, அதைப் பற்களால் கடித்து நன்றாக மெல்லும் போதே அதன் சுவை தெரிதல் போல, மூன்றாவது வகையைச் சார்ந்த கவிதைகள், பொருள் எளிதில் புலப்படுதலின்றி, சொற்களை அலைத்துக் கொண்டுகூட்டியும், திரிசொற்கள், சிலேடைச் சொற்கள், உள்ளுறைப்பொருள்

---

ஐந்திணை - (1) புணர்தல் முதலிய ஐவகை ஒழுக்கம்; (2) குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்கள். சவியுற - செவ்வையாக.

முதலியவற்றைத் தெளிதற்குப் பண்டிதர்களை நாடியும், பெருமுயற்சி யெடுத்தே அவற்றின் கருத்தையும், சுவையை யும் உணர வேண்டிய நிலையில் உள்ளன. பெரும்புலவர்க் கும் எளிதில் பொருள் விளங்காத கவிதைகளைக் 'கம்ப சூத்திரம்' என்று தனியாகக் குறிப்பிடுவர். கம்பராமா யணத்தை முழுமையாகக் கற்றவர்கள் இப்பாகுபாட்டின் மெய்ம்மையை உணர்வார்கள்.

இந்நாளில் கம்பரைக் கற்கும் முறை

அந்நூலைக் கற்கும் சாதாரண அறிஞர்கள் கதைத் தொடர்புடைய செய்யுட்களை மட்டுமே கற்று, ஏனைய வற்றை ஒதுக்கி விடுகிறார்கள். கம்பராமாயணச் சொற் பொழிவாளர்களும் எளிமையான பாடல்களைப் படித்துக் கதையை விளக்கிச் செல்வர். கற்பனைக் கருத்துக்கள், இயற்கை வருணனைகள் இவற்றைக் கொண்ட நயமிக்க பாடல்கள் தீண்டப்படாமலே உள்ளன. இக்குறையை அகற்றுவதற்கு இருவகையான முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. ஒன்று; நூல் முழுவதற்கும் உரை எழுதுவது. இரண்டு; கடினமான செய்யுள்களை அகற்றிவிட்டு கதைத் தொடர்பு சிதையாமல் எளிமையும், பொருள் தெளிவு முடைய செய்யுள்களைத் தொகுத்து, சுருக்க நூலாக வெளியிடுவது. உரை நூல்களுள் வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் வெளியிட்ட நூலே முழுமையாகவும் எல்லா விளக்கங்களையும் கொண்டும் சிறப்பாக அமைந் துள்ளது. சுருக்க நூல்களுள் வெ. ப. சுப்பிரமணிய முதலி யார் 'கம்பராமாயண சாரம்' என்ற பெயரால், கொண்டு கூட்டு, பொருள், விளக்கவுரை, இலக்கணக்குறிப்பு, மேற் கோள் இவற்றுடன் வெளியிட்ட நூல் போற்றுதற்குரிய தாகும். இவ்விரு ஆசிரியர்களுக்கும் தமிழுலகம் பெரிதும் கடப்பாடுடையது

கற்பதற்கு ஆர்வத்தைத் தூண்டும் முயற்சி

இவ்விரு நூல்கள் வெளிவந்த பின்பும் அவற்றைக் கற்றுப் பயன் பெறுவார் மிக அரியராகவே உள்ளனர். கம்பரைக் கற்க வேண்டும் என்ற ஆர்வம் மக்களுக்கு

இருக்கத்தான் செய்கிறது. கம்பர் பெயரால் பல ஊர்களில் கழகங்கள் தோன்றியிருப்பதும், அங்கு நடைபெறும் விழாக்களிலும், இராமாயணச் சொற்பொழிவு நிகழும் பிற இடங்களிலும் மக்கள் திரளாக வந்து கலந்து கொள்வதும் இதற்குச் சான்றாகும். ஆனால் வாழ்க்கைப் போராட்டமும், குடும்பப் பொறுப்பும் அவர்களுக்குப் போதிய ஒய்வை அளிப்பதில்லை. கிடைக்கிற சிறிது நேர ஓய்வையும் வானொலியும், தொலைக்காட்சியும், படக் காட்சியும், கவர்ந்து கொள்கின்றன. இந்த நிலையில் ஆயிரக்கணக்கான பாடல்களைக் கொண்ட கம்பராமாயணக் காண்டங்கள் ஒவ்வொன்றையும் அவர்கள் கற்பது எங்கே? ஆனால், அவற்றில் கூறப்படும் செய்திகளைப் பொருத்தமான சில தலைப்புக்களின் கீழ், மூலப்பாடல்களை அடியொற்றிக் கதையை விளக்கிக் கூறியும், அவற்றில் கம்பர் அமைத்து வைத்தவருணனைகள், கற்பனைகள், நயங்கள் இவற்றை விளக்கியும், முக்கியமான பாடல்களை மேற்கோளாக எடுத்தாண்டும், எளிய உரைநடை நூலாக அளிப்பதானால், அவர்கள் கம்பரிடம் செல்வதற்குப் பதிலாகக் கம்பரே அவர்களிடம் செல்ல வகைசெய்வதானால் எழுத்தறிவுடைய பாமரமக்களும் அந்நூலைச் சில மணி நேரத்தில் கற்று, அதன் வாயிலாகக் காவியக் கதையையும், கம்பரின் புலமையையும், கவிதை நயங்களையும் தெரிந்து இன்பத்தில் திளைப்பர். மூல நூலைக் கற்க வேண்டும் என்ற ஆர்வம் அவர்களுக்குப் பின்னர் எழுதலும் கூடும்.

நூலின் தலைப்பும் நுவலும் பொருளும்

இந்நோக்கத்தை முன்வைத்தே, ‘கூனும் சிறிய கோத்தாயும்’ என்னும் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நூலின் தலைப்பு அயோத்தியா காண்டத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்தாகக் கம்பர் பாடிய பின்வரும் பாடலில் அமைந்த சொற்றொடராகும்.

*வான்நின்று இழிந்து வரம்பு இகந்த மா பூதத்தின்*
*வைப்பு எங்கும்*
*ஊனும் உயிரும் உணர்வும் போல்*
*உள்ளும் புறனும் உளன் என்ப*

*கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை இழைப்பக்*
*கோல் துறந்து*
*கானும் கடலும் கடந்து இமையோர்*
*இடுக்கண் தீர்த்த கழல்வேந்தே.*[1]

இப்பாடலின் சிறப்பு, இராமாயணக் கதை நிகழ்ச்சிகள் இதன்கண் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளதாகும்.

அயோத்தியா காண்டத்தில் கூறப்படும் முக்கிய நிகழ்ச்சிகள் இந்நூலில் இடம்பெறுகின்றன. இராமன் தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றுவதன் பொருட்டு, முடிதுறந்து, சீதையுடனும் இலக்குவனுடனும் கானகம் செல்வதற்குக் கூனியும், கைகேயியும் காரணமாக இருந்து ஆற்றும் பணி கம்பன் காவியத்தை ஒட்டி விளக்கிக் கூறப்பட்டுள்ளது. கதை நிகழ்ச்சிகளைக் கூறிவரும் போதே கம்பரின் புலமைச் சிறப்பு, கற்பனைத்திறன், வருணனையழகு, சொல்நயம், பொருள்நயம் முதலியன அவ்வவ் இடங்களில் வைத்து விளக்கப்படுகின்றன. சிறந்த கவிதைகள் தக்க இடங்களில் மேற்கோளாக ஆளப்படுகின்றன. அவற்றின் அரும்பதவுரையும் அடிக் குறிப்பாகத் தரப்படுகிறது.

இராமன் முடிதுறந்து சீதையுடன் கானகம் செல்வதற்கும், அங்குச் சீதை இராவணனால் சிறைவைக்கப் பட்டு ஆற்றொணாத் துயரத்தை அனுபவிப்பதற்கும், இராமனும் அவளை மீட்பதற்குப் பல துன்பங்களைத் தாங்கவேண்டியிருந்ததற்கும், மந்தரையும் கைகேயியும் காரணமாக இருந்தார்கள் என்பதுபற்றி, இவ்விருவரும் தீய பாத்திரங்களாகக் கருதப்பட்டுவரும் செய்தியின் உண்மை நிலையும் இதன்கண் ஆராயப்படுகிறது. அவ் விரு பாத்திரங்களையும் முதனூலாசிரியராகிய வான்மீகி யும், வழிநூலாசிரியர்களில் ஒருவராகிய துளசிதாசரும் சித்திரித்துள்ள முறையும், கம்பர் படைப்புடன் ஒப்பு

---

[1] வான்-ஆகாயம். கூன்-மந்தரை. சிறிய கோத்தாய்-கைகேயி. இமையோர்-தேவர்.

நோக்கு முகத்தான் ஆராய்ந்து கம்பரின் மேதையும் விளக்கப்படுகிறது.

நினைவு வெளியீடு

கல்லூரியில் என்னுடன் கற்ற அருமைத் தோழரும், தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய மும்மொழிகளிலும் நிரம்பிய புலமையுடையவர்களும், உபநிடதங்கள் பல வற்றின் கருத்துக்களைத் தமிழில் எளிய நாடக நூல்க ளாக எழுதியும், பாகவத சப்தாகச் சொற்பொழிவுகளை பல இடங்களில் ஆற்றியும் சிறந்த சமயத்தொண்டு புரிந்தவர்களும், அண்மையில் இறைவனடி சேர்ந்தவர் களுமான தவத்திரு ஞானச்சுடர் ஸ்ரீபிரம்மானந்த தீர்த்த சுவாமிகளின் (ஸ்ரீ உத்கீதாஸ்ரமம், கிருஷ்ணாபுரம் தென்காசி) நினைவாக இந்நூலை வெளியிடுவதில் ஆன்ம திருப்தி அடைகிறேன்.

நன்றியுரை

எனது வேண்டுகோளை ஏற்று, இந்நூலுக்கு அணிந் துரை நல்கியவர்கள் முன்னாள் சென்னை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியும், தமிழ்நூற் பயிற்சி மிக வுடைய பெருங்கல்வியாளரும், சாதி மத எல்லை இகந்த சான்றோருமான நீதிபதி மு. மு. இஸ்மாயீல் அவர்களா வர். அவர்கள் கம்பன் காவியத்தில் தாம் கொண்ட ஈடு பாட்டால், அக் காவியத்தின் சிறப்பை, மக்களிடையே பரப்பும் விழுமிய நோக்குடன், சென்னைக் கம்பன் கழ கத்தை நிறுவி, அதன் தலைவராக அமர்ந்து, கழக நிகழ்ச்சிகளிலும், பிற இடங்களில் நடைபெறும் கம்பன் விழா முதலிய நிகழ்ச்சிகளிலும் கலந்து, பொருள்செறிந்த சொற்பெருக்காற்றி மக்களைக் கவர்ந்து வருகிறார்கள். கம்பராமாயண மூலபாடப் பதிப்பை 1824 பக்கங்களில் இரு தொகுதிகளாக அழகுறப் பதிப்பித்து, அந்நூலைத் தமிழ் மக்கள் கைகளில் தவழச் செய்துள்ளார்கள். கம்ப னில் தாம் ஆராய்ந்துணர்ந்த அரிய கருத்துக்களை,

'கம்பன் கண்ட இராமன்', 'கவிச்சக்கரவர்த்தியும் கவியரசரும்' 'மும்மடங்கு பொலிந்தன', 'கம்பன் கண்ட சமரசம்', 'இலக்கிய மலர்கள்' முதலிய தரமான நூல்களின் வாயிலாகத் தமிழுலகுக்கு வழங்கி, தமிழ் மக்களின் புகழ்ச்சிக்கும் போற்றுதலுக்கும் ஆளாகியுள்ளார்கள். இப்பெரியார் அணிந்துரை தந்து உதவியமைக்காக எனது கடப்பாட்டை நன்றியுடன் அறிவித்துக் கொள்ளுகிறேன்.

முன்பு வெளிவந்த எனது நூல்களைப் போலவே இந்நூலின் தட்டச்சுப் படியையும், தமது இலக்கியப் பணி, குடும்பப் பொறுப்பு இவற்றினிடையிலும் சிரமத்தை எண்ணாமல் பார்வையிட்டுத் தேவையான திருத்தங்களைச் செய்து உதவிய உழுவல் அன்பர் பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களுக்கு எனது நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன்.

நூலைக் குறுகிய காலத்தில் செவ்விய முறையில் அச்சிட்டுத்தந்த அசிசி அச்சகப் பணியாள அன்பர்களுக்கும், உதவிமானேஜர் திரு. ஜி. செலஸ்ற்றின் பி. ஏ. அவர்களுக்கும் எனது அன்பு கலந்த நன்றி உரியதாகும்.

இராமலிங்க விலாஸ்,
வணிகர் தெரு, வடசேரி,
நாகர்கோவில்.

ஆர். வீரபத்திரன்

# பொருளடக்கம்


முகவுரை

| அதிகாரம் | | பக்கம் |
|---|---|---|
| 1 | பாரத நாட்டு இதிகாசங்கள் | 1 |
| 2 | இராமனுக்கு முடிசூட்டும் முயற்சி | 6 |
| 3 | மந்தரையும் கைகேயியும் | 15 |
| 4 | மந்தரை கைகேயியின் மனத்தைத் திரித்தல் | 31 |
| 5 | கைகேயியின் சூழ்ச்சி | 44 |
| 6 | தசரதரின் துயரம் | 67 |
| 7 | இராமன் கானகம் செல்லுதல் | 86 |
| 8 | தசரதர் அமரராதல் | 102 |
| 9 | இராமன் — குகன் தோழமை | 109 |
| 10 | அயோத்தி வந்த பரதனின் நிலைமை | 126 |
| 11 | பரதன் பாதுகை பெறுதல் | 141 |
| 12 | கைகேயியும் பரதனும் களங்கம் அகலப்பெறுதல் | 162 |
| 13 | மந்தரையும் கைகேயியும் காவியத்தில் ஆற்றும் பங்கு | 168 |
| 14 | மந்தரையும் கைகேயியும் மாசுற்றவரா? | 185 |
| 15 | ஒப்பாய்வு (முற்பகுதி) | 204 |
| 16 | ஒப்பாய்வு (பிற்பகுதி) | 238 |

கம்பன் காவியம்

# கூனும் சிறிய கோத்தாயும்

(மந்தரையும் கைகேயியும்)

## 1. பாரதநாட்டு இதிகாசங்கள்

### ஒரு நாட்டிற்குப் புகழ் தருவன இலக்கியங்கள்

ஒரு நாட்டின் புகழ், அதில் தோன்றிய சிறப்பு மிக்க இலக்கியங்களைச் சார்ந்துள்ளதென்பதை யாவரும் அறிவர். திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளும், கம்பர் இயற்றிய இராமாயணமும் தமிழ் மொழிக்கும் தமிழ் நாட்டுக்கும் பெருமை சேர்ப்பதை இதற்குச் சான்றாகக் கூறலாம். இதைப்போலவே, ஹோமர் எழுதிய 'இலியத், ஒடிஸி' என்னும் நூல்கள் கிரேக்க நாட்டிற்கும், ஷேக்ஸ்பியரின் நாடகங்களும், மில்டனின் 'சொர்க்க நீக்கம்', 'சொர்க்க மீட்பு' என்னும் நூல்களும் இங்கிலாந்து தேசத்திற்கும் சிறப்பை அளிக்கின்றன. 'இங்கிலாந்து தேசம், தான் கைப்பற்றி ஆளும் சாம்ராஜ்யத்தை ஒருக்கால் கைவிட முன்வந்தாலும், தான் படைத்துள்ள அரிய இலக்கியச் செல்வங்களை இழக்க ஒரு நாளும் இசையாது' என்று ஓர் ஆங்கில அறிஞன் கூறியது, இலக்கியங்களால் ஒரு நாட்டிற்கு வரும் பெருமையை அரண் செய்கிறது.

### இராமாயணமும் மகாபாரதமும்

நமது பாரதநாடு மிகப் பழமையாகவே உயர்தர இலக்கியங்களைப் படைத்த சிறப்புக்குரியதாகும் இராமாயணம், மகாபாரதம் என்னும் இரு அரிய நூல்களும் நமது நாட்டின் வடபாகத்தில் வழங்கிய சமஸ்கிருத மொழியில் தோன்றியனவாகும். அந்நூல்கள் 'இதிகாசம்' என்னும் சமய இலக்கிய வகையைச் சார்ந்தவை. அவற்றுள், இராமாயணத்தை வான்மீகி முனிவரும், மாகாபார

தத்தை முனிவர்களில் சிறந்த வியாசபகவானும் இயற்றி யுள்ளனர். அவற்றுள், இராமாயணம், இராமன் தன் மனைவியைக் கவர்ந்து சிறைவைத்த இராவணன் என்னும் அரக்கனைக் கொன்ற வரலாற்றையும், மகாபாரதம் ஒரே குடும்பத்தைச் சார்ந்த பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்குமிடையே நடந்த போர் நிகழ்ச்சியையும் பாடுகின்றன. பகவத்கீதை என்னும் ஒப்புயர்வற்ற ஞானக் கருவூலம் பாரத இதிகாசத்தின் நடுவில் அமைந்திருப்பது அதன் சிறப்புக்கு முக்கிய காரணம் ஆகும்.

உலகிலேயே ஆதியில் தோன்றிய நூல்கள் என்னும் பெருமைக்குரியனவும், வடமொழியில் இயன்றனவுமான வேத உபநிடதங்களில் கூறப்பட்டுள்ள அரிய ஆன்மிகத் தத்துவ உண்மைகளை எல்லோரும் எளிதில் அறியும்படி கதை வடிவில் கூறுவனவே அவ்விரு இதிகாசங்களும். அவை வடநாட்டில் வடமொழியில் தோன்றியிருப்பினும் இந்திய நாடு முழுவதற்கும் பொதுவாக உரிய நூல்களாகவே போற்றப்படுகின்றன. அவ்விரு இதிகாசங்களையும் முதனூலாகக் கொண்டு, இந்திய மொழிகள் அனைத்திலும் வழி நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவை அம்மொழிகளைப் பயில்கின்ற இந்து சமயத்தவர் அனைவராலும் பக்தியுடன் ஓதப்படுகின்றன.

இதிகாசங்களைக் கற்பதால் உண்டாகும் பயன்கள்

இவ் இதிகாசங்கள் இக்காலத்தில் வாழ்கிற நம்மை, அவை தோன்றிய தொன்மைக் காலத்தில் வாழ்ந்த, பண்பாடு நாகரிகங்களில் சிறந்த நமது முதாதையர்களுடன் தொடர்புபடுத்தி, அவர்களது ஆன்மிகச் சிந்தனைகள், வாழ்வின் இலட்சியங்கள், அந்த இலட்சியங்களை அடைவதற்கு அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள், அம்முயற்சியில் அவர்கள் சந்தித்த வெற்றி தோல்விகள், தோல்விகளை அவர்கள் தம் அறிவாலும், விடாமுயற்சியாலும் முறியடித்து வெற்றி கண்ட செய்திகள் போன்ற பல அரிய உண்மைகளை நாம் அறிந்து, அவ் அறிவால் நமது

வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்வதற்கு உதவுகின்றன. மேலும், அவ் இதிகாசங்கள் தாம் தோன்றிய பழங்காலம் முதல் இன்று வரையிலும் வாழ்ந்த, வாழ்கிற, எண்ணி லடங்கா இந்திய மக்கள் அனைவருக்கும், அவர்கள் தமது வாழ்வில் இன்னல்களுக்கும் சோதனைகளுக்கும் ஆளாக நேர்ந்த வேளைகளிலெல்லாம் கைகொடுத்துத் தளர்ச்சியைப் போக்கி, ஊக்கமளித்து வெற்றிகாண உதவி வந்துள்ளன. இக்காலத்தில் வாழ்கிற நாம் எப்பொழு தேனும் நமது அறியாமையாலோ, சோர்வாலோ தவறி ழைக்க நேர்ந்தால், அதிலிருந்து உய்ந்து நன்னெறிக் கண் செல்வதற்கு இவ் இதிகாச மாந்தர்கள் நமக்கு வழி காட்டிகளாக உள்ளனர். வாழ்க்கையில் ஏற்படக்கூடிய இடையூறுகளை முன்னெச்சரிக்கையுடன் தடுத்து நம் மைத் தற்காத்துக் கொள்வதற்கும் அவர்கள் தூண்டு கோலாக உதவுகின்றனர்.

கன்னியாகுமரி முதல் காஷ்மீரம் வரையிலும் பரந் துள்ள நமது பாரதநாட்டில், சாதி, மதம், இனம், மொழி, பழக்கவழக்கங்கள் இவற்றால் மக்களிடையே மேற்போக் காகத் தோன்றும் வேற்றுமைகளைப்போக்கி, உணர்வால், பண்பால், ஒழுக்கத்தால், ஆன்மிகச் சிந்தனையால் அவர்களிடையே ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும், அவற்றுடன் நாட்டின் தனித்தன்மையையும் இவ் இதி காசங்களே பேணி வந்துள்ளன என்பது பாராட்டுக்குரிய செய்தியாகும். இவ் இதிகாசங்களை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அழியாமல் பாதுகாத்து வந்த நமது முன்னோர்களுக்கு நாம் என்றென்றும் கடப்பாடுடையவர் களாவோம்.

### இதிகாசங்களில் அதிமானிடச் செய்திகள்

இதிகாசங்கள் கூறும் பொருள் பற்றிய செய்தி ஒன்றையும் நாம் இங்குச் சிந்தித்தல் தகும். இதிகாசங் களில் அதிமானிடத் தன்மையுடைய செய்திகள் இடம் பெறுவதைக் காண்கின்றோம். உதாரணமாக, தசரதர்

அறுபதினாயிரம் ஆண்டுகள் உயிர் வாழ்தல், அனுமன் கடலைத் தாவுதல், சஞ்சீவி மலையைத் தூக்கி வருதல், பீமன் மரத்தைப் பிடுங்குதல் என்பவற்றைக் கூறலாம். இவற்றால் நமது இதிகாசங்களுக்குக் குறை நேர்வதாக எண்ணத் தேவையில்லை. புராண அமைப்புடைய இத் தகைய செய்திகள் உலகிலுள்ள இதிகாசங்கள் அனைத் திலும் காணப்படுவது மட்டுமன்றி, அவை இதிகாசத்தின் இன்றியமையாத ஓர் அங்கமாகவும் கருதப்படுகின்றன, சமய இலக்கியங்களில், புராணச்செய்திகள் (mythology). சடங்குகள் (rituals), தத்துவங்கள் (philosophy) ஆகிய மூன்றும் இடம்பெறுவதே பெருவழக்காகும். பாமர மக்கள் முதல் ஞானியர்கள் வரையுள்ள பல திறத்து மக்களுக்கும் பயனளிப்பதற்குச் சமயம் இம் மூன்று அம்சங்களையும் பெற்றிருத்தல் இன்றியமையாததாகும். இம் மூன்றின் அடியாகவே ஓர் இனத்தவரின் சமய ஞானமும், ஆன்மிக வளர்ச்சியும் அளவிடப்படுகின்றன.

நமது நாட்டுச் சமய ஞானத்தின் உயர்வை மேக்ஸ் முல்லர் முதலிய மேனாட்டு அறிஞர்கள் எழுதிய நூல் களின் வாயிலாகவும், சுவாமி விவேகானந்தர், பரமஹம்ச யோகானந்தர், சுவாமி சின்மயானந்தர், சாயிபாபா, கிருபானந்தவாரியார் போன்ற சமய ஞானியரின் சொற் பொழிவுகள், நூல்கள் -- இவற்றின் வாயிலாகவும் உலகம் அறிந்து போற்றிவருவது நாம் பெருமைப்படுவதற்குரிய செய்தியாகும்.

### ஆதியில் நிகழ்ந்தது இராமாயண வரலாறே

இதிகாச வரலாறுகளில் ஆதியில் நிகழ்ந்தது இராமா யண வரலாறு என்றும், பாரத வரலாறு அதன் பின்னர் நிகழ்ந்ததே என்றும், முன்னது திரேதா யுகத்திலும், பின்னது துவாபர யுகத்திலும் நிகழ்ந்தன என்றும் கூறுவர். இராமாயணத்தை முதலில் பாடியவர் வான்மீகி முனிவராவர். வான்மீகி முனிவர் இராமன் காலத்தில் வாழ்ந்து, அவனால் உலக அபவாதத்துக்கு அஞ்சிக்

கைவிடப்பட்ட சீதைக்கும், அவளுக்குப் பிறந்த மைந்தர்களுக்கும் உறுதுணையாக இருந்தவராவர். அவர் இராமனது வீரச்செயல்களை நேரில் அறிந்தவராகையால் அவனை ஒரு சிறந்த போர்வீரன் என்ற கருத்திலேயே தமது நூலில் பாடியிருக்கிறார். ஆனால், சிற்சில இடங்களில் மனித ஆற்றலுக்கு மேம்பட்டவனாகவும் அவனைக் குறிப்பிட்டிருக்கிறார்.

### இராமாயணச் செய்திகளின் பழமை

இராமனது கதையை ஆதியில் பிரமன் நாரதருக்குக் கூற, அவர் அதை வான்மீகிக்கு அறிவிக்க, வான்மீகி அச்செய்தியை இராமாயணமாகப் பாடினார் என்றோர் செய்தி கூறப்படுகிறது. இக்கருத்தை ஆதரித்தாற் போல இந்நாளைய ஆராய்ச்சியாளர்களும் வான்மீகி தமது இராமாயணத்தைப் பாடுவதற்கு முன்பே, இராமனைக் குறித்த செய்திகள் பல வேறுபாடுகளுடன் நாட்டின் பற்பல பாகங்களிலும் வழங்கி வந்தன என்றும், வான்மீகி முனிவர் அச்செய்திகளைத் தொகுத்து அவற்றிற்கு ஒரு வடிவம் கொடுத்துத் தமது இராமாயணத்தை இயற்றினார் என்றும் கூறுகின்றனர். அவர்கள், இராமாயண வரலாறு பல வேறுபாடுகளுடன் வழங்கி வந்ததென்பதற்குச் சமண பௌத்த சமயத்தார்க்குரிய இராமாயணக் கதைகள் வான்மீகத்திலிருந்து வேறுபட்டிருப்பதைச் சான்று காட்டுவர். இச் செய்திகள் யாவும் இராமாயண வரலாறு வான்மீகத்துக்கும் முற்பட்ட பழமையுடையதென்பதை விளக்குகின்றன.

இராமாயண வரலாற்றைப் போலவே பாரத வரலாறும், நாட்டின் பல பாகங்களில் வழங்கி வந்த கதைகளைத் தொகுத்து வியாசர் இயற்றியதே என்று கூறுவாரும் உளர். வியாசர் என்ற சொல்லின் பொருளாகிய 'தொகுத்தவர்' என்பது இக்கருத்தை ஆதரிக்கிறது என்பர். உயின்டர்நீட்ஸ் போன்ற மேனாட்டு அறிஞர்களின் கருத்தும் இதுவாகும்.

# 2. இராமனுக்கு முடிசூட்டும் முயற்சி

## கம்பராமாயணத்தின் சிறப்பு

வான்மீகியைப் பின்பற்றி இந்திய மொழிகளில் இயற்றப்பட்ட இராமாயண நூல்கள் பலவற்றுள்ளும், தமிழில் கம்பர் பாடிய நூலே மிக்க சிறப்புடையது என்பர். 'இராமாவதாரம்' என்ற பெயரால் அவர் பாடிய நூல், கதையமைப்பு, காவிய நயம், கற்பனை வளம், வருணனைச் சிறப்பு, பாத்திரப் படைப்பு முதலிய எல்லா அம்சங்களிலும் இணையற்று விளங்குகிறது என்பது, அதனை மூல நூலுடனும், பிற இந்திய மொழி இராமாயணங்களுடனும் ஒப்பாய்வு செய்த வ. வெ. சு. அய்யர் போன்ற பன்மொழிப் புலவர்களின் துணிபாகும். அத்தகைய சிறந்த நூலை இயற்றியமையால் கம்பர், 'கவிச்சக்கரவர்த்தி' என்ற விருதுப்பெயருடன் அழைக்கப்படுகிறார். கம்பர் சூட்டிய 'இராமாவதாரம்' என்ற பெயர் இந்நாளில் வழக்கிழந்து, முதனூலாகிய இராமாயணம் என்ற பெயராலேயே அந்நூல் வழங்கப்பட்டு வருகிறது.

கம்பருக்கு முன்பே இராமனது வரலாறு பற்றிய நூல்கள் தமிழில் சில இருந்தன என்பது, யாப்பருங்கலம், வீரசோழியம் ஆகிய நூல்களின் உரைகளில் எடுத்தாளப்படும் மேற்கோட் செய்யுள்களிலிருந்து தெரியவருகிறது. ஆனால், அந்நூல்கள் எதுவும் முழுமையாக நமக்குக் கிடைப்பதில்லை.

## திருமாலின் அவதாரமூர்த்தி இராமன்

வான்மீகி, இராமனை ஒரு வீரபுருஷன் என்ற கருத்தில் பாடியதற்குமாறாகக் கம்பர் அவனைத் திருமாலின் அவதார மூர்த்தியாகவே சிறப்பித்துப் போற்றுகிறார். ஆழ்வாராதிகள் அவருக்கு முன்பே நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் போன்ற நூல்களில் அவ்வாறு பாடியுள்ளதும், அவருக்கு இயல்பிலேயே இராமன் மீதிருந்த பக்தியும்

அதன் காரணங்களாகும் அக் கருத்தைக் கம்பர், மனித ஆற்றலை விஞ்சிய இராமனது செயல்களின் வாயிலாகவும், காவிய பாத்திரங்கள் அவனது அவதார மகிமையைப் போற்றிப் புகழ்வதன் வாயிலாகவும் தமது நூலில் விளக்கு கிறார். கம்பர் திருமாலே இராமனாக அவதரித்துள்ளார் என்ற கருத்தை வாசகர்களுக்குக் கதை நிகழ்ச்சியின் தொடக்கத்திலேயே உணர்த்திவிட்டுப் பின்னர் அத னையே நூல் நெடுகலும், வாய்ப்பு நேரும்போதெல்லாம் வலியுறுத்துகிறார். அக்கருத்தை முதலில் உணர்த்துவ தற்கு அவர் அமைத்துக் கொண்ட சந்தர்ப்பம் வருமாறு:

நூலின் தொடக்கத்தில் காணும் குறிப்பு

தசரதர் தமக்குப் பின் நாட்டை ஆள்வதற்குப் புதல்வன் இல்லையே என்று வசிட்டமுனிவரிடம் வருந்திக் கூறுகிறார். அப்போது முக்காலத்தையும் உணரவல்ல அம்முனிவருக்கு, முன்பு திருமால் தேவர்களுக்கு வரம் அளித்த செய்தி நினைவுக்கு வருகிறது. அச் செய்தியா வது: இராவணன் முதலிய அரக்கர்களின் தொல்லையால் வருந்திய தேவர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிடு கிறார்கள். அவர் தாம் வரம் கொடுத்த அரக்கர்களைத் தாமே அழிப்பது முறையன்று என்று கூறி, தேவர்களைப் பிரமனிடம் அழைத்துச் செல்கிறார். பிரமன் அரக்கர் களைக் கொல்வது தம்மால் இயலாதென்று கூறிவிட, பின்பு சிவபெருமானும் பிரமனும் சேர்ந்து திருமாலைத் தியானிக்கிறார்கள். உடனே திருமால் அங்கு எழுந்தருளு கிறார். தேவர்கள் அவரிடம் அரக்கர்களால் தாம் படும் அல்லல்களை எடுத்துக்கூறி, அவற்றிலிருந்து தம்மைக் காப்பாற்றுமாறு விண்ணப்பிக்கிறார்கள். திருமால் அதற்கு உடன்பட்டு, தாம் தமது பரிவாரங்களுடன் உலகில் அவ தரித்து, அவர்களது துன்பத்தைப் போக்குவதாக வர மருளியபின், தேவர்களை வானரங்களாகப் பூமியில் போய்ப் பிறக்குமாறு கூறுகிறார். இச்செய்தி வான்மீகத்தில் கூறப்படவில்லை என்பது குறிப்பிடத்தகும்.

## இராமாவதாரம்

உலகில் அதர்மம் தலைதூக்கும் போதெல்லாம் அதை ஒடுக்கித் தருமத்தை நிலைநிறுத்துவதற்குத் தாம் அவதாரம் செய்வதாகக் கண்ணன் கீதையில் (4:7) கூறியபடி, இராவணவதத்தின் பொருட்டுத் தாம் உலகில் அவதரிப்பதாகத் தேவர்களுக்கு வரம் அளித்த திருமால் அதற்கேற்ற இடத்தையும், காலத்தையும் தேர்ந்து, அயோத்தியை ஆளும் சூரியகுலப் பேரரசராகிய தசரதரின் மைந்தராக, அம்மன்னர் இருசியசிருங்க முனிவரைக் கொண்டு இயற்றிய யாகங்களின் பயனாக அவதாரம் செய்கிறார். அவருடைய படுக்கையாகிய ஆதிசேடன் இலக்குவனாகவும், சக்கரம் சங்கு ஆகிய ஆயுதங்கள் முறையே பரத சத்துருக்னர்களாகவும் பிறப்பெடுக்கின்றன. திருமாலின் தேவியர்களில் ஒருவரான பூமகள், மிதிலையில் ஜனக மகாராஜாவின் யாக பூமியில், உழவுசாலில் பெண் மகளாக அவதரிக்கிறாள்.

## இராமன்-சீதை திருமணம்

சில ஆண்டுகள் கழிகின்றன. இராமலக்குமணர்கள் அரசர்களுக்குரிய வில்வித்தை முதலியவற்றைக் கற்று அக் கலைகளில் தேர்ச்சி பெறுகிறார்கள். சீதையும் வளர்ந்து மங்கைப் பருவத்தை அடைந்துள்ளாள். இந் நிலையில் விசுவாமித்திர முனிவர் ஒருநாள் தசரதரிடம் வந்து, அவர் அனுமதியுடன் இராமலக்குமணர்களைக் கானகத்திற்கு அழைத்துச் சென்று, தாடகை என்ற அரக்கியையும், அவள் மகன் சுபாகுவையும் இராமனைக் கொண்டு கொல்வித்து, அவனது அவதார நோக்கத்திற்குக் கால்கோள் செய்விக்கிறார். அவர் இராமனுக்குப் பசிதாகங்களைத் தாங்கவல்ல இரு மந்திரங்களை உபதேசித்து, எதிர் காலத்தில் அவன் அரக்கர்களோடு நிகழ்த்தவிருக்கும் போருக்கு அவனை ஆயத்தப்படுத்துகிறார். விசுவாமித்திரர் அதன்பின், இராமனது அவதார நோக்கத்தில் அவனுக்கு உதவுவதற்கென்றே மிதிலையில்

அவதரித்து வளர்ந்துவரும் சீதாபிராட்டியை அவனுக்கு மணம் முடித்து, இருவரையும் இணைத்து வைக்கிறார். பின்னர், அவர் 'ஆரம்ப வேலைகள் முடிந்துவிட்டமையால் இனி யாவும் முறையாக நடந்துகொள்ளும்' என்ற நம்பிக்கையில் காட்டிற்குத் தவஞ்செய்யச் சென்றுவிடுகிறார்.

பாலகாண்டத்தில் கூறப்படும் செய்திகள்

கம்பர் இச் செய்திகளைத் தமது இராமாயண காவியத்துள் முதற்காண்டமான பாலகாண்டத்தில் பாடுகிறார். பிற காண்டங்களோடு ஒப்பிடும்போது, பாலகாண்டத்தில் கூறப்படும் கதைநிகழ்ச்சிகள் மிகக்குறைவே. இராமாவதாரமும், சீதையின் திருமணமுமே அதில் கூறப்படும் முக்கிய நிகழ்ச்சிகள். அதனால் கம்பர் கதை நிகழ்ச்சியோடு நேர்த்தொடர்பில்லாத, எழுச்சிப் படலம், வரைக் காட்சிப் படலம், பூக்கொய் படலம், புனல் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம் என்னும் ஐந்து படலங்களைச் சுமார் முந்நூறு பாடல்களில் பாடி, தமது புலமையையும், கவித்துவ ஆற்றலையும், கற்பனை வளத்தையும் வெளிப்படுத்துவதற்கு வாய்ப்பை உண்டுபண்ணிக் கொள்ளுகிறார். மிதிலைக்காட்சிப் படலத்தில், முதனூலைப் பின்பற்றிக் கதையோடு தொடர்பில்லாத விசுவாமித்திரரின் வரலாற்றை, ஜனக மகாராஜாவின் புரோகிதரான சதானந்த முனிவரின் வாயிலாக, சுமார் 50 பாடல்களில் பாடுகிறார். குலமுறை கிளத்துப் படலத்தில், முன்பு திருவவதாரப் படலத்தில் கூறிய, தசரதர் இருசிய சிருங்க முனிவரைக்கொண்டு வேள்வி இயற்றியது, அதில் வெளிப்பட்ட பூதம் அளித்த சுதையைத் தேவியர்களுக்கு அளித்தது, அவர்கள் இராமன் முதலிய மைந்தர்களைப் பெற்றெடுத்தது ஆகிய செய்திகளையே மீண்டும் பாடுகிறார். இங்ஙனமாகக் கம்பர் பல செய்திகளை இணைத்துப்பாடி, காவியத்தின் முதலாவதான பாலகாண்டத்தை நிறைவு செய்கிறார். இரண்டாவதான அயோத்தியா காண்டத்தில்தான் இராமனது அவதார நோக்கம் முளை

விடத் தொடங்குகிறது. விசுவாமித்திரர் எதிர்பார்த்த தைப் போல, நிகழ்ச்சிகள் முறையாகவும், துரிதமாகவும் நடைபெறுகின்றன.

வாழ்க்கையில் ஏற்ற இழிவுகள்

வாழ்க்கைச் சகடம் எப்பொழுதும் சமதளத்தில் செல்வதில்லையன்றோ? அது ஏற்ற இறக்கங்களினுடே செல்வது தவிர்க்க முடியாததாக உள்ளது. கோசல நாட்டை ஆயிரக்கணக்கான வருடங்களாக ஆண்டு வரும் தசரதச் சக்கரவர்த்தியும் இப்பொது விதிக்கு விலக்கல்லர். சாதாரண மக்களின் வாழ்க்கையில் இவ் ஏற்ற இறக்கங்கள் பெரும்பாலும் சிறிய அளவாக நிகழ்வதால், அவை பொதுமக்களின் கவனத்தைக் கவர்வதில்லை. ஆனால், தலைமக்களாக விளங்குபவர் வாழ்வில் அவை பேரளவாக நிகழும்போது, பெரிய விளைவுகளை உண்டுபண்ணி, எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்துவிடுகின்றன. இவற்றுன் ஏற்றங்கள் இன்ப அனுபவங்களையும், இறக்கங்கள் துன்ப அனுபவங்களையும் முறையே பயக்கின்றன. ஏற்ற இறக்கங்கள் இல்லாத வாழ்க்கை சுவையற்றதாக இருக்கும்; வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் அது பிரதிபலிப்பதும் இல்லை. எனவே, அது குறைவுடைய வாழ்க்கையாகவே கருதப்படும். ஏற்ற இறக்கங்களின்போது புதுமையான, உணர்ச்சியைத் தூண்டும் சம்பவங்கள் நிகழ்கின்றன. அப்போது வாழ்க்கை ஆரவாரம், கொந்தளிப்பு உடையதாகவும், இன்ப துன்ப அனுபவங்களின் நிலைக்களமாகவும் அமைந்துவிடுகிறது.

வாழ்க்கையின் எதிரொலி இலக்கியங்கள்

கவிஞர்கள், மக்கள் வாழ்க்கையில் நிகழ்கின்ற புணர்ச்சி பிரிவு, அமைதி—ஆரவாரம், இன்பம்—துன்பம் விருப்பு வெறுப்பு, பேறு—இழப்பு, போன்ற ஒன்றுக் கொன்று முரணானவையும், பலதரப்பட்டவையுமான அனுபவங்களையெல்லாம் தாம் படைக்கும் பாத்திரங்

களின் வாயிலாகத் தமது இலக்கியங்களில் சித்திரிப்பதாலேயே, இலக்கியங்கள் மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி என்று சிறப்பிக்கப்படுகின்றன. கம்பரும் தமது காவியத்தில் இத்தகைய இன்ப துன்ப அனுபவங்களை அடுத்தடுத்து அமைத்துவைத்துக் கற்பவர்களைப் புதிய, விறுவிறுப்போடு கூடிய அனுபவங்களில் மாறிமாறித் திளைக்கவைப்பதைக் காணலாம்.

### திருமணம் நிறைவேறித் தசரதர் அயோத்திக்கு மீளுதல்

தசரதர் மிதிலையில் தமது நான்கு புதல்வர்களின் திருமணங்களையும் சிறப்பாக நிறைவேற்றிய பின், புதுமணத் தம்பதியர்களுடன் மகிழ்ச்சியோடு அயோத்திக்குத் திரும்பி வரும் வழியில் பரசுராமர் குறுக்கிடுகிறார் அரசகுலகாலனான பரசுராமர் இராமனைப் போருக்கு அழைத்தபோது, தசரதர் அஞ்சி நடுங்குகிறார். இராமனுக்கு ஏதம் எதுவும் செய்யாதிருக்குமாறு பரசுராமனை இரந்து வேண்டுகிறார். ஆரவாரம் மிக்க பரசுராமனின் ஆணவத்தை அமைதியுடன் நின்றுகொண்டிருந்த இராமன் எளிதில் அடக்கிவிடுகிறான். பரசுராமர் தோல்வியை ஒப்புக்கொண்டு, தன்பாலிருந்த விஷ்ணுதனுசை இராமனிடம் அளித்துவிட்டு, அங்கிருந்து அகன்றபோது தசரதர் மீண்டும் களிப்புக்கடலுள் ஆழ்கிறார்.

### பரதன் கேகய நாடு செல்லுதல்

அயோத்திக்கு மீண்டுவந்ததும், தசரதர் செய்த முதற் செயலாகக் கம்பர் பாடுவது, பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பிவைப்பதாகும். கேகயவரசர் தம் மகள் வயிற்றுப் பேரனான பரதனைக் காண விரும்பி, அவனை அயோத்தியில் சென்று அழைத்து வருமாறு தம் மகன் யுதாசித்தை அனுப்பி வைக்கிறார். யுதாசித் அயோத்திக்கு வந்தபோது, பரதனுக்கும் அவன் சகோதரர்களுக்கும் மிதிலையில் நடக்கும் திருமணத்திற்காக எல்லோரும் அங்குச் சென்றிருப்பதை அறிந்து, தானும் அங்குச் சென்று திரு

மணத்தில் கலந்து கொள்கிறான். பின்னர் மணமக்கள் அயோத்திக்குத் திரும்பி வந்தபோது அவனும் அவர்களுடன் வந்து, பின்னர்த் தான் வந்த காரியத்தைத் தசரதரிடம் சொல்லி, அவர் அனுமதியுடன் பரதனைத் தனது நாட்டின் தலைநகராகிய இராசகிருகத்திற்கு அழைத்துச் செல்கிறான். பரதன் தன் தந்தை, தாயர், இராமன் முதலியோர்களை வணங்கி விடைபெற்றுக் கொண்டு மாமனுடன் புறப்படுகிறான். அப்போது அவனை விட்டுப் பிரியாதிருக்கும் சத்துருக்னனும் அவனுடன் செல்கிறான். (இச்செய்தி வான்மீகத்தில் கண்டது )

இராமனுக்கு முடிசூட்டத் தசரதர் விழைதல்

பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பியபின் தசரத மன்னர் தமது எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கிறார். ஆட்சிப் பொறுப்பை உத்தம மைந்தனான இராமனிடம் அளித்துவிட்டு, வானப்பிரஸ்த வாழ்க்கையை மேற்கொள்ள எண்ணுகிறார். அமைச்சர்களையும், வசிட்டர், சுமந்திரரையும் அழைத்துத் தமது கருத்தை அறிவிக்கிறார். அவர்கள், அரசர் செய்ய எண்ணியது தக்கதே என்று கூறி அவர் கருத்தை உடன்படுகிறார்கள். அரசர் உடனே இராமனை அழைத்து வருமாறு சுமந்திரருக்குப் பணிக்கிறார். இராமன் வந்ததும், மன்னர் அவனிடம் தாம் நெடுங்காலமாக அரசபாரத்தைச் சுமந்து அயர்ந்து விட்டதாகக் கூறி, இராமன் அதனை ஏற்றுத் தமக்கு ஆறுதல் அளிக்குமாறு பரிந்து வேண்டுகிறார். தந்தையின் சொல்லை மறுக்க முடியாமல் இராமன் அதற்கு இணங்குகிறான். தசரதர் இராமனது முடிசூட்டுவிழாவை உடனே நடத்த நிச்சயித்து, அச்செய்தியைப் பிற மன்னர்களிடம் அறிவித்து, அவர்களை அயோத்திக்கு வரும்படி அழைப்பு அனுப்புமாறும், முடிசூட்டு விழாவிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுமாறும் வசிட்டரிடம் கூறுகிறார்

(கேகய நாட்டரசராகிய அசுவபதிக்கும், விதேக நாட்டரசராகிய ஜனகருக்கும் தசரதர் திருமுகம் அனுப்ப

எண்ணவில்லை. அவர்கள் நெடுந்தொலையில் இருப்ப தால், தாம் விரைவில் நடத்த எண்ணிய முடிசூட்டு விழா வில் அவர்களால் கலந்துகொள்ள இயலாதென்று எண்ணி அவர்களுக்கு அறிவிக்கவில்லை என்று முதனூல் கூறும் செய்தி இங்கு உணரத்தகும்.)

மறுநாளே முடிசூட்டு விழாவை நடத்த எற்பாடு செய்தல்

மன்னர்களுக்குச் செய்தி செல்கிறது.[1] மன்னர்கள் வந்ததும், தசரதர் அவர்களிடம், இர்ாமனுக்கு முடிசூட்டு வதாகத் தாம் கொண்ட முடிபை அறிவிக்கிறார். இராம னது உத்தமப் பண்புகளை முன்பே அறிந்திருந்த அவ் வரசர்கள், இராமன் தசரதரைப் போல நாட்டைச் சீருடன் ஆளத் தகுதியுடையவனே என்பதை அறிவித்து, அவர் கருத்தை ஆமோதிக்கிறார்கள். உடனே தசரதர் சோதிடர் களை வரவழைத்து, முடிசூட்டுவிழாவிற்குப் பொருத்தமான நாளைக் கணித்து அறிவிக்குமாறு கூறுகிறார். அவர்கள் மறுநாளே நல்ல நாள் என்று கூற, மன்னர் அந்நாளி லேயே விழாவை நடத்த நிச்சயித்து, அச் செய்தியை நகரமாந்தருக்கு வள்ளுவரைக் கொண்டு பறையறைந்து சாற்றுமாறு பணிக்கிறார். வசிட்டர், முடிசூடப்போகும் இராமனுக்கு, மன்னர்கள் கடைப்பிடிக்க வேண்டிய உறுதிப் பொருள்களை உபதேசிக்கிறார். நகரமாந்தர்கள் இராமன் அரசனாக வருவதை அறிந்த மகிழ்ச்சியில் நகரை அலங்கரிப்பதில் ஆர்வத்தோடு ஈடுபடுகிறார்கள். காரியங் கள் இவ்வாறு விரைவாக நடந்து கொண்டிருக்கின்றன.

பரபரப்பான சூழ்நிலையில் ஏற்பாடுகள்

(இச் சமயத்தில் பரத சத்துருக்னர்கள் நகரில் இல்லை என்பதை நாம் நினைதல் வேண்டும். திருமணத்தில் கலந்து கொண்ட யுதாசித்தே பரதனைக் கேகய நாட் டிற்கு அழைத்துச் சென்றிருப்பதால், பரதன் கேகய நாடு

[1] இவ் அரசர்கள் அண்மையிலுள்ள நாடுகளை ஆளுகிற, தசரதருக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்களாக இருத்தல் கூடும்.

சென்றது, அவனது திருமணத்தை அடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சி என்றும், பரதன் கேகய நாட்டிற்குச் சென்று, அங்குச் சிலதினங்கள் தங்கி மீளுவதற்குள்ளாகத் தசரதர் இராமனுக்கு முடிசூட்டு விழாவை நடத்த எண்ணுவதால் அவ்வெண்ணம் அவனது திருமணம் நடந்து முடிந்த அண்மையிலே அவருக்கு உண்டாயிற்று என்றும் தெரிய லாம். தசரதர் பரத சத்துருக்னர்களையும் வரவழைத்து, அவர்களும் பங்கு கொள்ளுமாறு முடிசூட்டு விழாவை நடத்த வேண்டுமென்று எண்ணவில்லை. தம்மை விரைவில் அரச பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்ள வேண்டு மென்று அவர் கொண்ட ஆர்வமிகுதியே அதற்குக் காரணம் என்று கருதலாமா? அல்லது அதற்கு வேறு ஏதேனும் காரணம் இருக்கக்கூடுமா?

(தசரதர் இராமனுக்கு முடிசூட்ட வேண்டுமென்று தாம் எண்ணியதைத் தம் தேவிமார்களுடனும் கலந்து ஆலோசிக்கவில்லை. அதுபற்றித் தாம் எடுத்த முடிபை யும் அவர்களுக்கு முதலில் அறிவிக்கவில்லை. அமைச் சரவையைக் கூட்டுதல் பலநாட்டு மன்னர்களை வர வழைத்து ஆலோசனை புரிதல் போன்ற நிகழ்ச்சிகளி லிருந்து, முடிசூட்டுவிழா நடக்கப்போவதைத்தேவிமார்கள் அறிந்து கொள்வார்கள் என்று மன்னர் கருதினார் போலும்! விழா நிகழ்ச்சி பற்றிய சிந்தனையில் மன்னர் முழுமையாக ஈடுபட்டிருந்ததால் தேவிமார்களை அவர் களது அரண்மனைகளில் சந்தித்து அறிவிப்பதற்கு வாய்ப்பு அமையாமலும் போயிருக்கலாம். இராமனின் தாயார் கோசலாதேவி கூட இச் செய்தியைத் தமது சேடியர் கூறியே தெரிகிறாள். தசரதர் கைகேயியிடம் அச் செய்தியை அறிவிப்பதற்கு, விழாவின் தலைநாள் இரவில்-தான் அவள் மாளிகைக்கு வருகிறார். சுமித்திரையிடம் அச் செய்தியை யாரும் அறிவித்ததாக நூலில் கூறப்பட வில்லை. இத்தகைய பரபரப்பான சூழ்நிலையில் முடி சூட்டுவிழா ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக் கின்றன.)

## 3. மந்தரையும் கைகேயியும்

இராமனின் முடிசூட்டு விழாவிற்காக நகரமாந்தர்கள் நகரை அலங்கரிப்பதைக் கையேயியின் அன்புக்கும் அபிமானத்திற்கும் பாத்திரமான மந்தரை என்னும் கூனி காண்கின்றாள். கம்பர் மந்தரையை முதன் முதலாக வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும்போதே அவளுடைய இயல்பு புலப்படும் வண்ணம், அவளைக் 'கொடுமனக் கூனி' (மந்தரை சூழ். 39) என்று குறிப்பிடுகிறார். மந்தரையின் முதுகைப்போல, அவள் மனமும் கோணியுள்ளது என்ற கருத்தை இதன் மூலம் உணர்த்துகிறார். இங்கு நாம் மந்தரையைப் பற்றியும், அவளுக்கும் கைகேயிக்குமிடையே நிலவிய நல்லுறவு பற்றியும், கைகேயி வாழ்ந்த அரண்மனைச் சூழ்நிலை பற்றியும் தெரிவது இன்றியமையாததாகும்.

### மந்தரை பற்றிய செய்திகள்

மந்தரை கைகேயியின் நாடான கேகய நாட்டைச் சார்ந்தவள். மந்தரையின் உடல் கூன் விழுந்து முதுகுப் புறத்தில் எலும்பு மேல்நோக்கி உந்திக் கொண்டிருக்கும். உடல் வளைவால் விகாரமுற்றிருக்கும் அவளுடைய தோற்றத்தின் குறையை ஈடுசெய்யும் வகையில் அவள் கூரிய அறிவும், சிந்தனைத்திறனும், சொல்வன்மையும், நினைவாற்றலும், வினைத்திட்பமும் அமையப் பெற்றிருந்தாள். அயோத்திக்கு வருமுன் அவள் கேகய மன்னன் அரண்மனையில் பணிபுரிந்தாள். அங்கு அவள் மன்னர் முதலிய அனைவரது அன்புக்கும் பாத்திரமாக இருந்தாள். கைகேயியின் குழந்தைப் பருவத்தில் அவளுக்குச் செவிலித்தாயாக அமைந்து, அவளிடம் பற்றும் பாசமும் வைத்து, வளர்த்து வந்தவள் மந்தரையே ஆவள். மந்தரைக்கு மணம் நிகழ்ந்ததாகவோ, மக்கள் பிறந்ததாகவோ அறியக்கூடவில்லை. இல்லையென்றே எண்ண வேண்டியிருக்கிறது. இதனால் அவள் வேறு

ஆசாபாசங்களுக்கு இடமின்றித் தன் அன்பு முழுவதையும் கைகேயியிடமே செலுத்திவந்தாள். கைகேயியின் நலனை யன்றி வேறெதைக் குறித்தும் அவள் சிந்திக்க இயலாத வளாக இருந்தாள். கைகேயியிடம் அவள் வைத்த அன்பு தாயன்புக்கு நிகரானது.

### கைகேயியின் திருமணம்

கைகேயியின் திருமணம் பற்றிய செய்திகளையும் மந்தரை கேகய நாட்டில் வைத்தே அறிவாள். தசரதர் தமது முதல் தேவியாகிய கோசலையிடம் சந்தானங்கள் தோன்றாமையால், தமக்குப் பின் நாட்டை ஆள்வதற்கு மகப்பேற்றை விரும்பி, கைகேயியை மணம் வேட்டு அவள் தந்தையாகிய அசுவபதியை அணுகுகிறார். அசுவபதி தசரதருக்குத் தம் மகளைக் கொடுக்க விரும்பினாலும், அவருக்கு முன்பே கோசலையென்றொரு மனைவி இருப் பதைக் குறித்துச் சிந்திக்கிறார். தம் மகளையும் மணந்து, தசரதர் இரு மனைவியருடன் இல்லறம் நடத்தும் போது, அவர்கள் இருவருக்கும் புதல்வர்கள் பிறந்து விட்டால், மூத்த மனைவியின் மகன் என்ற காரணம் பற்றி, கோசலையின் மகனுக்கு ஆட்சியுரிமை அமைந்து விடின், தமது மகளுக்குப் பிறந்த மைந்தன் ஆட்சிக்கு வருவதற்கு வாய்ப்பின்றி, அதனால் தமது மகள் பெருமை குன்ற நேருமே என்று எண்ணுகிறார். மகள் மீது வைத்த பேரன்பால், அவளே எந்நாளும் தசரதரின் பேரரசியாகவும், அவளுக்குப் பிறக்கும் மைந்தனே தசரத ருக்குப் பின் நாட்டை ஆளும் உரிமை பெற்ற இளவரச னாகவும் இருக்க வேண்டும் என்பது அவரது அவா வாகும்.

கேகயவரசர், தம்பால் பெண் கேட்டு வந்த தசரத ரிடம் தம் கருத்தைக் கூறுகிறார். தசரதர் கேகயர் கூறி யதை ஒரு பெரிய பிரச்சினையாக அப்பொழுது எண்ண வில்லை. நெடுங்காலமாக மகப்பேறில்லாது வருந்தும்

மன்னர், 'யாராவது ஒரு மனைவி மகவைப் பெறட்டும்; இருமனைவியரும் மக்களைப் பெற்று, அம்மக்கள் வளர்ந்து, அவர்களில் ஒருவனுக்கு முடிசூட்டும் போது தானே இப்பிரச்சினை எழக்கூடும்' என்று எண்ணி, கேகய மன்னர் கூறியதை ஒரு பெரிய நிபந்தனையாகக் கருதவில்லை. கோசலைக்கு முதலில் மகன் பிறப்பான் என்றும், அம்மகன் தன் அபிமான புத்திரனாக அமையப் போகிறான் என்றும் அவர் கண்டாரா? இரண்டாவது மனைவி மூலமாகவேனும் மகவு பிறக்கட்டும் என்று எண்ணிய தசரதர் கேகயவேந்தர் கூறிய நிபந்தனைக்கு உடன்பட்டுவிடுகிறார். அதன்பின் தசரதருக்கும் கைகேயிக்கும் திருமணம் நடைபெறுகிறது. கைகேயி திருமணமாகித் தசரதருடன் அயோத்திக்கு வந்தபோது, கேகய மன்னர் கைகேயிக்கு இதுகாறும் உற்ற துணையாக இருந்துவந்த மந்தரையையும் அவளுடன் அனுப்பி வைக்கிறார்.

### அயோத்தியில் மந்தரை

அயோத்திக்கு வந்த மந்தரைக்குக் கைகேயியின் நல்வாழ்வே இலட்சியமாக அமைந்தது. கைகேயியின் அரண்மனையில் அவளது அந்தரங்கச் செயலாளர் போன்று அவளுக்கு வேண்டிய பணிவிடைகள் யாவற்றையும் மந்தரை மிகத் திறமையாகச் செய்து வருகிறாள். மந்தரை தன்னிடம் வைக்கும் அன்பைக் கைகேயியும் உணர்ந்து அவளிடம் அன்பும் ஆதரவும் நல்லெண்ணமும் கொண்டிருந்தாள். கைகேயியும் சில ஆண்டுகளாக வயிறு வாய்க்கவில்லை. அதனால் தசரதர் மூன்றாவது முறையாகச் சுமித்திரையை மணந்து அவளையும் பட்டத்தரசியாக ஏற்கிறார்.

### தசரதருக்கு மைந்தர்கள் பிறத்தல்

தசரதர், தாம் மூவர் மனைவியரைப் பெற்றிருப்பினும், பல ஆண்டுகளாக அவர்களில் ஒருவருக்காவது குழந்தைப்

பேறு அமையவில்லையே என்ற கவலையில் தமது குல குருவாகிய வசிட்டருடன் ஆலோசித்து, இருசியசிருங்க முனிவரைத் தம் நாட்டிற்கு வரவழைத்து, அவரைக் கொண்டு இராசசூயம், புத்திரகாமேட்டி என்னும் யாகங் களைச் செய்கிறார். அவற்றின் பயனாக, முதல் மனைவி கோசலைக்கு இராமனும், இரண்டாவது மனைவியாகிய கைகேயிக்குப் பரதனும், மூன்றாவது மனைவியாகிய சுமித்திரைக்கு இலக்குவன், சத்துருக்னன் என்ற இரட்டையர்களும் பிறக்கிறார்கள். இச்செய்திகளையெல் லாம் கைகேயியின் மாளிகையில் பணிபுரிந்து வந்த மந்தரை அறிவாள். (இராவணன் முதலிய அரக்கர்களின் தொல்லையிலிருந்து தம்மை விடுவிக்குமாறு தேவர்கள் வேண்டிக்கொண்டதற் கிணங்க, திருமாலே இராமனாக அவதரித்துள்ளார் என்னும் செய்தி முந்தின அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது.) குழந்தைகள் பிறந்த மகிழ்ச்சியில் தசரதர் பல அறங்களைப் புரிகிறார். பின்பு அவர்களுக்கு நாமகரணம் செய்கிறார். வளர்ந்து வரும்போது அவர் களுக்கு வேதபாராயணமும், படைக்கலப் பயிற்சியும் தக்க ஆசிரியர்களைக் கொண்டு அளிக்கிறார்.

புதல்வர்களுள் இராமன்

புதல்வர்கள் நால்வருள்ளும் இராமன் அரண்மனை யிலும், வெளியுலகிலு முள்ள அனைவருடைய அன்புக்கும், அபிமானத்துக்கும், பாராட்டுக்கும் பாத்திரமாக விளங்கு கிறான். இராமன் நகரத்து மக்களைக் காணும்போது அவர்களது நலம் குறித்து வினவுவான். அவர்கள், அவனை நீடூழி வாழ்ந்து, தம்மை ஆட்சி புரியுமாறு வாழ்த்துவார்கள். சகோதரர்கள் நால்வரும் மிக ஒற்றுமை யாக வாழ்ந்து வருகிறார்கள். தாய்மார்களும் அரண்மனை யில் நிலவும் அன்புச் சூழ்நிலையில் எல்லா மைந்தர் களையும் தாம் பெற்ற புதல்வர்களாகவே மதித்து அன்பு பாராட்டுகிறார்கள்.

கைகேயி இராமனிடம் பேரன்பு வைத்தல்

கைகேயி இராமனிடம், தன் மகன் பரதனிடம் காட்டும் அன்பைப் போலவே, இல்லை, அதனினும் சற்று அதிக மாகவே அன்பு பாராட்டி வருகிறாள். இராமனைக் கோசலை ஈன்றாலும், அவனை வளர்த்தவள் கைகேயியே என்று உலகோர் கூறும் அளவுக்குக் கைகேயி இராமனிடம் பேரன்பு வைக்கிறாள். (கைகேசி சூழ். 97)

இராமனிடம் மந்தரை கொள்ளும் அழுக்காறு

குழந்தைகள் வளர்ந்து வரும் நாள்களில், அவர்களுள் இராமன் மற்ற மூன்று குழந்தைகளை விடவும் எல்லோருடைய அன்புக்கும் புகழ்ச்சிக்கும் பாத்திரமாகி வருவதையும், மன்னனும் அவனிடம் அதிக ஈடுபாடு கொண்டு அவனைத் தன் ஆவிக்கு நிகராக நேசிப்பதையும் மந்தரை பார்த்தபோது, அவளுக்குத் தனது அன்புக்குப் பாத்திரமான கைகேயியின் மகனான பரதனுக்கு அப்பேறு அமையவில்லையே என்ற எண்ணம் எழுந்து, அவளை வருத்துகிறது. கைகேயியின் மீதும், அவள் மகன் மீதும் வைத்த அன்பின் மிகுதியே, அவளுக்கு இராமனது உத்தம குணங்களைப் பாராட்ட முடியாமல், அவன் மீது அழுக்காறு கொள்வதற்குக் காரணமாகிறது. தேவிமார்கள் மூவரும், நான்கு புதல்வர்களையும் வேற்றுமையின்றி நேசித்து வரும் அன்புச் சூழ்நிலையானது, மந்தரைக்கு இராமன் மீது கொண்ட அழுக்காற்றை வெளிப்படுத்துவதற்கு வாய்ப்பு அளிக்கவில்லை. கைகேயியும்கூடத் தம் மகன் என்றும், மாற்றாள் மைந்தர்கள் என்றும் வேறுபாடு கருதாமல், பரதனை விடவும் இராமனை அதிகமாக நேசிக்கும்போது, மந்தரை மட்டும் இராமன்மீது காழ்ப்புணர்ச்சி கொண்டு அவனுக்குக் கேடு சூழ முயல்வதைத் துருவினால் அவள் கைகேயியிடமும், அவள் மகன் பரதனிடமும் கொண்ட உலகியல் இறந்த அன்பின் மிகுதியே காரணம் என்பது புலனாகும்.

*அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை.* (76)

என்னும் குறளுக்கு ஒரு சாரார் கூறும் உரை, மந்தரையின் செயலை அரண் செய்வதாக உள்ளது. அவ்வுரையாவது: ஒருவன் தன் நண்பனிடம் வைக்கும் அன்புணர்வு அந்நண்பனுக்கு அறச்செயல்களைப் புரிவதற்கு மட்டும் துணையாகிறது என்று கூறுவது அறியாமையாகும். (தன் நண்பனுக்குப் பகையாயினார் மீது) மறத்தொழிலைச் செய்வதற்கும் அவ்வன்பு காரணமாகிறது என்பதே உண்மையாம். மணக்குடவர் உரை இக்கருத்தை உட்கொண்டது. மந்தரை கைகேயி மீதும், பரதன் மீதும் வைத்த அன்பே, இராமனுக்கு எதிராகத் தீய செயல்களைப் புரிவதற்குத் துணை நிற்கிறது.

### இராமன் உண்டை வில்லால் அவள் கூனில் அடித்த செயல்

இராமன் சிறு குழந்தையாக இருந்த போது, மந்தரையின் விகார உருவத்தைக் கண்டு, வேடிக்கையாக, தான் வைத்து விளையாடிய வில்லில் மண் உருண்டையை வைத்து அவள் முதுகில் எய்திருக்கிறான்.[1] அது மந்தரைக்கு நோவை உண்டுபண்ணி யிருக்கும். ஆனால், அந்

---

1 இச்செய்தியை,

*கூன் அகம் புகத் தெறித்த கொற்ற வில்லி*
*அல்லையோ* (நாலா. 781)

என்று பெரியாழ்வாரும்,

*கூனே சிதைய உண்டை வில் நிறத்தில்*
*தெறித்தாய்* (நாலா. 2723)

என்று நம்மாழ்வாரும் குறிப்பிடுவர். முதல் நாள் போரில் இராமனுக்குத் தோற்று மீண்டு வந்த இராவணன் மாலியவானிடம் இராமனது வில்லாற்றலைப் பற்றிக் கூறும் போது இச்செய்தியைக் குறிப்பிடுகிறான்.

*அந்தக் கூனி கூன் போகவுண்டை*
*தெறித்த போது ஒத்ததன்றிச் சினவுண்மை*
*தெரிந்ததில்லை* (கும்ப. வதை. 17)

நிலையிலும் அவள் 'இராமன் சிறுபிள்ளை, சக்கரவர்த்தித் திருமகன், வருங்காலப் பேரரசன், விளையாட்டாகச் செய்து விட்டான்' என்று எண்ணி, அச்செயலைப் பெரிதுபடுத் தாது, மறந்திருக்க வேண்டும் என்பதையே எல்லோரும் அவளிடம் எதிர்பார்ப்பார்கள். ஆனால், மந்தரைக்கோ இராமனின் செயலை மன்னிக்கவோ, மறக்கவோ முடிய வில்லை. இராமன் வளர்ந்து பெரியவனான பின்பும், அவன் இளமையில் புரிந்த அச்செயல் அவள் உள்ளத்தில் நீறு பூத்த நெருப்பைப் போல் மறைந்திருந்ததே யொழிய மாய்ந்து விடவில்லை. மந்தரை தற்செயலாக வீதிக்கு வந்து, அங்கு மக்கள் நகரை அலங்கரிப்பதில் அல்லோல கல்லோலப் படுவதைக் கண்டபோது, அவர்களை உசாவி, இராமனது முடிசூட்டு விழா மறுநாள் நடைபெறப் போவதை அறிகிறாள். அறிந்தவுடனே, இராமன் முன்பு வில்லுண்டையால் தனக்கு இழைத்த தீமை அவள் நினை வுக்கு வருகிறது.

*பண்டைநாள் இராகவன் பாணி வில்உமிழ்*
*உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்.*[1]

(மந்தரை சூழ். 41)

மந்தரை வீதிக்கு வந்ததைக் கம்பர், இலங்கை வேந்தனாகிய இராவணன் இழைத்த தீமைகளே உருப் பெற்று வந்ததாக,

*இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்*
*துன்னஅரும் கொடுமனக் கூனி தோன்றினாள்.*[2]

(ஷை 39)

---

இராமன் எண்ணில்லாத அரக்கர்களைப் போரில் கொன்றபோது, அவனிடம் முன்பு கூனியின் முதுகில் மண் உண்டையை எய்த வேளையிற் போலச் சின வுணர்வே புலப்படவில்லை.

1 பாணி - கை. உண்டை - மண் உருண்டை. உண்டது- மேற்பட்டது.

2 துன்னஅரும் - அணுகக் கூடாத. கொடு - கொடிய; வளைந்த.

என்று பாடுகிறார். மந்தரை இராமனுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்வதும், அதன் விளைவாக இராமன் சீதையுடன் காட்டிற்குச் செல்வதும், அங்குச் சீதையை இராவணன் கவர்ந்து சிறை வைப்பதும், அதனால் உண்டான போரில் இராவணன் மடிவதும் ஆகிய நிகழ்ச்சிகள் யாவும் மந்தரை வீதிக்கு வந்து, இராமன் முடிசூடப் போவதை அறிந்ததைத் தொடக்கமாகக் கொண்டு நிகழ்வதால் கம்பர் இவ்வாறு கூறுகிறார்.

### மந்தரையின் பழிவாங்கும் சிந்தனை

இராமன் முடிசூடப் போவதை அறிந்தபோது மந்தரை உற்ற நிலையைக் கம்பர் சித்திரிக்கிறார். அவள் நெஞ்சு துடிக்கிறது; கோபம் மூண்டெழுகிறது; உள்ளம் வருந்துகிறது; கண்கள் நெருப்பை உமிழ்கின்றன; சொல் தடுமாறுகிறது; கோபத்தால் உதடுகள் பிதுங்குகின்றன. இராமன் மீது அவள் கொண்ட வெறுப்புணர்வு, பொறாமையையும் பகைமையையும் பழிவாங்கும் சிந்தையையும் தூண்டுகிறது. இராமன் முடிசூடி அரசனாக வருவதை அவளால் சகிக்கக்கூடவில்லை. எவ்வாறேனும் முடிசூட்டு விழாவைத் தடுத்துவிட வேண்டும் என்று துணிகிறாள். துணிந்த செயலை நிறைவேற்றுவதற்குத் தேவையான மனத்திட்பமும், சூழ்ச்சித்திறனும், விடாமுயற்சியும் அவள்பால் சிறப்பாக அமைந்துள்ளமையால் அவற்றைப் பயன்படுத்தி இராமனுக்கு எதிரான சூழ்ச்சி ஒன்றை உருவாக்குகிறாள். அச்சூழ்ச்சியில் அவள் கைகேயியையும் ஈடுபடுத்திக் கொள்ளுகிறாள். கைகேயியையும் ஈடுபடுத்தினால் மட்டுமே தன் சூழ்ச்சி நிறைவேறும் என்பதை அவள் தன் நுண் மதியால் உணர்கிறாள். அதே வேளையில், அறவழிப்பட்ட சிந்தையும், இராமனிடம் பேரன்பும் கொண்ட கைகேயியைத் தன்வயப்படுத்தி அவளைக் கொண்டு முடிசூட்டு விழாவைத் தடுத்துவிடுவது எளிதான செயலன்று என்பதையும் அவள் தெரியாமல் இல்லை. ஆனால் தன்னம்பிக்கையுடைய மந்தரை அதனால் மனந்தளராமல்

கைகேயியின் உறுதியான உள்ளத்தை நிலைகுலையச் செய்து, அவளைக் கொண்டே இராமனது முடிசூட்டு விழாவைத் தடுப்பது மட்டுமன்றி, அவனை நாட்டை விட்டே துரத்திவிடுவதற்கான அறக்கொடிய திட்டம் ஒன்றையும் தீட்டுகிறாள். இதனால் தன் அன்பிற்குரிய கைகேயிக்கு மாயாப்பழி வருமே என்பதைக் குறித்து அவளுடைய பழிவாங்கும் சிந்தனை கவலைப்படவில்லை. மந்தரை தனது திட்டத்தை எவ்வாறு நிறைவேற்றுவது என்பது பற்றிச் சிந்தித்து விரைவில் அதற்கு ஓர் வடி வமைத்துக்கொண்டு கைகேயியைக் காண, அவளிருக்கும் அரண்மனைக்கு வருகிறாள்.

கைகேயியின் சயனக் கோலம்

மந்தரை வந்ததும், அங்கே கைகேயி வெண்ணிறப் படுக்கையின்மீது சயனிப்பதைக் காண்கின்றாள். கைகேயி கண் வளரும் கோலத்தைக் கம்பர் அழகாக வருணிக்கிறார்.

*நாற்கடல் படுமணி நளினம் பூத்ததுஓர்*
*பாற்கடல் படுதிரைப் பவள வல்லியே*
*போல் கடைக் கண்அளிபொழியப் பொங்குஅணை*
*மேல் கிடந் தாள்தனை விரைவில் எய்தினாள்*[1]

(ஷை. 42)

பாற்கடலில் பவளக்கொடி படர்ந்திருப்பதுபோல் அவள் படுத்திருக்கிறாளாம். வெண்ணிறப் படுக்கைக்குப் பாற் கடலும், கைகேயியின் அழகிய மேனிக்குப் பவளவல்லியும் உவமைகளாகின்றன. இப் பவளவல்லி, சாதாரண மாகக் கடலில் காணும் பவளக்கொடியன்று. இக் கொடி பலவகை இரத்தினங்களோடும், தாமரை மலர்களோடும் கூடியது. இரத்தினங்கள் கைகேயி அணிந்துள்ள ஒளி வீசும் ஆபரணங்களையும், தாமரை மலர்கள் அவளுடைய முகம், கைகள், பாதங்கள் ஆகிய உறுப்புக்களையும்

---

[1] படுதல்-தோன்றுதல் நளினம்-தாமரை.
அளி-கருணை. அணை-படுக்கை.

குறித்துள்ளன. சயனிக்கும் போதும் கைகேயியின் கடைக் கண்கள் கருணையைப் பொழிந்துகொண் டிருக்கின்றன வாம். கைகேயி அன்பே வடிவாக உடையவள் என்பதும், அன்பு, இரக்கம், ஈகை ஆகிய உத்தமப் பண்புகள் அமையப் பெற்றவள் என்பதும், இவ்வாறு கடைக்கண் அருள் பொழிவதாகக் கூறுவதன் மூலம் உணர்த்தப்படு கின்றன.

மந்தரை கைகேயியைத் துயிலுணர்த்தல்

கைகேயியின் உறக்கம் அவள் கவலை யற்றிருப்பதன் அறிகுறியாகும். கவலையுடையவர்களுக்கு உறக்கம் வருவதில்லை என்பதை யாவரும் அறிவர். கைகேயியின் மனம் நிம்மதியுற்றிருப்பதையே அவளது உறக்கம் அறி விக்கிறது. கைகேயி உறங்கிக்கொண்டிருப்பது மந்தரை வந்த விரைவுக்குத் தடையாக அமைந்தது. கைகேயி உறக்கம் கலைந்து எழுவது வரைக்கும் பொறுத்திருக்க மந்தரைக்கு இயலவில்லை. அவளைத் துயிலெழுப்பித் தான் எண்ணி வந்த திட்டத்தை உடனே தொடங்க எண்ணுகிறாள். சாதாரணமாக அரசி துயிலும்போது அவளைத் துயிலெழுப்ப யாரும் துணியமாட்டார்கள். ஆனால், மந்தரை அந்நடைமுறையைக் கடைப்பிடிக்க வில்லை. தான் அரசியிடம் கூற எண்ணிய காரியம் காலந்தாழ்வதை அனுமதிக்கக் கூடியதன்று என்று எண்ணுகிறாள். அரசியிடம் தனக்கிருக்கும் செல்வாக்கை யும், உரிமையையும் பயன்படுத்தி அவளைத் துயிலெழுப் பத் துணிகிறாள். கைகேயியின் தாமரை மலரை வென்ற மெல்லிய பாதங்களை மென்மையாக வருடி அரசியின் உடலில் உணர்வை வரவழைக்கிறாள். கம்பர் இங்கு மந்தரையைக் 'காலக்கோள் அனாள்' என்று கூறுகிறார். பின்னால் வரவிருக்கும் உற்பாதத்தை முன்னதாக அறி விக்கும் தீய கோளாக, அவளைக் கூறுவது, அவளால் இராமனது முடிசூட்டுவிழாத் தடைப்பட்டு அவன் காட் டிற்குச் செல்ல நேர்வதைக் கருத்தில் கொண்டு கூறிய தாகும்.

பேரிடர் வரப்போவதாகக் கூறுதல்

கைகேயி உறக்கம் கலைந்தும் கலையாதும் இருக்கும் நிலையில், மந்தரை தன் பேச்சைத் தொடங்குகிறாள். தொடங்கும்போதே அவள், கைகேயியின் உள்ளத்தில் ஓர் அதிர்ச்சியை உண்டுபண்ண முயல்கிறாள். பேரிடர் ஒன்று கைகேயிக்கு அடுத்து வரவிருப்பதாகச் சொல்லி, அவள் அதைக்குறித்துக் கவலைப்படாமல் உறங்கிக் கொண்டிருப்பதற்காக அவளைக் கடிகிறாள். துன்பம் அடுத்துள்ளபோதும் கைகேயி கவலைப்படாமல் இருப்பதை, மந்தரை ஓர் உவமை வாயிலாக விளக்குகிறாள். சந்திர கிரகண நாளில், கேது என்னும் பாம்பு சந்திரனை அணுகிக் கவ்வு மட்டும் அது தன் ஒளியைக் கான்று கொண்டிருப்பதைக் கைகேயியின் நிலைக்கு ஒப்பாகக் கூறுகிறாள்.

*அணங்குவாள் விடஅரா அணுகும் எல்லையும்*
*குணங்கெடாது ஒளிவிரி குளிர்வெண் திங்கள்போல்*
*பிணங்குவான் பேர்இடர் பிணிக்க நண்ணவும்*
*உணங்குவாய் அல்லைநீ உறங்குவாய் என்றாள்.*[1]
(ஷை 45).

கைகேயியைக் குறைகூறும் மந்தரை, அதை விளக்குவதற்குக் கையாளும் உவமை, கைகேயிக்குச் சிறப்பளிப்பதாகவே அமைந்துள்ளது. மந்தரை வேறு பொருள் எதையும் ஒப்பாகக் கூறாமல், ஒளியுடைய சந்திரனைக் கூறுவது, குறைகூறும் அவ்வேளையிலும், அவள் கைகேயியிடம் வைத்த நன்மதிப்பு குறிப்பால் புலப்படுகிறது. கம்பர் கைகேயியைத் 'தெய்வக் கற்பினாள்' என்றும், மந்தரை அவளிடம் கூற எண்ணிய செயலை, 'பெரும் பழி முடிக்கும் வெவ்வினை' என்றும் கூறுவது சிந்திக்கத் தக்கதாம். இவற்றுள் முன்னது கைகேயி தசரதரிடம்

[1] அணங்கு-துன்பம். வான்-வாள் போன்ற. பிணங்கு-மாறுபாடான. வான்-பெரிய. உணங்கல்-வருந்தல்.

கொண்டுள்ள தூய ஒழுக்கத்தின் மேன்மையையும், பின்னது மந்தரையின் செயலினால் விளையப்போகும் தீமையையும் குறிப்பனவாக உள்ளன.

கைகேயி இராமனைப் பயந்த தனக்கு இடர் வராது எனல்

மந்தரை கைகேயிக்குப் பேரிடர் வரப் போவதாகக் கூறிய செய்தி அவள் எதிர்பார்த்ததற்கு மாறாகக் கைகேயியின் உள்ளத்தில் எவ்வகை அதிர்ச்சியையும் உண்டு பண்ணவில்லை. போர்க்களம் கண்ட கைகேயியா மந்தரை கூறும் இடருக்கு அஞ்சுகிறவள்! கைகேயி மந்தரையின் கூற்றை, 'பூ - பூ' என்று எள்ளி உதறி விடுகிறாள். மிகச் சாவதானமாக மந்தரையைப் பார்த்து, "எனக்கு இடர் வரப்போவதாகவா பேசுகிறாய்! சிறந்த மைந்தர்களைப் பெற்றவர்கள் துன்பத்திலிருந்து நீங்கி இன்பத்தை அடைகிறார்கள் என்பது ஆன்றோர் கூற்றன்றோ? அத்தகைய மைந்தர்கள் எனக்கு நால்வர் உளர். அவர்கள் அறத்தினின்று வழுவாதவர்கள். இந்நிலையில் எனக்கு இடர்வரப் போவது எங்ஙனம்?" என்று கேட்டு விட்டுத் தொடர்ந்து, "உலகுக்கெல்லாம் புனிதமான வேதம் போன்று, தூய்மையான சொல் செயல்களை யுடைய இராமனை மகனாகப் பயந்த எனக்கு இடர் உண்டோ?" என்று கேட்டு மந்தரையின் கூற்றை வலி யிழக்கச் செய்கிறாள்.

*பராவஅரும் புதல்வரைப் பயந்த யாவரும்*
*உராவஅரும் துயரை விட்(டு) உறுதி காண்பரால்*
*விராவவரும் புவிக்கெலாம் வேதமேஅன*
*இராமனைப் பயந்த எற்கு இடர்உண்டோ என்றாள்.*[1]
(ஷை 47)

[1] பராவஅரும் - புகழ்தற்கரிய. உராவஅரும் - வருவதற் கரிய. விராவவரும் - பஞ்ச பூதங்களின் விரவுதலால் (கலப்பால்) தோன்றிய. பயந்த-ஈன்ற. எற்கு-எனக்கு.

*எழு பிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்*
*பண்புடை மக்கட் பெறின்*[1]. (62)

என்னும் வள்ளுவர் குறள் கைகேயியின் கருத்தை அரண் செய்தல் காணலாம்.

கைகேயி கூறிய இவ்விடையிலிருந்து, அவள் நான்கு புதல்வர்களையும், தன் மக்களாகவே நேசிக்கிறாள் என்பதும், இராமனை உயர்ந்த, புனிதமான பண்புடையவனாகப் போற்றுகிறாள் என்பதும், இவற்றுடன் அவளது களங்கமற்ற உள்ளப்பாங்கும் வெளிப்படுகின்றன. கைகேயி இராமனைக் குறிப்பிடும் போது, 'இராமனைப் பெற்ற எற்கு இடருண்டோ' என்று கூறாமல், 'பயந்த எற்கு இடருண்டோ' என்று கூறுவதிலுள்ள நயம் கூர்ந்து உணர்தற்பாலதாம். 'பெற்ற மைந்தன்' என்ற தொடர் ஈன்ற மைந்தனைச் சுட்டுவதோடு, சந்தர்ப்பத்திற்கேற்ப வளர்த்த மைந்தனைக் குறிப்பதுமுண்டு. ஆனால், 'பயந்த மைந்தன்' என்ற தொடர் ஈன்ற மைந்தனைக் குறிக்கும் பொருளில் மட்டுமே ஆளப்படுகிறது. கைகேயி, 'இராமனைப் பயந்த எற்கு' என்று கூறியதாகக் கம்பர் பாடுவது, இராமனை அவள் கருவிருந்து பெற்ற மைந்தனாகவே கருதினாள் என்று, அவள் இராமன் மீது வைத்த தாயன்பை விளக்குதற் பொருட்டேயாம். இராமனைத் தான் பயந்த மகனாகக் கூறி, அவன்மீது வைத்த பேரன்பைப் புலப்படுத்திய கைகேயியைக் கம்பர், 'ஆழ்ந்த பேரன்பினாள்' என்று கூறுவது மிகப் பொருத்தமாகவும், அவளுக்குச் சிறப்பளிப்பதாகவும் உள்ளது.

சக்களத்தி உணர்வைத் தூண்டுதல்

கைகேயிக்குப் பெரியதோர் இடர் வரப் போவதாகக் கூறி, அவள் உள்ளத்தின் அமைதியைக் குலைத்து, அவளைத் தன் வழிக்கு இழுக்க முயன்ற முயற்சி பயனளிக்கவில்லை என்பதை மந்தரை உணர்கிறாள்.

---

[1] பழிபிறங்கா - பிறரால் பழிக்கப்படாத.

ஆனால், அவள் உள்ளம் அதனால் தளர்ச்சியடைய வில்லை. ஒரு செய்தியைக் கூறியதால் நினைத்த பயன் கைகூடாத போது, உடனே மற்றொன்றை முன்னிலும் வலியுடையதாகப் படைத்துக் கூறும் கற்பனைத்திறன் வாய்ந்தது அவள் உள்ளம். பெண்களுக்கு மாற்றாள் இருந்தால், அம்மாற்றாளோடு அவர்களுக்கு அழுக்காறு, வெறுப்பு, பகைமை ஆகிய குறைகள் இருத்தல் இயல் பென்பதை நன்குணர்ந்த மந்தரை இப்பொழுது அவ் வுணர்வைத் தூண்டிக் கைகேயியின் தூய உள்ளத்தைச் சிதைக்க முயல்கிறாள். கைகேயியைப் பார்த்து,

*வீழ்ந்தது நின்நலம் திருவும் வீழ்ந்தது*
*வாழ்ந்தனள் கோசலை மதியினால் என்றாள்.*[1]

(ஷை 48)

கோசலை மதியுடையவள் என்றும், அதனால் அவள் செல்வத்தோடும் சிறப்போடும் வாழப் போகிறாள் என்றும், கைகேயி மதியில்லாமையால் தனக்கு நன்மையானவற்றை யும், திருவையும் இழந்து வீழ்ச்சியுறப் போகிறாள் என்றும் கூறி, கைகேயியைத் தன் மதியினால் சிந்தித்துத் தனக்குக் கேடு வராதபடி தற்காத்துக் கொள்ளுமாறு அறிவுறுத்துகிறாள். மந்தரையின் கருத்துப்படியே நோக்கி னாலும், கோசலை வாழ்ச்சியுறுவதும், கைகேயி வீழ்ச்சி யுறுவதும், எதிர்காலத்தில் இராமன் முடிசூடி அரசனான பின் நிகழ்வனவன்றோ? ஆனால் மந்தரை அவற்றை நடந்துவிட்ட செயல்களாகவே இறந்த காலத்தில் வைத்துக் கூறுவது, அவை நிச்சயமாக நடந்தே தீரும் என்ற கருத்தைக் கைகேயிக்கு வலியுறுத்தற் பொருட் டாகும்.

மந்தரை மாற்றாளுக்குரிய பகையுணர்ச்சியைத் தூண்டி, கைகேயியின் நன்மனத்தைக் கெடுக்க முயன்ற முயற்சியும் விரும்பிய பயனை அளிக்கவில்லை. கோசலை வாழ்ந்தாள் என்றும், கைகேயி விழ்ந்தாள் என்றும்

---

[1] வீழ்ந்தது - அழிந்தது. நலம் - நன்மை. திரு - செல்வம்.

மந்தரை கூறியதைக் கைகேயி ஏற்கவில்லை. ஒரு மாற்றாளின் வாழ்வு மற்றொரு மாற்றாளின் வாழ்வை விடத் தாழ்வதும், உயர்வதும். அவர்களது கணவர் அவர்களிடம் வைக்கும் அன்பைப் பொறுத்ததன்றோ? தசரதரின் அன்பு தனக்கு நிறைவாக உண்டு என்பதில் கைகேயி முழு நம்பிக்கையுடையவள். மேலும் அவள், பரதனின் உயர்ந்த குணங்களையும், அவன் எல்லோராலும் புகழப்படுவதையும் நன்கறிவாள். எனவே, அவள் தசரதர் தனது அன்புக் கணவராகவும், பரதன் அருமை மைந்தனாகவும் இருக்கும் போது தனது வாழ்வை விடக் கோசலையின் வாழ்வு எவ்வகையில் மேம்பட்டதாக இருக்கக் கூடும்? என்று மந்தரையிடமே கேட்டு, அவள் கூற்றை அலட்சியப்படுத்தி விடுகிறாள்.

### இராமனைப் பழித்துக் கூறுதல்

கைகேயி, இராமனை, 'புவிக்கெலாம் வேத மனையவன்' என்று சிறப்பித்துக் கூறியது மந்தரைக்கு ஏற்புடையதாக இல்லை. கைகேயி இராமனைப் புகழ்வதும், அவனிடம் அன்பு வைப்பதும் மந்தரைக்கு அவன் மீது பொறாமையை மேலும் வளர்க்கிறது. அவள் கைகேயியிடம் இராமனது குணங்களைப் பழித்துக் கூறுகிறாள். இராமன் தாடகை என்னும் பெண்பாலை வதைத்த செயலைக் குறிப்பிட்டு, அச்செயல் ஆடவர்களின் நகைக்குக் காரணமானதோடு, அவனது ஆண்மையையும் மாசடையச் செய்து விட்டது என்று அவனை இழித்துச் சொல்லி, ''அந்த இராமனே நாளை முடிசூடப் போகிறான்; கோசலைக்கு வரும் வாழ்வு இதுவாகும்.'' என்று கூறினாள்.

### கைகேயி மந்தரைக்கு அரதன மாலையைப் பரிசளித்தல்

மந்தரை இராமனைப் பழித்துக் கூறிய சொற்களுக்குக் கைகேயி செவிசாய்க்கவில்லை. அவன் நாளை முடிசூடப் போகிறான் என்ற செய்தியைக் கேட்டதும் அவள் உள்ளத்தில் இராமனைக் குறித்த அன்பு, கடல் போல் ஆர்ப்

பரித்து எழ, அதனால் அவள் முகம் பூரணச் சந்திரன் போன்று பிரகாசித்தது; அவளது தூய உள்ளத்தில் மகிழ்ச்சியும் எல்லை கடந்து பெருகியது. இராமன் முடி சூடப் போகும் நற்செய்தியை முதன்முதலாகத் தனக்கு அறிவித்த மந்தரைக்குத் தன் அன்புப் பரிசாக ஒரு விலை யுயர்ந்த இரத்தின மாலையை அளித்தாள்.

*தூயவள் உவகை போய் மிக சுடர்க்குஎலாம்*
*நாயகம் அனையது ஒர் மாலை நல்கினாள்.*[1]
(மந்தரை சூழ். 52)

மந்தரையின் சூழ்ச்சி கைகேயியின் உள்ளத்தில் மாறு பாடான உணர்ச்சி எதையும் உண்டு பண்ணவில்லை. அதற்குப் பதிலாகக் கைகேயிக்கு இராமன் மீதிருந்த அன்பையே மிகுதிப்படுத்தியது. இதற்குக் கம்பர் இரண்டு காரணங்களைக் கூறுகிறார். ஒன்று: கைகேயியின் உள்ளமும் கோசலா தேவியின் உணர்வும் ஒத்திருந்தமை. இரண்டு: தசரதரின் அன்பைக் கைகேயி சிறப்பாகப் பெற்றிருந்தது. கம்பர் கூறும் இக்காரணங்களிலிருந்து இராமன் மீது கோசலையும், கைகேயியும் ஒத்த அன்புடையவர்களாகவே இதுகாறும் இருந்து வந்துள்ளனர் என்பதும், தசரதரின் தேவியர் மூவருள்ளும் கைகேயியே அவருடைய அன்பை மிகுதியாகப் பெற்றிருந்தாள் என்பதும் மேலும் வலியுறுகின்றன.

கைகேயி மந்தரைக்கு அரதன மாலையைப் பரிசளித்த செய்தி, அவள் இராமன் முடிசூடப் போவதை மகிழ்ச்சியோடு வரவேற்கிறாள் என்பதையே உணர்த்துகிறது. மந்தரையின் தீய சொற்களால், கைகேயி இராமனிடம் வைத்த பற்றுக்கும், கோசலையிடம் கொண்ட நல்லுணர்வுக்கும் இதுவரையிலும் ஊறு ஏற்படவில்லை என்பதையும் நம்மால் அறிய முடிகிறது

[1] தூயவள் - கைகேயி. நாயகம் - தலைமை.

# 4. மந்தரை கைகேயியின் மனத்தைத் திரித்தல்

## மந்தரை மாலையைத் தரையில் எறிதல்

கைகேயி அரதன மாலையைப் பரிசளித்த போது, மந்தரை அச்செயலை வன்மையாகக் கண்டிப்பவள் போலக் கண்களில் தீப்பொறி பறக்க நோக்கினாள். ஆற்றாமையால் பெருமூச்சு விட்டாள். அச்செயலை மறுத்து உரக்கப் பேசினாள்; கைகேயியை அநட்டினாள்; அவற்றுடன் நில்லாமல் அம்மாலையை எடுத்து விசையாக மண்ணின் மீது நிலம் குழிய எறியவும் செய்தாள். மந்தரையின் இச்செயல் வரம்பு மீறிய செயல் என்பதைக் கூறவும் வேண்டுமோ? அவளையன்றி வேறெந்தப் பெண்ணும் இவ்வாறு செய்யத் துணியாள். எவரேனும் அறிவின்றிச் செய்வதானால் கைகேயி அச்செயலைப் பொறுத்துக் கொள்ளவும் மாட்டாள். உடனே அவளுக்குத் தக்க தண்டனையை அளித்து, வேலையிலிருந்து அகற்றியும் இருப்பாள். ஆனால் மந்தரை திறத்தில் கைகேயி அதைச் செய்யாததற்கு அவளுடன் கொண்ட நெடுங்காலத் தொடர்பும், பேதைமதியினால் செய்துவிட்டாள் என அவளை மன்னித்ததும் காரணங்களாம் என்று கருதலாம்.

கைகேயி அன்புடன் அளித்த முத்துமாலையை மந்தரை அவளை அவமதிப்பவள் போலத் தரையில் எறிந்ததோடு அமையாமல், அவளைச் சினந்து நோக்கி, ''ஏ! பேதையே! மக்களைத் தரம் திரித்து உணரும் அறிவு இல்லாதவளே! நீ உன் மகனோடு மிக்க துன்பத்தை அனுபவித்துக் கொண்டு இரு. நான் இதுகாறும் உனக்குத் தொண்டு செய்துவிட்டு, இனி உனது மாற்றாளுக்கு (கோசலைக்கு)த் தொண்டு செய்தலைப் போறேன்'' என்று கூறினாள்.

கைகேயி தன் பேதை மதியால், தான் வேறு, கோசலை வேறு, பரதன் வேறு, இராமன் வேறு எனப்

பிரித்துணர முடியாமல் எல்லோரையும் சமமாகவும், நல்லவர்களாகவும் எண்ணுவதாகச் சொல்லி அவளை மந்தரை குறை கூறுகிறாள். இராமன் அரசனாகவரின், கைகேயி, பரதன் ஆகிய இருவர் நிலைகளும் மிகத் தாழ்ச்சி அடைந்துவிடும் என்று எச்சரிக்கை செய்கிறாள். எக்காரணம் பற்றியும் தாம் கோசலைக்கு அடித்தொண்டு புரியப்போவதில்லை என்பதை உறுதியாகக் கூறுகிறாள்.

**இராமன் அரசனானால் பரதன் நிலை தாழ்ந்துவிடும் எனல்**

இதைத் தொடர்ந்து மந்தரை மற்றோர் தீய கருத்தையும் கைகேயியின் காதுகளில் பெய்கிறாள். இராமன் அரசனானால் அவன் தன் பட்டத்தரசி சீதையுடன் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும்போது, பரதன் அவர்களுக்கு முன் தரையில் இருக்க நேரும் என்று கூறி, அக்காட்சியைக் கண்டு கைகேயி மகிழ்வாளா? என்று அவளிடமே வினவுகிறாள். கைகேயி இதுகுறித்துச் சிந்திக்காமல் இருப்பது பற்றி அவளைக் கடிகிறாள்.

*சிவந்தவாய்ச் சீதையும் கரிய செம்மலும்*
*நிவந்த ஆசனத்து இருப்ப நின்மகன்*
*அவந்தனாய் வெறுநிலத்து இருக்கல் ஆனபோது*
*உவந்தவாறு என்இதற்கு உறுதீயாது? என்றாள்.*[1]

(ஷை 55)

மந்தரை தன் சொல்லாற்றலால் இராமனும் சீதையும் சிம்மாசனத்திலும், பரதன் தரையிலும் இருப்பதைப் போன்ற ஒரு காட்சியைக் கைகேயியின் மனக்கண் முன் நிறுத்தி, அவள் உள்ளத்தில் பரதன் மீது பரிவையும், இராமன் மீது பொறாமையையும் தூண்ட முயல்கிறாள். ஒரு தாய் தனக்கு வரும் இழிவைப் பொறுத்துக் கொண்டாலும், தன் அருமை மைந்தனுக்கு வரும் இழிவைப் பொறுக்க ஆற்றாது, உள்ளம் அழியும் தாய்மையுணர்வை மந்தரை கைகேயியின் உள்ளத்தில் தூண்டித் தன் திட்டத்தை நிறைவேற்ற முயல்கிறாள்.

---

[1] நிவந்த - உயர்ந்த. அவந்தன் - வீணானவன்.

பரதன் மீது பச்சாத்தாபம்

இவ்வாறு கோசலைமீதும் இராமன்மீதும், கைகேயியின் வெறுப்புணர்ச்சியைத் தூண்டிய மந்தரை, அதனை மேலும் வளர்ப்பதற்காகத் தொடர்ந்து பல செய்திகளைத் தன் கற்பனையால் சிந்தித்துக் கூறுகிறாள் அவற்றை மந்தரை சொற்சாதுரியமாகக் கூறி, கைகேயியின் உள்ளத்தைக் கவர்ந்து, தான் எண்ணிய நெறியிலேயே அவளையும் சிந்திக்க வைக்கிறாள். கோசலை தன் மகன் இராமனுக்கு நன்மையான பல செயல்களை விழிப்புடன் இருந்து செய்து வருகிறாள் என்றும், அதனால் இராமன் அரசாளும் செல்வத்தைப் பெற்றுச் சிறப்பெய்தியுள்ளான் என்றும், பரதன் கைகேயியின் வயிற்றில் பிறந்த காரணத்தால் தான் அடைய வேண்டிய செல்வம் அனைத்தையும் இழந்து நிற்கிறான் என்றும் வருந்திக் கூறி, 'பாவம் பரதன் இச்சிறுமையை அனுபவிப்பதற்கு ஆளாகாதபடி இறந்துபோனான் இல்லையே' என்று, அவன்மீது பச்சாத்தாபப் படுபவள் போன்று கூறுகிறாள்.

*இறந்திலன் இருந்தனன் என்செய்து ஆற்றுவான்*
*பிறந்திலன் பரதன்நீ பெறுதலால் என்றாள்.*[1]

(டி 56)

மந்தரை இவற்றுடன் அமையவில்லை; மேலும் தொடர்கிறாள். இராமன் அரசனானால், இராமனும், இலக்குவனும் அவர்களுக்குப்பின் இராமனது சந்ததியாருமே நாட்டை எக்காலமும் ஆண்டு கொண்டிருப்பார்கள் என்றும், பரதன் அரசகுலத்தில் பிறந்தும் அரசனாக வரும் வாய்ப்பின்றி, அதனால் நாட்டை ஆளும் அரசர்களின் வரிசையில் ஒருவனாக எண்ணப்படும் பேற்றினை இழந்து விடுவான் என்றும் அவன்மீது கழிவிரக்கம் தோன்றக் கூறுகிறாள்.

---

[1] ஆற்றுவான் - துயர் நீங்குவான்.

(மந்தரையின் இப்பேச்சில் அவளது பொய்மையுள்ளம் புலனாவதைக் காணலாம். அரசகுலத்தில் மூத்த மைந்தர்கள் அரசர்களாக வருவதே மரபாகும். அதன்படி இராமனுக்குப்பின் அவனுக்குப் பிறக்கும் மூத்த மைந்தன் அரசனாக வருவதே முறை. இராமனுக்கு மகன் பிறவாமலோ, அல்லது பிறந்து அம்மகன் இளைஞனாகவோ இருந்தால், இராமனுக்கு அடுத்த தம்பியாகிய பரதன் அரசனாக வருவான். அங்ஙனமிருக்க மந்தரை, இராமன் அரசனாக வந்தால் அவனும் இலக்குவனும், அவர்களுக்குப்பின் இராமனது சந்ததியார்களும் அரசாள்வார்கள் என்று இலக்குவனையும் அரசாள்பவர்களில் ஒருவனாகக் கூறுகிறாள். இதன் மூலம் மந்தரை கைகேயியின் உள்ளத்தில், 'இலக்குவன் அரசனாக வரும்போது, அவனை விட மூத்தவனும், அரசனாவதற்குரிய எல்லாத் தகுதிகளும் உடையவனுமான தன் மகன் பரதன் அரசனாக வருவதற்கில்லையே' என்று பரதன்மீது பரிவு, பாசம் ஆகிய உணர்வுகளையும், இராமலக்குமணர்கள் மீது பொறாமையையும் தூண்டிவிடுகிறாள்.)

மன்னர் செயலைக் குறை கூறுதல்

மந்தரை, பரதனைத் தசரதர் கேகய நாட்டிற்கு அனுப்பிவைத்த காரணம் தனக்கு இப்பொழுதான் புலப்படுகிறது என்கிறாள். பரதன் நாட்டில் இருந்தால் இராமனது முடிசூட்டு விழாவிற்கு ஏதேனும் தடை ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சியே தசரதர் அவனைக் கேகய நாட்டிற்கு அனுப்பிவிட்டு, விழாவைத் தொடங்குகிறார் என்ற கருத்தை மந்தரை கைகேயிக்கு உணர்த்துகிறாள். மந்தரையின் கூற்றைக் கைகேயி மறுக்காமல் அதற்குச் செவிசாய்ப்பது அவள் உள்ளம் குலையத் தொடங்குகிறது என்பதை உணர்த்தும் அடையாளமாகக் கருதப்படும்.

மந்தரை பின்னும் கூறுகிறாள்: "தசரதர் நடுநிலைமை கெட்டு உலகை ஆளும் உரிமையை இராமனிடம் அளிப்பதால், பரதனுக்கு அவன் தந்தையும் கொடியவராகி

விட்டார். தந்தைதான் அப்படி, தாயோ என்றால், அவளும் தந்தையைப் போலத் தீயவளாக இருக்கிறாள்''. மந்தரை இவ்வாறு கூறிவிட்டு, பரதனின் நிலைமை குறித்து இரங்குவாள் போல, ''ஏ பரதா! அப்பா! நீ இனி எவ்வாறு வாழப்போகிறாய்?'' என்று கூறி வருந்து கிறாள்.

*தந்தையும் கொடியன்; நற்றாயும் தீயளால்;*
*எந்தையே! பரதனே! என்செய்வாய் என்றாள்.*

(ஷை 60)

(மந்தரை கைகேயியைத் 'தீயவள்' என்று அஞ் சாமலும், வாய் கூசாமலும் கூறிய சொல்லைக் கைகேயி கேட்டுப் பொறுமையோடிருப்பது, மந்தரை பரதனுக்காகக் கூறும் பரிந்துரைகள் அவள் உள்ளத்தில் சிறிது மாற் றத்தை உண்டுபண்ணி யுள்ளன என்று கருதுவதற்கு இடம் தருகிறது. ஆனால், கம்பர் கைகேயியின் மனத்துள் மாற்றம் எதுவும் நிகழவில்லை என்று கருதுகிறார்.)

**கைகேயி துயர்க் கடலுள் வீழப் போவதாகக் கூறுதல்**

பரதனைக் குறித்து இவ்வாறு இரங்கிக் கூறிய மந்தரை மீண்டும் கைகேயிக்கு அறிவுரை கூற முற்படு கிறாள். ''அரசி! நீ அரச குலத்தில் பிறந்து, அரச குலத்தில் வளர்ந்து, அரச குலத்திலே வாழ்க்கைப்பட்டு அங்குப் பேரரசியாக விளங்கியுள்ளாய். அத்தகைய நீ இது காறும் அனுபவித்த இன்ப வாழ்க்கையெல்லாம் சிதையும் படி, பெரியதோர் துயர்க்கடலுள் ஆழ்ந்து அழியப் போகி றாய். நான் எத்துணை அறிவுரை கூறியும் நீ கேட்கின் றாய் இல்லை. நான் கூறுவன யாவும் உனக்கு நன்மை பயக்கும் உறுதி மொழிகளாம் என்பதை நீ உணர் வாயோ?'' என்று வினவுகிறாள்.

*அரசர்இல் பிறந்துபின் அரசர்இல் வளர்ந்து*
*அரசர்இல் புகுந்து பேரரசியான நீ*

*கரை செயற்கு அருந்துயர்க் கடலுள் வீழ்கின்றாய்*
*உரைசெயக் கேட்கிலை உணர்தியோ என்றாள்.*[1]
(ஷை 61)

கைகேயியைக் குறித்த இச்செய்திகளை மந்தரை அவளிடம் கூறியபின், பரதனின் நிலை பற்றிய வேறு சில செய்திகளையும் அவளிடமே விளக்கிக் கூறுகிறாள். பரதனிடம் இருக்கும் இளமை, அழகு, கல்வி, வலிமை, வீரம், வில்லாற்றல், அளவிட முடியாத நற்குணங்கள் அனைத்தும், அவன் அரசாளும் உரிமையை இழப்பதன் மூலம் புல்லில் உகுத்த அமுதம் போன்று பயனற்றுப் போகின்றனவே என்று இரங்கிக் கூறுகிறாள்.

கைகேயியின் கடுஞ்சினம்

மந்தரை தன் திறமையெல்லாம் கூட்டி இத்துணை நேரம் கைகேயியின் உள்ளத்தைக் கலைக்க முயன்ற முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. இராமனையும், கோசலையையும், தசரதரையும் பற்றி அவள் இதுகாறும் கூறிய கொடிய சொற்கள், நெருப்பில் நெய்யை வார்த்தாற் போலக் கைகேயியின் கோபத்தை அவளுக்கு எதிராக மூண்டு எழச் செய்தனவேயன்றி, அவள் எண்ணிய பயனை விளைக்கவில்லை. கைகேயி கோபத்தால் சிவப்பேறிய கண்களுடன் மந்தரையை விழித்து நோக்கி, "ஏ! கொடியவளே! சூரிய வம்சத்தரசர்கள் தம் உயிர் போனாலும், தம் முன்னோர்கள் கடைப்பிடித்து வந்த மரபு முறையினின்று விலகமாட்டார்கள் நான் பிறந்த கேகய குலத்தரசர்களும் அத்தகையோரே யாவர். நான் பிறந்ததும், புக்கதும் ஆகிய இரு குலங்களுக்கும் இழிவு தரும் வகையில் நீ என்ன சொல்லத் துணிந்தாய்?" என்று வெகுண்டாள். மந்தரையை, "அறிவுகெட்டவளே!" என்று அழைத்து "நீ எனக்கு நல்லவள் அல்லை; என் மகன் பரதனுக்கும் நல்லவள் அல்லை. தருமநெறிப்படி

[1] கரை செயற்கு அருந்துயர் - கரை காண முடியாத பெரிய துன்பம்.

நோக்கினால் உனக்கும் நீ நல்லவள் அல்லை. ஊழ்வினை வந்து தூண்டுவதால் நீ உனது மனதுக்கு நல்லன வென்று தோன்றிய சொற்களைக் கூறுகிறாய்.

*எனக்கு நல்லையும் அல்லை நீ; என் மகன் பரதன்,*
*தனக்கு நல்லையும் அல்லை நீ; தருமமே நோக்கின்,*
*உனக்கு நல்லையும் அல்லை; வந்து ஊழ்வினை தூண்ட,*
*மனக்கு நல்லன சொல்லினை மதி இலா மனத்தோய்!*[1]
(ஷை 65)

மேலும் கேள், பிறத்தலும் இறத்தலும் ஆகிய நியதிகளுக்கு உட்பட்டு வாழும் மக்கள் இவ்வுலகில் பெறுவதும், இழப்பதும் ஆகிய பொருள் புகழ் ஒன்றேயாம். ஒருவன் தன் தனித்தன்மை அழிய நேரினும், நடுநிலையைக் கைவிட நேரினும், ஒழுக்க நெறியினின்று விலக நேரினும், தவ ஒழுக்கத்தில் சிதைய நேரினும், வீரத்திற்குக் களங்கம் ஏற்பட்டாலும் அவற்றைப் பொறுத்துக் கொள்ளலாம்; மன்னித்தும் விடலாம். ஆனால் எவரும் முன்னோர்கள் பேணிவந்த மரபு முறையை மட்டும் திறம்புதல் கூடாது. அது பொறுத்தற்கரிய குற்றம் ஆகும்.

*பிறந்து இறந்துபோய்ப் பெறுவதும் இழப்பதும் புகழே;*
*நிறம் திறம்பினும், நியாயமே திறம்பினும், நெறியின்*
*திறம் திறம்பினும் செய்தவம் திறம்பினும் செயிர்தீர்*
*மறம் திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ?*[2]
(ஷை 66)

மரபு முறையைக் கடைப்பிடிப்பதே உலகில் புகழை நிலை நிறுத்தும் வழி என்பதை நீ அறியாய். பேதாய்! நீ எனக்கு எதிரே நில்லாதே; அகன்றுவிடு. தீய சொற்களைக் கூறிய உனது நாவை அறுத்திருக்க வேண்டும்.

---

[1] மனக்கு - மனதுக்கு.

[2] நிறம் - மனிதற்குரிய தனித்தன்மை. நெறியின் திறம். அறநெறியில் உறுதிப்பாடு. செயிர்தீர் - குற்றமற்ற. வழக்கோ? - முறைமையோ?

பொறுமையைக் கடைப்பிடித்து அதைச் செய்யாதுவிட்டேன். உனது புன்சொல்லைப் பிறர் அறிய நேர்ந்தால், நீதிக்கும் நெறிமுறைக்கும் மாறான செயல்களை நினைத்த குற்றத்திற்கு நீ ஆளாவாய். அறிவு கெட்டவளே! நீ வாயடங்கு'' என்று சினந்து பேசினாள்.

*'போதி என்எதிர் நின்று; நின் புன்பொறி நாவைச்*
*சேதியாது இது பொறுத்தனன்; புறம் சிலர் அறியின்*
*நீதி அல்லவும், நெறிமுறை அல்லவும், நினைந்தாய்*
*ஆதி; ஆதலின், அறிவுஇலி! அடங்குதி' என்றாள்.*[1]
(ஷை 67)

(கைகேயி மந்தரையைக் கடிந்து கூறும் இச்சொற்களிலிருந்து அவளது உள்ளத்தைக் கெடுக்க முயன்ற மந்தரையின் முயற்சிகள் யாவும் வெற்றி பெறவில்லை என்றும், கைகேயியின் உள்ளம் முன்போலவே அறவுணர்வில் ஊன்றி நிற்கிறதென்றும் கம்பர் நமக்கு உணர்த்துகிறார்.

மந்தரை கைகேயியின் காலடியில் வீழ்தல்

மந்தரை, கைகேயியின் வெஞ்சினத்துக்கும், கடுஞ்சொல்லுக்கும் அஞ்சியதாகத் தெரியவில்லை. அவள் அவ்விடத்தை விட்டகலாமல் அங்கேயே நின்றுகொண்டிருக்கிறாள். கைகேயியை நோக்கி, ''எனக்குப் புகலிடமாக உள்ளவளே! வஞ்சிக்கொடி போன்று மென்மையானவளே! நீ என்னை எவ்வளவு கடிந்துரைத்தாலும், உனக்கு நன்மையான சொற்களைச் சொல்வதை நான் கைவிட மாட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே அவள் காலடியில் வீழ்கிறாள்.

(முன்பு கைகேயி, இராமனது பட்டாபிஷேகச் செய்தியை மந்தரை வாயிலாக அறிந்த மகிழ்ச்சியில் அவளுக்கு

1 சேதியாது - அறுக்காமல். நினைந்தாய் ஆதி - நினைந்தவள் ஆவாய் (குற்றத்திற்கு ஆளாவாய்). அடங்குதி - உன் தீய எண்ணத்தைக் கைவிடு.

முத்துமாலையைப் பரிசளித்தபோது, அதனை ஏற்காமல் கைகேயி மீது கடுஞ்சினங்கொண்டு அதட்டிப்பேசி, அம் மாலையை மண்ணில் வீசி எறிந்தவளும் மந்தரையே. இப்பொழுது தீய சொற்களைக் கூறியதற்காக மந்தரையின் நாக்கை அறுக்க வேண்டுமென்று கைகேயி சினந்து கூறியபோது, அதே மந்தரையே பணிந்து ஒடுங்கி அவள் காலில் விழுகிறாள். எதிராளி கெஞ்சும்போது மிஞ்சியும், மிஞ்சும்போது கெஞ்சியும் சமயோசிதம் போல் நடந்து கொள்கிற மந்தரையின் அறிவுத்திறன் இங்குப் புலப்படுவதைக் காணலாம்.)

கைகேயியின் காலடியில் வீழ்ந்த மந்தரை மேலும் தொடர்ந்து தருக்க ரீதியாக அவளுக்கு அறிவுரை கூறுகிறாள். '' 'அரசுரிமை மூத்தவனைச் சேர்வதே முறை' என்கிறாயே! அவ்வாறாயின் மூத்தவரான தசரதர் இருக்கும்போது இராமன் அரசனாவது எங்ஙனம் பொருந்தும்? அதற்கு இசைவளிக்கும் விதிமுறை பரதனை மட்டும் விலக்குவது எங்ஙனம்?

*மூத்த வற்குரித்து அரசுஎனும் முறைமையின் உலகம்*
*காத்த மன்னனில் இளையன் அன்றோ கடல்வண்ணன்*
*ஏத்து நீள்முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால்*
*மீத்தரும் செல்வம் பரதனை விலக்குமாறு எவனோ?*[1]
(ஷை 69)

என்று வினவுகிறாள்.

''மேலும் கேள்! பெறுதற்கரிய செல்வத்தை ஒருவன் பெற்றானானால் அதன்பின் அவன் அறமும், அருளும் நிரம்பிய தவசியாக இருப்பினும், மனம் மாறிவிடுவது இயற்கை. இராமன் அரசனாக வந்தால் அவனும் உள்ளம் திரிந்து, கொடிய செயல்களைச் செய்து உங்களுக்குப் பெருந்துன்பத்தை இழைக்காமற் போனாலும், உங்கள் மனம் வருந்தும்படியான இடையூறுகளை இயற்றிக்

[1] கடல்வண்ணன் - இராமன். ஏத்து - புகழ்தற்குரிய. மீத்தரும் - மேன்மையை அளிக்கும். எவன்? - எங்ஙனம்.?

கொண்டே இருப்பான். இராமன் அரசனானால் அவன் ஆளும் உலகமுழுவதும் கோசலைக்கு உடைமையாகி விடும். அப்போது அவள் அளித்த பொருளையன்றி வேறெந்தப் பொருளை இவ்வுலகில் உனக்கும் உன் மகனுக்கும் உரிமையாகக் கூறமுடியும்?.

''உனது உறவினர்களில் எவரேனும் துன்பம், வறுமை இவை காரணமாக உதவி நாடி உன்னிடம் வந்தால், நீ அவர்களுக்குக் கொடுக்க விரும்பிய பொருளைக் கோசலையிடமிருந்து இரந்து பெற்று அளிப்பாயா? அல்லது அவளை இரப்பதற்கு நாணுவாயா? அல்லது ஈய முடியவில்லையே என்ற வருத்தத்தால் இறந்து விடுவாயா? அல்லது கொடாமலே இருந்து விடுவாயா? நீ சிந்தனைத் தெளிவின்றித் திகைப்புற்றிருக்கிறாய். உனது தந்தையோ, தாயோ, சுற்றத்தாரோ, குலத்தவரோ தாமுற்ற வறுமையையும், எளிமையையும் உனது உதவி பெற்றுப் போக்கிக் கொள்ளலாமென்று உன்னை நாடி இங்கு வந்தால், அவர்கள் காண்பது உனது மாற்றாளின் செல்வமன்றோ? சிந்தித்துப் பார்.'' என்று கூறுகிறாள்.

(கேகயர் அரசிழந்து வறுமையுற்றுத் தம் தேவியுடன் உதவிநாடி அயோத்திக்கு வருவதான ஒரு சூழ்நிலையை. அவருக்குச் சிறுமை தோன்றும்படி மந்தரை கற்பனை செய்து கூறியதற்காகக் கைகேயி அவளைக் கடிந்து கொள்ளாமல், அதனை உண்மையில் நடந்துவிடக்கூடிய செய்தி போல் ஏற்று அமைவது, மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயியின் உள்ளம் திரிந்துள்ளது என்பதையே உணர்த்துகிறது.)

### கேகயன் ஆட்சிக்கு ஆபத்து வரும் எனல்

இறுதியாக மந்தரை முன்பு கூறியவற்றிலும் வன்மையுடைய கருத்தொன்றைக் கூறுகிறாள். பெண்கள் எப்பொழுதுமே தம் தந்தை, தாய், சகோதரர், சுற்றத்தார் இவர்களது நல்வாழ்வில் அக்கறை யுடையவர்களாக இருப்

பார்கள். மந்தரை இவ்வுணர்வைக் கைகேயியின் உள்ளத்தில் தூண்டுகிறாள். “உனது கணவராகிய தசரதரை அஞ்சி, சீதையின் தந்தையாகிய ஜனகர் உனது தந்தையாகிய கேகயரைப் போரில் அழிக்காமல் இருக்கிறார். இராமன் அரசனாய்விடின் அதன்பின் உன் தந்தைக்கு வாழ்வுண்டோ? ஏ! பேதாய்! பழிபடப் பிறந்தவர்களில் உனக்கு ஒப்பாவார் யாருளர்? உனது தந்தைக்குப் பகைவர்கள் பலர். அவர்கள் உன் தந்தைமீது தண்டெடுத்துச் சென்ற வேளைகளி லெல்லாம் உன் கணவர் சென்று உன் தந்தையைக் காப்பாற்றியுள்ளார். இராமன் அரசனாகி, அதனால் உன் கணவர் சென்று உதவ முடியாத நிலை வரும்போது, உன் தந்தைக்கு வெற்றி எங்கே கிடைக்கப் போகிறது? நீ உனது சுற்றமெல்லாம் அழியும்படி துயர்க் கடலுள் விழத் துணிந்திருக்கிறாய்.” என்று வருந்தி உரைத்தாள்.

(ஆன்மிகத் துறையில் மிகவுயர்ந்த ஜீவன்முக்தர் நிலையில் இருப்பவரும், தாமரையிலைத் தண்ணீர் போன்று பற்றற்றுக் கடமையாற்றும் ஞானியர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறப்படும் தெய்வ மனிதரும் (godly man) ஆன ஜனகமகாராஜாவை, வேற்றரசர்களின் மண்ணில் ஆசைவைத்து, வீரர்கள் மடிவதையும் பொருட்படுத்தாமல் போருக்குச் செல்லும் இயல்புடையவராக மந்தரை கூறுவது, அவள் தன் கருத்தை வலியுறுத்துவதற்கு எந்தப் பொய்யையும் சொல்லத் தயங்காதவள் என்பதையே புலப்படுத்துகிறது. மந்தரை ஜனகரை இவ்வாறு அவமதிப்பாகக் கூறுவதற்கு அவர் இராமனின் மனைவி சீதையின் தந்தையாக அமைந்ததே காரணம் ஆகும். இராமன் மீது மந்தரைக்கிருந்த வெறுப்புணர்வே சீதை மீதும், ஜனகர் மீதும் பரவுகிறது. ஆகையால்தான் அவள் ஜனகரைக் ‘கனிவாய்ச் சீதை தந்தை’ என்று குறிப்பிடுகிறாள். கனிவாய் என்ற அடைமொழியும் அவள் சீதை மீது கொண்ட வெறுப்பின் வெளிப்பாடாகவே கருதற்பாலது.)

மந்தரை இவ்வாறு இராமன் முடிபுனைந்து அரசனாக வரின் தனக்கு வரவிருக்கும் சிறுமை, பரதன் அடையப் போகும் பேரிழப்பு, கைகேயி எய்தவிருக்கும் இழிநிலை, அவள் தந்தைக்கும் உறவினருக்கும் நேரவிருக்கும் பேரழிவு இவற்றை விளக்கிக் கூறி, கைகேயி இவை குறித்துச் சிந்திக்காமல் இருப்பதற்காக அவளை நொந்து கொள்ளுகிறாள். 'கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்', 'அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்' என்பன அனுபவ வாயிலாகப் பிறந்த பழமொழிகள் அல்லவோ? இவ்வுண்மையை அதிவீரராம பாண்டியர் 'வெற்றி வேற்கை' யுள்

*பொய்யுடை ஒருவன் தன் சொல்வன்மையால்*
*மெய் போலும்மே மெய் போலும்மே*

என்று பாடுகிறார். ஒரு பொய்யையே திரும்பத் திரும்பச் சொன்னால் அது மெய்போன்று தோன்றிவிடும் என்பது ஜெர்மானிய அரசியல் வாதியான கோபெல்ஸ் என்பவனின் கொள்கையாகும். மந்தரை கைகேயியின் உள்ளுணர்வு களைத் தொடும்படி, தர்க்கரீதியாகக் காரணகாரிய முறையை ஒட்டி விளக்கிய கருத்துக்கள் அவளது கற்பனையின் விளைவுகளேயாயினும் அவை கைகேயியின் உள்ளத்தில் எதிர்பார்த்த பயனை விளைக்காமற் போக வில்லை. இராமன்மீது பெரும் பற்றுடைய கைகேயியின் தூய சிந்தையும் திரிந்துவிடுகிறது. கைகேயியின் அற வுணர்வுடைய உள்ளம் மந்தரையின் சூழ்ச்சியால் மட்டும் மாறுபட்டதென்பதைக் கம்பர் உடன்படவில்லை. இதனினும் வலுவுடைய காரணங்கள் வேறு உண்டு என்கிறார். அரக்கர் செய்த பாவமும், இராவணனை அழிப்பதாகத் திருமாலிடம் தேவர்கள் பெற்றுள்ள வரமும், அந்தணர்களாகிய முனிவர்கள் இயற்றிய தவமும், இமையோர் மாயையும் வேறு காரணங்கள் என்கிறார். அவை பயன் விளைப்பதற்கு இராமன் அரசைத் துறந்து கானகம் செல்வது இன்றியமையாத தாதலால் அது நிகழ்தற் பொருட்டே மந்தரையின் சொல் ஏதுவாகக் கைகேயியின்

திரியாத சிந்தையும் திரிந்து, அவள் இரக்கத்தைக் கைவிட்டாள் என்கிறார்.

*தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி*
*தூய சிந்தையும் திரிந்தது; சூழ்ச்சியின் இமையோர்*
*மாயையும் அவர் பெற்ற நல்வரம் உண்மையாலும்*
*ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்*[1]

(ஷ 77)

*அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்*
*துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடவாள்*
*இரக்கம் இன்மையன்றோ இன்றுஇவ் உலகங்கள் இராமன்*
*பரக்கும் தொல் புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே.*[2]

(ஷ 78)

ஓர் உயர்ந்த பாத்திரமாகிய கைகேயி, மந்தரையின் சூழ்ச்சியால் உள்ளம் திரிந்து, இராமன் கானகம் செல்லக் காரணமாக அமைந்து, அதனால் உலகோர் பழிக்கு ஆளாக நேர்ந்தது குறித்துக் கம்பர் வருந்துவது அவர் பாடலில் புலனாகிறது.

---

[1] இமையோர் மாயையாலும், அவர்பெற்ற வரம் உண்மையாலும், அந்தணர் தவத்தாலும், மந்தரையின் சூழ்ச்சியாலும் தேவி தூய சிந்தையும் திரிந்தது எனக் கூட்டுக.

[2] அல்லவர் - அரக்கரல்லாத தேவரும், முனிவரும். துரக்க - செலுத்த. தூமொழி மடமாள் - கைகேயி.

## 5. கைகேயியின் சூழ்ச்சி

மன்னர் முன்பு அளித்த இரு வரங்களையும் கேட்குமாறு மந்தரை கைகேயியைத் தூண்டுதல்

மந்தரையின் சூழ்ச்சியால் மனம் மாறுபட்ட கைகேயியின் சொல்லும் செயலும் முன்னிலிருந்து முற்றிலும் வேறுபட்டுவிடுகின்றன. அவள் இதுகாறும் போற்றி வந்த அறத்தையும், மரபு முறையையும், புறக்கணிப்பதற்குத் தயாராகி விடுகிறாள், முன்பு தீயவள் என்று அகற்றிய மந்தரையை இப்பொழுது நல்லவள் என்று அணைத்துக் கொள்ளுகிறாள். அவளை அன்புடன் நோக்கி, அவளே தனக்கும் தன் மகனுக்கும் வேண்டியவள் என்று புகழ்கிறாள். பரதன் முடிசூடுவதற்கான வழிகளைத் தெரிந்து கூறுமாறு அவளிடமே வினவுகிறாள். இவ் அன்பு மொழிகளைக் கேட்ட மந்தரை தன் எண்ணம் பலித்துவிட்டது என்ற மகிழ்ச்சியில் கைகேயியை, ''என் தோழி வல்லள்; என் துணை வல்லள்'' என்று புகழ்ந்து பேசுகிறாள் ''என் சொற்படி நடப்பாயானால் இக் கோசல நாடு மட்டுமா, ஏழுலகையுமே பரதன் ஆளும்படி செய்வேன்'' என்று பெருமிதத்தோடு பேசி, பரதன் அரசனாவது உறுதி என்ற நம்பிக்கையைக் கைகேயிக்கு ஊட்டுகிறாள். கைகேயி வேண்டிக்கொண்டபடி பரதன் அரசனாவதற்குரிய வழியையும் கூறுகிறாள். மன்னர் சம்பராசுர யுத்தத்தில் கைகேயிக்கு அளித்த இரு வரங்களையும் அவளுக்கு நினைப்பூட்டி, அவற்றுள் ஒன்றால் பரதன் நாட்டை ஆள வேண்டும் என்றும், மற்றொன்றால் இராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் சென்று வாழ வேண்டும் என்றும் மன்னரிடம் கேட்குமாறு தூண்டுகிறாள். 'இராமன் மூத்த புதல்வன் என்ற முறையில் தனக்கு உரிமைப்பட்ட நாட்டை இழப்பது மட்டும் போதாதா; காட்டில் சென்று பதினான்கு ஆண்டுகள் வாழ்கிற அறக்கொடிய தண்டனைக்கும் ஆளாக வேண்டுமா? மந்தரை பரதனுக்கு ஆட்சி கிடைப்பதற்குரிய உபாயத்தைக் கூறியதோடு நில்லாமல்,

இராமனைக் காட்டிற்கு அனுப்புமாறு ஏன் கைகேயிக்குத் துர்ப்புத்தி புகட்டுகிறாள்?'—அறவுணர்வுடையார் நெஞ்சம் இவ்வாறெல்லாம் வினவுவது இயற்கை. கம்பருக்கும் இத் தகைய எண்ணம் தோன்றியிருக்க வேண்டும். அதனாலேயே அவர் மந்தரையை, 'உள்ளமும் கோடிய கொடியாள்' (மந்தரை சூழ். 81) 'முதுகு கோணியதைப் போல மனமும் கோணிய கொடியவள்' என்று பழிக்கிறார்.

இராமனைக் காட்டிற்கு அனுப்புவதன் தேவை

(மந்தரை இரண்டாவது வரத்தால் இராமனைக் காட்டுக்கு அனுப்புமாறு தசரதரைக் கேட்கும்படி கைகேயியைத் தூண்டுவதில், அவளது கூரிய அறிவும், நெடுந் தொலை நோக்கும் புலனாகின்றன. இராமன் நாட்டு மக்கள் அனைவருடைய அன்புக்கும், ஏனைய அரசர்களுடைய நன்மதிப்புக்கும் பாத்திரமாக இருப்பதை மந்தரை நன்கறிவாள். கைகேயி ஒரு வரத்தால் பரதனை ஆட்சி பீடத்தில் இருத்தினால், நாட்டு மக்களும், அரசர்களும் ஒன்றாகக் கூடி, இராமனுக்கு அனுகூலமாகக் கிளர்ச்சி செய்து, அதனால் பரதனது ஆட்சிக்கு ஆபத்து வந்துவிடக் கூடாதே என்று மந்தரை எண்ணுகிறாள். 'இராமன் காட்டிற்குச் சென்று பதினான்கு நெடிய வருடங்களை அங்குக் கழித்துவிட்டால், மக்கள் அவனை முற்றிலுமாக மறந்துவிடுவார்கள். நிறைகுணத்தவனான பரதனின் செவ்விய ஆட்சியில் அவர்கள் பூரண திருப்தி அடைந்து விடுவார்கள். இராமன் பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் உயிரோடு திரும்பிவந்தாலும், பரதனது ஆட்சியே நீடிக்கவேண்டுமென்று மக்கள் கூறி விடுவார்கள்.' இவ்வாறெல்லாம் சிந்தித்தே இருவரங்களை மன்னரிடம் கேட்குமாறும், இரண்டாவது வரத்தால் இராமனைக் காட்டிற்கு அனுப்பி வைக்குமாறும் மந்தரை கைகேயியைத் தூண்டுகிறாள்.)

மந்தரை கூறிய இரு உபாயங்களையும் கேட்ட கைகேயி உவகைக் கடலுள் மிதந்தவளாய், மந்தரையைக்

கட்டித் தழுவி, பல பரிசுகளையும் வழங்குகிறாள். "என் மகனுக்கு நாட்டை அளித்தமையால் அவனுக்குத் தாய் நீயே" என்று அவளை வானளாவப் புகழ்கிறாள். "நீ கூறியபடியே இரு வரங்களையும் அரசரிடம் கேட்டுப் பெறுவேன். அவர் தர மறுத்தால் அவர் முன்னிலையில் என் உயிரையே விட்டுவிடுவேன்" என்கிறாள். மந்தரை தான் வகுத்த சூழ்ச்சியில் கைகேயியைச் செயல்படுமாறு ஏவி விட்டு, தான் இன்றியே யாவும் முறையாக நடந்து கொள்ளும் என்ற நம்பிக்கையில் கைகேயியின் முன் னிலையிலிருந்து அகன்று விடுகிறாள்.

கைகேயி நகைகளைக் கழற்றி எறிதல்

உறக்கம் கலைந்த பின்பும், படுக்கையில் இருந்து கொண்டே இதுகாறும் மந்தரையுடன் உரையாடிய கைகேயி அவள் அகன்ற பின், அவள் கூறிச்சென்ற உபாயங்களை நிறைவேற்றும் முயற்சியில் தலைப்படு கிறாள். முதலில் படுக்கையிலிருந்து எழுந்து, கூந்தலிற் சூடியிருந்த மாலையை இழுத்துப் பிய்த்து எறிகிறாள். மேகலை, கிண்கிணி, வளையல்கள் முதலிய அணிகளைக் கழற்றி, அவை அறை முழுவதும் தனித் தனியாகச் சிதறி விழும்படி எறிகிறாள். மங்கலப் பெண்களின் நெற்றி யைவிட் டகலாது அதனை அலங்கரிக்கும் திலகத்தையும் அழித்து விடுகிறாள். (திலகத்தை அழித்தது ஓர் அமங் கலச் செயலாகவும், பின் நிகழப்போகும் தீமைக்கு முன்னறிவிப்பாகவும் கருதப்படும்.) கைகேயி கூந்தலை அவிழ்த்து விரித்து, அது அறை முழுவதும் பரவும்படி மண்ணில் வீழ்ந்து கிடக்கிறாள். கண்ணில் தீட்டிய அஞ் சனம் கரையும்படி அழுது, கண்ணீரைப் பெருக்குகிறாள் கைகேயி மாலையையும், மேகலை முதலிய அணிகளை யும் கழற்றி எறிந்த செயலைக் கம்பர் தக்க உவமைகள் மூலம் விளக்குகிறார், கரிய கூந்தலில் செருகிய மாலை யைப் பிய்த்ததற்கு, மேகத்தினூடு செல்லும் சந்திரனைப் பிதிர்த்ததையும், மேகலையை அறுத்தெறிந்ததற்குப்

புகழாகிய கொடியை அறுத்ததையும், நெற்றியிலுள்ள திலகத்தை அழித்ததற்குச் சந்திரனிலுள்ள களங்கத்தைத் துடைத்ததையும், அணிகலன்கள் எதுவுமின்றிப் பொலிவிழந்து கிடக்கும் தோற்றத்திற்குப் பூவுதிர்ந்த கொம்பையும் உவமை கூறுவது நயமுடையதாகும். கைகேயியின் கோலத்தைக் கம்பர் விளக்கும் பாடல்களில் ஒன்றைக் காண்போம்.

*நவ்வி வீழ்ந்தென நாடக மயில் துயின்றென்னக்*
*கவ்வை கூர்தரச் சனகியாம் கடிகமழ் கமலத்து*
*அவ்வை நீங்குமென்று அயோத்தி வந்தடைந்த*
*அம் மடந்தை*
*தவ்வையாம் எனக்கிடந்தனள் கேகயன் தனையை*[1]
(மந்தரைசூழ். 88)

மானும், மயிலும் கிடந்தாற் போன்று மண்ணில் வீழ்ந்து கிடக்கும் கைகேயியின் அமங்கலமான கோலத்தைக் கம்பர், சீதையாகிய இலக்குமி அயோத்தியை விட்டு நீங்கப் போகிறாள் என்று தெரிந்து, இலக்குமியின் மூத்தவள் அயோத்திக்கு வந்து கிடந்ததாக வருணிப்பது மிக்க சுவைபயப்பதாகவும், அவருடைய கற்பனை வளத்துக்குச் சான்றாகவும் உள்ளது.

### கைகேயியின் தலைவிரிகோலம்

தசரதச்சக்கரவர்த்தி மறுநாள் நடை பெறவிருக்கும் முடிசூட்டு விழாவிற்கு வேண்டிய ஏற்பாடுகளை நிறைவேற்றிவிட்டு, இரவில் நடுநிசிப் பொழுதில் கைகேயியைக் காண அவள் மாளிகைக்கு வருகிறார். வருபவர்க்குப் பேரதிர்ச்சி ஒன்று காத்திருக்கிறது. அங்கே கைகேயி மலர்ப் படுக்கையில் கிடவாமல், தரையில் வீழ்ந்து கிடப்பதை மன்னர் காண்கின்றார். கண்டதும், 'அவளுக்கு என்ன துன்பம் நேர்ந்ததோ?' என்று கவன்று மனம்

---

[1] நவ்வி-மான். கவ்வை-துன்பம். கடி-வாசனை. கமலத்து அவ்வை-இலக்குமி. தவ்வை-மூதேவி. தனையை-மகள்.

தளர்கிறார். விரைந்து சென்று தம் அன்பு மனைவியை இரு கைகளாலும் தழுவித் தூக்குகிறார். அவர் தூக்கிய பான்மையைக் கம்பர், ஒரு யானை, மான் ஒன்றைத் தூக்கியதைப்போன்றிருந்ததாகக் கூறுவது நயம் சிறந்ததாகும்.

மன்னர் அணைத்தெடுத்த கையை உதறுதல்

அன்புடன் அணைத்தெடுத்த கையைக் கைகேயி உதறிவிட்டு, மின்னல் துவள்வதைப் போன்று மண்ணில் கிடந்து புரள்கிறாள். இப்புதிய அனுபவத்தைக் கண்டு அவள் அவ்வாறு செயல்படுவதன் காரணத்தை அறிய மாட்டாமல் நெஞ்சம் கலங்குகின்ற மன்னரிடம் அவள் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசாமல் பெருமூச்சு விடுகிறாள். மன்னர் அவள் நிலை கண்டு அஞ்சி, அவளிடம், ''என்ன நடந்தது? ஏழுலகிலும் வாழ்பவர்களுள் எவரேனும் உன்னை இகழ்ந்தாராயின் அவர் உடனே மாள்வர். நீ முதலில் நடந்ததைச் சொல். அதன்பின் நான் செய்வதைப் பார்'' என்று மனம் குழைந்து கூறுகிறார்.

கைகேயி வரங்களைக் கேட்டலும் மன்னர் இணங்குதலும்

கைகேயி, மார்பில் கண்ணீரை உகுத்துக்கொண்டு, ''உமக்கு என்மீது அருள் உண்டாயின், நீர் முன்பு தருவதாகக் கூறிய இருவரங்களையும் இப்பொழுது அளிப்பீராக'' என்று கூறினாள் அவள் உட்கருத்தை உணராத மன்னர், அவள் கேட்கப் போகும் வரங்களை மிக எளியவாகக் கருதிக்கொண்டு, அவற்றை அளித்து அவளை விரைவில் மகிழ்வித்து விடலாம் என்று எண்ணிச் சிரித்தபடியே அவளிடம், ''நீ விரும்பியதைத் தருகிறேன். அதில் சிக்கலம் காட்டேன். உன் மைந்தன் இராமன் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்'' என்று கூறினார்.

(ஆணையிடுபவர்கள் எதிராளிக்குத் தன் சொல்லில் நம்பிக்கை உண்டாவதற்காகத் தமக்குரிய பொருள்களில்

சிறந்த ஒன்றின் மீது ஆணையிட்டுக் கூறுவதே பெரு வழக்காகும். தசரதரும் தாம் உலகில் பெருஞ்செல்வமாக மதித்துப் போற்றும் இராமன் மீது ஆணையிடுகிறார். ஆணையிடும் போது தசரதர் இராமனைத் தன் மகன் என்று கூறாமல் கைகேயியின் மகன் என்று கூறி, அவன் தன்னைவிடக் கைகேயிக்கே உரிமையுடையவன் என் பதைக் குறிப்பிடுகிறார். அவர் இவ்வாறு கூறி வாய் மூடுமுன், கைகேயி இராமன் அரசை இழந்து காட்டிற்குச் செல்லும்படி தசரதரிடமே வரம் கேட்கிறாள். இங்குத் தசரதரின் பெருந்தகை உள்ளத்திற்கும், கைகேயியின் தீய உள்ளத்திற்குமிடையே முரண் அமைந்து கைகேயி யின் கொடுமையைப் பன்மடங்கு மிகுத்துக் காட்டுகிறது.)

கைகேயி வரங்கள் இன்னவெனக் கூறியபோது மன்னருற்ற அவலம்

கைகேயியின் வஞ்சத்தை உணராத தசரதர் மேலும் அவளிடம் அன்பு கனிய, ''நீ என்பால் வரம் பெறுவதற்கு இத்துணை வருத்தத்தையும், துன்பத்தையும் அடைய வேண்டியதில்லையே. உனக்கு வேண்டியதை இப் பொழுதே கேள்'' என்றார். உடனே கைகேயி, ''இரண்டு வரங்களில் ஒன்றால் என் மகன் பரதன் நாட்டை ஆள வேண்டும். மற்றொன்றால் சீதை கணவன் காட்டை ஆள வேண்டும்'' என்று கூறினாள்.

*'ஏய வரங்கள் இரண்டின், ஒன்றினால், என்*
*சேய் உலகாள்வது; சீதை கேள்வன் ஒன்றால்*
*போய்வனம் ஆள்வது' எனப் புகன்று, நின்றாள்*
*தீயவை யாவையினும் சிறந்த தீயாள்.*[1]

(கைகேயி சூழ். 10)

இவ்வரங்களைக் கேட்ட கைகேயியைக் கம்பர், 'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' என்று பழிக்கிறார். கம்பர்

[1] சேய் - மகன்; பரதன்.

மேலும் கைகேயியை, விடநாகம் என்றும் அவள் கேட்ட வரத்தை அவள் உமிழ்ந்த விடம் என்றும் குறிப்பிடு கிறார். இதைக் கேட்ட தசரதரின் நிலையைக் கம்பர் சோக உணர்வுடன் சித்திரிக்கிறார். கைகேயியின் சொற் கள் காதில் புக்கதும் தசரதர் நடுங்குகிறார்; உடல் முழுவதும் வெதும்புகிறார்; தரையில் கிடந்து புரளுகிறார். கொல்லன் உலையிலிருந்து வெளிவரும் நெருப்புப் போல் வெய்துயிர்க்கிறார். கண்கள் இரத்தத்தைச் சிந்துகின் றன; நாக்கு உலர்கிறது; மனம் தளர்வடைகிறது; உள் ளத்தில் கவலை மிகுகிறது; ஐம்புலன்களும் சஞ்சலமடை கின்றன. உயிர் உடலைவிட்டு நீங்குவதைப் போன்ற நிலையை அடைகிறார்; பாம்பின் விடத்தால் ஊக்கம் அழிந்து விழும் யானை போலத் தரையில் சாய்கிறார். பின்பு மனத்தைத் தேற்றிக்கொண்டு எழும்பி நிற்பார்; விம்முவார்; மீண்டும் தரையில் வீழ்வார்; உயிர்ப்படங்கி, ஓவியம் போன்று காட்சியளிப்பார். பாவியாகிய கைகேயி யைப் பற்றித் தரையில் எற்ற எண்ணுவார். அது செய் தால் பெண் பழிக்கு ஆளாக நேருமே என்று நாணுவார். வெப்பத்தோடு பெருமூச்சு விட்டுக்கொண்டே அங்கு மிங்கும் நடப்பார். கண்ணை இழந்தவன் போலச் சோர் வார். அந்நிலையில் தசரதரைக் கம்பர், வெம்புண்ணில் வேல் நுழைந்த யானையோடு உவமிக்கிறார்.

(தசரதரின் பெருமையையும், தலைமையையும், கம்பீர மான தோற்றத்தையும், ஆற்றலையும் எண்ணும்போது, அவருக்கு ஒப்புக் கூற மத்த யானையே கம்பரின் மனக் கண்முன் தோன்றுகிறது. ஆதலால் அவர் தசரதரைப் பல இடங்களில் யானையோடு ஒப்பிடுகிறார். தசரதரை யானை என்றும், கைகேயியின் சொற்களை விடம் என்றும் கூறியதற்கேற்ப, அச் சொற்களைக் கேட்டு வெய்துயிர்த்து வீழ்ந்த தசரதருக்கு, அரவு தீண்டி, அதனால் வலிமை யடங்கி வீழ்ந்த யானையை உவமை கூறுவது மிகப் பொருத்தமாக உள்ளது.)

வெம்பி விழுந்தழும் தசரதரின் துன்பத்தைக் கண்டு தேவர்கள் நடுங்குகிறார்கள். அவ்வேளையில் உலகில் பிரளயமே நிகழ்வதைப் போன்றிருந்தது என்று கம்பர் பாடுகிறார். (தசரதரின் விம்மல் கண்டு அரண்மனையில் இருந்தவர்கள் அழுதார்கள் என்றோ, அச்செய்தி கேட்டு அயோத்திவாசிகளும், கோசல நாட்டாரும் நடுக்குற்ற னர் என்றோ பாடினாலும் கூட, தசரதருடைய தலை மைக்கும், மூவுலகிலும் பரவிய அவரது புகழுக்கும் பொருத்தமாக இராது என்று எண்ணிய கம்பர், மன்ன ரின் அழுகையின் விளைவு உலக வியாபகமாக இருந்தது என்று பாடுகிறார். கதையில் இவ்வாறு ஏதேனும் முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறும் வேளைகளில், அவற்றின் எதி ரொலிகள் மூன்று உலோகங்களிலும் சென்று தாக்கிய தாகக் கம்பர் பாடுவதை இராமாயணத்துள் பல இடங் களில் காணலாம்.)

### மன்னர் உற்ற அவலத்தைக் கண்டும் கைகேயியின் மனம் இரங்காமை

இவ்வாறு பேரரசர் வெம்பி அழுவதைக் கண்ட-போதும் கைகேயியின் உள்ளம் அஞ்சவோ, இரக்கம் கொள்ளவோ, நாணமடையவோ இல்லை. அது முன் போல வன்மையாகவே இருந்தது. கம்பர் கைகேயியின் நிலையை இவ்வாறு கூறிவிட்டு, அதை வெளியில் சொல் வதற்கே வெட்கமாக யிருக்கிறது என்று வருந்துகிறார். மேலும் அவர் தொன்றுதொட்டே பெண்கள் வஞ்சனை யுடையவர்கள் என்றும், அவர்களிடம் காணப்படுவது உண்மைநிலை யன்று; வேடமே என்றும், அவர்களைப் பற்றுக்கோடாகக் கொள்ளல் ஆகாது என்றும் பெரி யோர்கள் மொழிவதையும் எடுத்துக் கூறுகிறார். (பெரி யோர்களின் கருத்தாகக் கம்பர் கூறும் இக் கூற்று, மாதர் உலகையே அவமதிப்பது போல் தோன்றினும், அதனை உண்மையில் கைகேயியின் நிலையை விளக்கக் கூறியதாகவே அமைதி காணுதல் வேண்டும்.)

தசரதர் கைகேயியின் பிடிவாத குணத்தைக் கண்டு அதன் காரணத்தை அறியமாட்டாதவராய், அவளிடம் "நீ பிரமம் (திகைப்பு) உற்றிருக்கிறாயா? யாராவது வஞ்சனைப் புத்தியை உனக்குப் புகட்டிவிட்டார்களா? உண்மையைச் சொல்" என்று வேண்டினார். கைகேயி "எனக்குப் பிரமமும் இல்லை; யாரும் எதையும் எனக்குக் கூறியதும் இல்லை. முன்பு எனக்குத் தருவதாகச் சொன்ன வரங்களைத் தந்தால் கொள்வேன். இல்லையேல் வசை உம்மாட்டு நிற்க, நான் இறந்தொழிவேன்" என்றாள். இக்கொடிய சொல்லைக் கேட்டதும், இராமனையன்றித் தமக்கு வேறு உயிர் இல்லாத மன்னர், அவன் காட்டிற்குச் செல்ல வேண்டுமென்று கைகேயி கூறிய சொல்லைத் தாங்கமாட்டாதவராய், வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற் போல மனம் கலங்கி மயங்கிச் சோர்ந்து விழுகிறார். 'வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற்போல்' என்னும் இவ்வுவமையைக் கம்பர் முன்பும்,

> .. .. .. வன் கைவேல் வெம்
> புண் நுழைகிற்க உழைக்கும் ஆனை போல்வான்.
> (கைகேயி சூழ் 15)

என்று கூறியது நினைவிருக்கலாம்.

மன்னர் இன்னல் உழத்தல்

மூவுலகையும் வென்ற தசரதர் ஒரு பெண்ணின் காரணமாக அடையும் அவலத்தைக் கம்பர் உள்ளம் உருக வருணிக்கிறார். தசரதர் மனம் உடைந்து, செய்வகை அறியாராய், கைகேயியை "ஏ கொடியவளே!" என்று கூறுகிறார்; "தாம் பேணி வந்த தருமமும் கொடியதாகிவிட்டதா?" என்று தம்மைத்தாமே கேட்கிறார், "உண்மை யாவும் அழிக" என்று நொந்து கூறி எழுகிறார். அடுத்த கணத்தில் உடம்பு தள்ளாடி வீழ்கிறார்; பெருமூச்சு விடுகிறார். "இவ்வுலகில் பெண்களே இல்லாதபடி அனைவரையும் என் வாளால் கொன்றுவிட்டு, நானும் கீழ்மக்களுள் ஒருவனாக அமையப்போகிறேன்" என்று கூறிக்

கொதித்தெழுவார்; கையோடு கையை மோதுவார்; கோபத்தால் உதட்டைக் கடிப்பார். உண்மை பேசுவதே குற்றம் என்று நொந்து கொள்வார். நெய் வார்க்கப் பெற்ற நெருப்பைப் போல் நெஞ்சம் கொதித்துத் தளர்வார். பின்பு கீழ் வருமாறு எண்ணுகிறார். 'இவளுக்கு வரத்தைக் கொடுத்தாலும் தீமை; இவளைத் தண்டித்தாலும் தீமை. எனவே, இவளைத் தண்டிப்பது குறித்து எண்ணுவதை விட, இவளிடம் இரந்து கேட்பதே நன்று'. இவ்வாறு எண்ணியவராய், பொறுமையை மேற்கொண்டு கைகேயியின் கால்களில் சென்று வீழ்கிறார். வீழ்ந்தவரைக் கம்பர் 'முடிமன்னர்கள் ஒருவர்க்கொருவர் முந்திக் கொண்டு தம் பாதத்தில் வந்து விழுகிற பேரரசராகிய தசரதர்' என்று கூறி, அவருடைய முன்னைய மேன்மையையும், இப்பொழுதைய பரிதாப நிலையையும் புலப்படுத்துகிறார்.

## தசரதர் கைகேயியை இரந்து வேண்டுதல்

தசரதர் கைகேயியிடம், "உன் மகன் பரதன் இவ்வரசை ஏற்றுக் கொள்ளமாட்டான். அவன் உடன்பட்டாலும் இவ்வுலகம் அதனை விரும்பாது. நீ உன் செயலின் மூலம் உலகம் விரும்பும் புகழை அடையமாட்டாய்; எல்லோரும் நிந்திக்கும் பழியே உன்னைச் சாரப்போகிறது. இராமன் காடேகுவதையும், பரதன் நாடாள்வதையும் தேவர்கள் உடன்படார். உலகத்தவரும் இராமனைப் பிரிந்து உயிர்வாழமாட்டார். இராமன் நான் சொன்னதற்காக அரசை ஏற்றுக் கொண்டான். அவனே உன் மகனுக்கு இந்தப் பூமியைக் கொடுப்பான். உனக்கு நான் என் கண்ணை வேண்டுமானாலும் தருகிறேன். உயிரைக் கேட்டாலும் இப்பொழுதே அதை உனக்குச் சொந்தமாக அளிக்கிறேன். பெண்ணே! நீ வண்மைக் குணமுள்ள கேகயனின் மகளன்றோ? வேண்டுமானால் நீ மண்ணைக் கொள். மற்றும் ஒன்றைக் கேட்டாயே! அதை மட்டும் மறந்துவிடு. (இராமன் கானகம் செல்ல வேண்டுமென்று

கைகேயி கேட்ட வரத்தைத் தன் வாயாற் கூறுதலும் இயலாத மன்னர் அதை மற்றொன்று என்று குறிப்பிடு வதன் நயத்தை ஓர்க.)

*கண்ணே வேண்டும் என்னினும் ஈயக் கடவேன்என்*
*உள்நேராவி வேண்டினும் இன்றே உனதுஅன்றோ*
*பெண்ணே வண்மைக் கேகயன் மாதே பெறுவாயேல்*
*மண்ணே கொள் நீ மற்றையதுஒன்றும் மறஎன்றான்.*[1]
(கைகேயி சூழ். 28)

"என் வாயால் நீ கேட்கும் வரங்களைத் தருவதாகச் சொன்னேன். நான் சொன்ன சொல்லிலிருந்து மாற மாட்டேன். நான் துன்பப்படும்படியான வார்த்தைகளைச் சொல்லாதே. ஒரு பேயை இரந்தாலும்கூட அது கேட்ட பொருளை ஈயுமே! நான் வேண்டியதைத் தந்தால் அது உனக்குப் பிழையாகுமா?'' தசரதர் இவ்வாறு கைகே யியை இரக்கிறார்.

### கைகேயி மன்னரைத் தம் வாய்மையைக் காப்பாற்றுமாறு தூண்டுதல்

ஆயினும் தீய கைகேயி மனம் இரங்காமல், "நீர் முன்பு வாக்களித்த வரங்களை இப்பொழுது கொடாமல் என்னைக் கோபிப்பீரானால், உலகில் வாய்மையைப் பேணுவதற்கு யார் இருக்கிறார்கள்?'' என்று கூறினாள். (சத்தியவிரதர் என்று புகழ்பெற்ற தசரதருக்குத் தாம் சொன்ன வார்த்தையை நிறைவேற்றும் கடப்பாடு உண்டு என்பதை அவருக்கு உணர்த்துகிறாள்.) பொய்யான சொற்களைக் காதாலும் கேட்டு அறியாமல், எப்பொழுதும் வாய்மையே பேசும் மன்னர், கைகேயி சற்றேனும் இரங் காமல் முன்னிலும் பிடிவாதமாகப் பேசுவதைக் கேட்டு உயிர்வெதும்பித் தளர்கிறார். மன்னர் 'இப்பெண் நஞ்சை யும் தீயையும் போன்றுள்ளாள்' என்று தனக்குள்ளே கூறி, அதற்காக நாணுகிறார்.

---
[1] உள்நேர்ஆவி - உள்ளே பொருந்திய உயிர்.

*நச்சுத்தீயே பெண்ணுரு அன்றோ? என நாணா*
*முச்சு அற்றார் போல் பின்னும் இரந்தே*
*மொழிகின்றார்.*[1] (ஷை 31)

தசரதர் நாணுவதாகக் கம்பர் கூறுகிறார். தசரதர் தவறான செயல் எதையும் செய்யவில்லையே; பின்னர் அவர் எதற்காக நாணவேண்டும்? கைகேயி செய்யும் தகாத செயலுக்காகவும், அதனால் அவளுக்கு வரும் பழிக்காகவும் தசரதர் நாணுகிறார். பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியாக மதித்து நாணமடைவது பெரியோர்களின் இயல்பாகும். இக்கருத்தையே திருவள்ளுவர்,

*பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்(கு)*
*உறைபதி யென்னும் உலகு.*[2] (1015)

என்று குறிப்பிடுகிறார்.

### இரண்டாவது வரத்தைக் கைவிடுமாறு மன்னர் வேண்டுதல்

மன்னர் பொறுமையை மேலும் கடைப்பிடித்து, அவளிடம் "உன் மகன் நாட்டை ஆள்வான். நீயும் அவனுடனிருந்து ஆளுக. உலகமெல்லாம் உன் வசமாக அமையட்டும். அதை உனக்குத் தந்துவிட்டேன். சொன்ன சொல் தவறேன். ஆனால்,

*என் மகன் என்கண் என்உயிர் எல்லா உயிர்கட்கும்*
*நன்மகன் நாடு இறவாமை நய என்றான்.*[3]
(ஷை 32)

நான் இதுகாறும் பேணிக்காத்த அறமே எனது அழிவுக்குக் காரணமாக இருப்பதை எண்ணி வருந்துகிறேன். என் நாக்கு வறள்கிறது. இராமன் நாட்டைவிட்டு அகல்வானாயின், பெண்ணே! நான் பிழைத்திரேன். என் உயிர் உன் அபயம்" என்று மன்றாடுகிறார்.

---

[1] முச்சு - மூச்சு.

[2] உறைபதி - உறைவிடம்.

[3] இறவாமை - நீங்காமை. நய - விரும்பு; அருள் செய்.

தசரதர் இரந்து கூறும் இவ்வுரைகளைக் கைகேயி ஏற்கவில்லை. அவள் கோபம் தணிந்திலது. நெஞ்சை மரம் போன்று வன்மையாக்கிக் கொண்டு, நாணத்தையும் கைவிட்டு, வரவிருக்கும் பழியையும் எண்ணாமல், "அரசே! 'தந்த வரத்தைக் கேளாதே' என்று கூறுவது உமது ஆற்றலுக்கு முரணாவது மட்டுமன்றி, தருமந்தானும் ஆகுமா?"

*...... தந்த வரத்தைத் தவிர்க என்றல்*
*உரம்தான் அல்லால் நல்அறம் ஆமோஉரை என்றாள்.*[1]
(ஷ 34)

கொடியவளான கைகேயி இவ்வாறு கூறிய பொழுதில், மன்னர் அவளிடம் "இராமன் முடிசூடாமல் காட்டிற்குச் செல்வானாானால் அக்கணமே என் உயிர் போய்விடும்" என்று கூறிக்கொண்டே இடியேறுண்ட மலைபோன்று மண்ணில் வீழ்ந்தார்.

(ஒருவன் உற்ற கலக்கத்திற்கும், அழிவிற்கும் இடியேறுண்ட நாகத்தை உவமை கூறுவதே பெருவழக்கு. கம்பர் இவ்வழக்கில் மாறுதல் செய்கிறார். தசரதர் நாகம் போன்று நஞ்சுடையவர் அல்லர் என்பதையும், மாறாக மலைக்குரிய 'அளக்கலாகா அளவும், துளக்கலாகா நிலையும், தோற்றமும்' உடையவர் என்பதையும் இதன் மூலம் உணர்த்துகிறார். முன்பு அவர் பல இடங்களில் தசரதரைப் பெருமிதம் உடைய யானையோடு உவமித்ததை நாம் அறிவோம்.)

கைகேயியின் பிடிவாத குணத்தைக் கண்டு மன்னர்
வெம்பித் தனர்தல்

வீழ்ந்த தசரதரின் அவல நிலையைக் கம்பர் தத்ரூபமாக விளக்குகிறார். வீழ்ந்தவர் துன்பக்கடலுள் ஆழ்ந்து, அக்கடலுக்கு எல்லை காணாது தவிக்கிறார். கைகேயியின்

1 உரம் - வலிமை.

உள்ளத்தின் புன்மையையும், அதனால் அவள் செய்யத் துணிந்த தீங்கையும், கூறிய கொடிய சொற்களையும், அச்சொற்கள் தம் உள்ளத்தைப் போழ்வதையும் எண்ணி, மறுகி, மண்ணில் புரளுகிறார். ''ஏ கொடியவளே! பெண்களுக்கு, உயிருக்குயிரான கணவர் இறப்பதன் முன், தாம் மரணமடைவதே புகழ் என்று கூறுவார்கள். இன்றுவரையிலும் எந்தப் பெண்ணும் தன் கணவனைக் கொன்றதில்லை. அங்ஙனம் இருக்க, நீ என்னைக் கொல்கின்றாயா! நீ உன் குற்றத்தை எண்ணாய்; மகளிர்க்குரிய முறைமையைக் கருதாய்; தருமத்தைச் சிந்தியாய்; மனம் இரங்காய்; கருணையைச் சிதைத்தாய். உனது நாக்காகிய அம்பினால் என் உயிரை உண்டாய். நீ செய்வது பாவச் செயல் என்பதை எண்ணுகிறாய் இல்லை. இராமனைக் காட்டுக்கு அனுப்புவதன் மூலம் அவனிடம் அன்புடைய உலகத்தார் அனைவரையுமே நீ கொல்லப்போகிறாய். பெண்கள் நாணம், மடம், அச்சம் ஆகிய பண்புகளை ஆபரணமாகக் கொள்வார்கள். அப்பண்புகளைப் பேணாதவர்கள் பெண்பாலராகக் கருதப்பட மாட்டார்கள். அவர் வடிவில் பெண்ணாகத் தோன்றினும் ஆண்பாலராகவே கருதப்பட வுள்ளார்கள். வலியினாலும், மதியினாலும் சிறப்புடையவராக எண்ணப்பட்ட, உலகை ஆளும் அரசர்கள் முதல் தேவர்கள் வரையிலுமுள்ள அனைவரையும் வென்ற எனக்கு, எனது வீட்டில் வாழும் ஒரு பெண்ணால் தீமை நேர்ந்ததென்று பிறர் சொல்லத்தக்க நிலையை அடைவேனோ?'' குன்றை ஒத்த தோளையுடைய சக்கரவர்த்தி, இவ்வாறு வாயாற் சொல்லி, ஆற்றாமையால் பெருமூச்சு விடுகிறார்; துன்பக் கடலுள் மூழ்குகிறார். உடலில் உயிர் இருக்கிறதா இல்லையா என்று காண்பார் ஐயுறும்படி மயக்கமடைந்து, மண்ணில் வீழ்ந்து கிடக்கிறார்.

(கம்பர் இங்குத் தசரதரை, 'குன்றை ஒத்த தோளையுடையவர்' என்று குறிப்பிடுவதன் மூலம், ஆற்றலும் வீரமும் மிக்க மன்னரது முன்னைய பெருமித நிலைக்கும். இப்பொழுது அவர் கைகேயியின் முன் வலியிழந்து செய

வற்றுக் கிடக்கும் அவல நிலைக்குமுள்ள முரண்பாட்டை விளக்கிக் கற்பவர்களுக்கு அவர் மீது கழிவிரக்கத்தை உண்டுபண்ணுகிறார்.

மன்னவர் வரத்தை ஈதலும், கைகேயி கவலையற்றுத் துயிலுதலும்

தசரதர் சிறிது நேரத்தில் உணர்வு வந்ததும் மண்ணில் கிடந்து புரளுகிறார். அவ்வேளையில் இரக்கமற்ற கைகேயி மன்னரிடம், "வரத்தைத் தந்துவிட்டு இப்பொழுது வருந்துவதால் பயன் யாது? உமது குலத்தில் பிறந்த சிபிச் சக்கரவர்த்தி வாய்மையைக் காப்பாற்றுவதற்காகத் தம் உடலையே அரிந்தாரன்றோ? எனக்குரிய வரத்தைத் தருவதானால் நான் உயிர் வாழ்வேன்; இன்றேல் உயிர் மாள்வேன்" என்றாள். இவ்வாறு கூறிய கைகேயியைக் கம்பர் உயிரை உண்ணும் நெருப்புக்கு ஒப்பாகக் கூறுகிறார். கேட்ட மன்னர், 'இக்கொடியவளுக்கு வரத்தைக் கொடுக்காவிட்டால் மடிவாள்' என்று எண்ணியவராய், "ஈந்தேன் வரம்; (நீ கேட்ட வரங்களை உனக்குத் தந்துவிட்டேன்.) எனது மகன் இராமன் வனத்திற்குச் செல்வதானால் நான் இறத்தல் திண்ணம். நான் இவ்வுலக ஆட்சியை விட்டு வானுலகிற் சென்று ஆள்வேன். ஆனால் அப்போது நீயும், உன் மகனும் மாயரப் பழிக்கு உள்ளாகித் தீர்வீர்கள்" என்று கூறித் தளர்ந்தார்.

இவ்வாறு துன்பமானது, கொலைவாளி போன்று தசரதரின் உள்ளத்தில் சென்று பாய, அதனால் அவர் செயல்மறந்து கிடக்கும் வேளையில், கைகேயி, மன்னர் 'ஈந்தேன் வரம்' என்று கூறித் தான் கேட்ட வரத்தை அளித்து விட்டார் என்ற மகிழ்ச்சியில் கவலையற்றுத் தூங்குகிறாள். (தான் பெற்ற வரத்தின் எதிர்காலத் தீய விளைவு குறித்தும், தன் கண்முன் புழுவாய்த் துடிக்கும் தசரதரின் துயரம் பற்றியும் கைகேயி சற்றேனும் கவலைப் படவில்லை என்பதை அவளது உறக்கம் புலப்படுத்துகிறது.)

மன்னரின் துன்பத்தில் இயற்கையின் பங்கு

தசரதர் படுகின்ற துன்பத்தை, அவரைச் சார்ந்தவர்களும், அவரால் ஆளப்படும் மக்களும் அறிந்து வருந்தினார்கள் என்று கூறுவதோடு அமையாமல், பகுத்தறிவில்லாத இயற்கைப் பொருள்களும் அத்துன்பத்தை அறிந்து வருந்தியதாகக் கம்பர் பல பாடல்களைப் பாடுகிறார். அப்பாடல்கள் அவலச்சுவை மிக்கனவாய், அவரது புலமைக்கும், கற்பனைக்கும் சான்றாக உள்ளன. அவற்றுள் இரு பாடல்களை இங்குக் காண்போம்:

*சேண்உலாவிய நாள்எலாம் உயிர் ஒன்று*
*போல்வன செய்துபின்*
*ஏண்உலாவிய தோளினான் இடர்எய்த*
*ஒன்றும் இரங்கிலா*
*வாள்நிலா நகை மாதராள் செயல்கண்டு*
*மைந்தர் முன் நிற்கவும்*
*நாணினாள் என ஏகினாள் நளிர் கங்குல்ஆகிய*
*நங்கையே.*[1] (ஷை 46)

இப்பாடல் கங்குல் மறைந்து, பொழுது விடிதலின் வருணனையாகும். கைகேயி நெடுங்காலமாகத் தசரதருடன் கூடி, இருவருக்கும் உயிர் ஒன்று என்று சொல்லும்படி வாழ்ந்து வந்தவள், இப்பொழுது தசரதர் துன்பத்துள் ஆழ்ந்து வருந்தும்போது, சற்றேனும் இரக்கம் கொள்ளாதிருக்கும் செயல்கண்டு, இரவுப் பொழுதாகிய நங்கை, ஆடவர் முகத்தில் விழிக்க நாணினாள் போல் அகன்று விட்டாள் என்பது இதன் கருத்தாகும்.

*எண்தரும் கடைசென்ற யாமம் இயம்புகின்றன*
*ஏழையால்*
*வண்டு தங்கிய தொங்கல் மார்பன் மயங்கி*
*விம்மிய வாறுஎலாம்*

---

1 சேண் உலாவிய நாள் - மிகுதியான நாள்கள். ஏண் - வலிமை. வாள் - ஒளி. நளிர் - குளிர்ச்சி.

*கண்டு நெஞ்சு கலங்கி அம்சிறையான*
*காமர் துணைக்கரம்*
*கொண்டு தம் வயிறு எற்றி எற்றி விளிப்ப*
*போன்றன கோழியே.*[1] (ஷ 47)

கைகேயி காரணமாகத் தசரதர் படும் துன்பத்தைக் கண்டு கோழிகள் ஆற்றாது, கடையாமத்தில் தமது இரு கைக ளாகிய சிறகுகளால் வயிற்றில் அடித்துக் கொள்கின்றன என்று கம்பர் கற்பனை செய்கிறார். மக்கள் படும் இன்ப துன்பங்களில் இயற்கையும் பங்கு கொண்டு, அதுவும் அவ்வுணர்வுகளை வெளியிடுவதாகப் புலவர்கள் கற்பனை யால் வருணிப்பதை ஆங்கிலத்தில் pathetic fallacy (இயற் கையின் பரிவுணர்வு) என வழங்குவர்.

முடிசூட்டு விழாக்காண மக்கள் மகிழ்ச்சியுடன் வருதல்

மறுநாள் பொழுது விடிந்ததும், நகரமாந்தர்கள் முடி சூட்டு விழாவைக் காண்பதற்காக வீதிகளில் திரண்டு வருகிறார்கள். அவர்களது மகிழ்ச்சியைக் கம்பர் உவமை வாயிலாக விளக்குகிறார். மக்களை, அறவுணர்வுடைய முதியவர், வேதியர், முதிய பெண்டிர், இளைஞர், இளைய மகளிர் என்று பகுத்துக் கொண்டு, அவர்கள் ஒவ்வொருவரும் அடைந்த மகிழ்ச்சிக்கு, முறையே தசர தர், வசிட்டர், கோசலை, இராமனது தம்பிமார்கள், திரு வினை ஒத்த சீதை இவர்கள் அடைந்த மகிழ்ச்சியை உவமை கூறுகிறார். உவமானமாகக் கூறப்படுவோரில், தசரதரின் மகிழ்ச்சிக்கு, ஆட்சிப் பொறுப்பு அவரைவிட்டு நீங்கப் போவதும், வசிட்டரின் மகிழ்ச்சிக்கு, இராமனது ஆட்சியில் வேதநெறி தழைக்கும் என அவர் எண்ணிய தும், கோசலையின் மகிழ்ச்சிக்குத் தன் கணவரைப்போல மகனும் உலகை நன்கு புரப்பான் எனக் கருதியதும், இராமனின் தம்பிமார்களும், சீதையும் மகிழ்வதற்கு

[1] எண்தரும் - எண்ணப்படுகிற. இயம்புதல் - கூவுதல். ஏழை - கைகேயி. தொங்கல் - மாலை. மார்பன் - தசரதர். காமர் - விருப்பம்.

அவர்கள் இராமன் மீது வைத்த அன்பும் காரணங்களா கும் என்பதை எளிதில் உணரலாம். இவ் உவமானங்கள் ஒவ்வொன்றையும் முதியவர், வேதியர் முதலிய உவ மேயங்கள் முறையே ஒப்பாவதற்கு, அவர்களிடையே நிலவும் ஒற்றுமை உணர்வையே காரணமாகக் கம்பர் கூறுகிறார். மகிழ்ச்சியடைந்தவர் வரிசையில் கம்பர் இரா மனைக் கூறாததன் காரணம் சிந்திக்கத்தகும். இராமன் ஆட்சிப் பொறுப்பை உணர்ந்தவனாதலால், அதனை அவன் தானாக விரும்பவில்லை. தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றவே அவன் அரசை ஏற்க இணங்கினான். இனி, சீதையின் மகிழ்ச்சியைக் குறிப்பிடும் போது அவள் திருவினை (இலக்குமியை) ஒத்தாள் என்கிறார். இரா மன் அரசை ஏற்கப் போவதால் இராஜ்ய லட்சுமி அடை யும் மகிழ்ச்சியைச் சீதையின் மகிழ்ச்சி ஒத்திருந்தது என்பது கம்பரின் கருத்தாகும்.

### இராமனை அழைத்து வருமாறு கைகேயி சுமந்திரரை ஏவுதல்

விழாக் காண வந்த மன்னர்கள், அந்தணர் முதலி யோர் விழா மண்டபத்தில் கூடியிருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தத்தம் புதல்வர்களுக்கே முடிசூட்டு விழா நடக்கப் போவதாக எண்ணி மகிழ்ச்சியடைகிறார் கள். வசிட்டர் வேதியர்களோடு அங்கு வந்து, சடங்குக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, தசரதரை அழைத்து வரும்படி சுமந்திரரை ஏவுகிறார். தசரதரின் அரண்மனைக்குச் சென்ற சுமந்திரர் மன்னர் அங்கு இல்லை என்பதையும், கைகேயியின் மாளிகைக்குச் சென் றுள்ளார் என்பதையும் அங்குள்ளவர் கூற அறிந்து, கைகேயியின் மாளிகைக்கு வருகிறார். சுமந்திரரைக் கண் டதும், கைகேயி இராமனை அழைத்து வரும்படி அவரி டம் கூறுகிறாள். சுமந்திரர் அரசியின் கட்டளையை ஏற்று, இராமனின் மாளிகைக்குச் சென்றதும், அங்கு இராமன் திருமாலைத் தியானித்துக் கொண்டிருப்பதைக்

காண்கிறார். கம்பர் இச் செய்தியை, இராமன் தன் திருவுள்ளத்தில் தன்னையே நினைப்பதாகக் கூறி, அவன் திருமாலின் அவதாரம் என்பதை நமக்கு நினைவுபடுத்துகிறார். சுமந்திரர் சிற்றன்னை அழைக்கும் செய்தியை இராமனிடம் கூறியதும், அவன் உடனே தேரிலேறி மன்னவர் அரண்மனைக்கு வருகிறான்.

தேரில் வரும் இராமனைக் கண்டு காதலுற்ற
பெண்களின் நிலை

இராமன் வரும் வழியில் பெண்களும், முனிவர்களும் அவனைக் கண்ட காட்சியைக் கம்பர் தம் புலமை வளம் தோன்ற வர்ணிக்கிறார். முன்னாளைய அரசர்கள் உலாவரும் போது அக்காட்சியைக் கண்ட பெண்கள், அவர்கள்மீது காதல் கொண்டு தம் நிறையழிந்து நின்றதாக, முத்தொள்ளாயிரம், மூவருலா முதலிய நூல்களில் பாடப்பட்டுள்ள மரபைப் பின்பற்றிக் கம்பரும் இராமனைக் கண்ட பெண்களின் நிலையைப் பாடுகிறார்.

*சுண்ணமும் மலரும் சாந்தும் கனகமும் தூவவந்து*
*வண்ண மேகலையும் நாணும் வளைகளும்*
*சிந்துவாரும்*
*புண்உற அனங்கன் வாளி புழைத்த தம்*
*புணர்மென் கொங்கை*
*கண்உறப் பொழிந்த காமவெம்புனல் கழுவுவாரும்*[1]
(டி 85)

பெண்கள் தம் வீதி வழியே வரும் இராமனை வரவேற்பதற்காக வாசனைப் பொருள், பூக்கள், சந்தனம் முதலியவற்றை ஏந்தி வருகிறார்கள். வந்தவர்கள் அவனைக் கண்டதும் அவன் மீது கொண்ட காதல் மிகுதியால் தமது நாணத்தைக் கைவிட்டதோடு மேகலை, வளை முதலிய

1 சுண்ணம் - வாசனைப் பொடி. கனகம் - பொன். வண்ணம் - நிறம். அனங்கன் - மன்மதன். கண் - நயனம். புனல் - நீர். புழைத்த - துளைத்த.

அணிகளும் கழன்றுவிழப் பெறுகிறார்கள். மன்மதன் அவர்கள் மார்பில் அம்புகளை எய்து துளைத்த புண்களை அவர்கள் தம் கண்களிலிருந்து பொழியும் வெப்பக் கண்ணீரால் கழுவுகிறார்கள்.

முனிவர்கள் இராமனது அழகையும், குணங்களையும், அவனது முன்னோர்களின் சிறப்புக்களையும் புகழ்ந்து கூறிவிட்டுத் தமது வாழ்நாளையெல்லாம் அவன் பெற்று நெடிதுநாள் உலகை ஆளுமாறு வாழ்த்துகிறார்கள். ஒரு சிலர் அவனைத்

*தாய்கையில் வளர்ந்திலன் வளர்ந்தது தவத்தால்*
*கேகயன் மடந்தை கிளர்ஞாலம் இவன் ஆள*
*ஈகையின் உவந்தனள்*[1] (டி 97)

என்று கூறுகிறார்கள்.

இராமன் தசரதரின் அரண்மனைக்குச் சென்று, அங்கு அவரைக் காணாமையால் கைகேயியின் அரண்மனைக்கு வருகிறான். இராமன் நேரே முடிசூட்டு விழா மண்டபத்திற்குச் செல்லாமல் சிற்றன்னையின் அரண்மனைக்குச் செல்வதைக் கண்ட முனிவர், அரசர் முதலியோர், இராமன் முடிசூடுமுன் தந்தையையும் சிற்றன்னையையும் வணங்கச் செல்வதாக எண்ணி, அவனைப் பாராட்டுகிறார்கள்.

பரதன் முடிசூட, இராமன் கானகம் செல்லுமாறு அரசர் பணித்ததாகக் கைகேயி கூறுதல்

இராமனை அழைத்து வருமாறு சுமந்திரரை ஏவி, பின் இராமனின் வருகையை எதிர்பார்த்து நிற்கும் கைகேயி, அவன் வரக் கண்டதும், தனக்குள் 'மன்னர் அவனை நாட்டைத் துறந்து காட்டிற்குச் செல்லும்படி தம் வாயாற் கூறார்; நானே கூறுவேன்' என்று எண்ணியவளாய், அவன் முன் செல்லுகிறாள். அன்புள்ளத்தோடு

[1] கிளர்ஞாலம் - விளங்கும் உலகம்.

அன்னைமுன் வருகிற இராமனைத் தீய எண்ணத்துடன் அணுகும் கைகேயியைக் கம்பர்,

*தாயென நினைவான் முன்னே கூற்று எனத்*
*தமியள் வந்தாள்.* (ஷ 103)

என்று குறிப்பிடுகிறார். சிற்றன்னையைக் கண்டதும் இராமன் அவளை மண்ணுற வணங்கி, அடக்க ஒடுக்க மாகக் கையால் வாய் புதைத்து, ஆடையை மடக்கிக் குழைந்து நிற்கிறான். அவன் தாயின் முன் அன்பு கனிய நின்ற கோலத்தைக் கம்பர்,

*அந்தி வந்து அடைந்த தாயைக் கண்ட ஆன்*
*கன்றின் அன்னான்.* (ஷ 104)

என்று பாடுகிறார்.

கைகேயி இராமனைப் பார்த்து, "உன் தந்தை உனக்குச் சொல்ல வேண்டுமென்று எண்ணிய செய்தி ஒன்று உண்டு. அதை நான் கூறுவது உனக்கு உடன்-பாடானால் கூறுகிறேன்" என்றாள். இவ்வாறு மொழிந்த கைகேயியைக் கம்பர்,

*... ... ... இரும்பினால் இயன்ற நெஞ்சின்*
*கொன்றுஉறழ் கூற்றம் என்னும் பெயர் இன்றிக்*
*கொடுமை பூண்டாள்.* (ஷ 105)

என்று குறிப்பிடுகிறார். இயமன் என்ற பெயரில்லாமல் அவன் செய்யும் கொலைத்தொழிலைச் செய்கிறவள் என்பது இவ்வடியின் கருத்தாகும். கேட்ட இராமன், "தந்தை ஏவ, தாய் அதை உரைக்கப் பெற்றால் நான் உய்ந்தவன் அன்றோ? என்னைவிட மேம்படப் பிறந்த வர்கள் உலகில் உண்டோ? எனக்குத் தந்தையும் தாயும் நீரே. கூறுவதைத் தலை மேற்கொள்வேன். கூறுமின்' என்று பணிந்தான். உடனே கைகேயி,

*ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனேஆள நீ போய்த்*
*தாழ்இரும் சடைகள் தாங்கித் தாங்க அரும்*
*தவம் மேற்கொண்டு*

*பூழிவெங்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி*
*ஏழிரண்டு ஆண்டின் வா என்று ஏவினன்*
*அரசன் என்றாள்.*[1] (ஷை 107)

'பதினான்கு ஆண்டுகள் கழிந்து வா' என்று கூறினால் இராமனுக்கு மலைவு தோன்றக் கூடும் என்று எண்ணிய கைகேயி அக்கருத்தையே 'ஏழிரண் டாண்டின் வா' என்று சுருக்க எண்ணால் கூறினாள் என்று இத்தொடருக்கு நயம் காண்பதுண்டு.)

இராமனின் மகிழ்ச்சி

முன்பெல்லாம் செந்தாமரை போன்று பொலிவுற்றிருக்கும் இராமனது முகம் கைகேயியின் சொல்லைக் கேட்டதும் அம்மலரையும் வென்றுவிட்டதாகக் கம்பர் நயம்படப் பாடுகிறார்.

*ஒப்பதே முன்பு, பின்பு வாசகம் உணரக் கேட்ட*
*அப்பொழுது அலர்ந்த செந்தா மரையினை*
*வென்றது அம்மா!* (ஷை 108)

தந்தையின் ஆணையைத் தாய் அறிவிக்க, அதை நிறைவேற்றி இருவரையும் மகிழ்விக்கும் பெரும்பேறு தனக்கு வாய்த்துள்ளதை எண்ணியபோது, அம்மகிழ்ச்சியில் இராமனது முகம் செந்தாமரையையும் வென்றுவிடுகிறது. பெற்றோர்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் இராமன் கொண்ட ஆர்வத்தையும், அவனது உத்தம குணத்தையும் இது புலப்படுத்துகிறது. பேற்றோர்கள் ஆட்சியைப் பரதனுக்கு அளித்துத் தன்னை அப்பொறுப்பிலிருந்து விடுவிப்பதை, அவர்கள் தனக்குச் செய்த பேருபகாரமாக எண்ணி, இராமன் மகிழ்ச்சி அடைகிறான். பெரும்பாரம் ஏற்றிய சகடத்தை இழுப்பதற்காகப் பூட்டப்பட்ட ஓர் எருதை, கருணையுடைய ஒருவன் கட்டிலிருந்து அவிழ்த்துவிட்டால் அவ் எருது அடையும் மகிழ்ச்சியை இராமன் அடைந்த மகிழ்ச்சிக்குக் கம்பர் உவமை கூறுகிறார்.

[1] ஆழி - கடல். பூழி - புழுதி.

*உருளுடைச் சகடம் பூண்ட உடையவன்*
*உய்த்த கார்ஏறு*
*அருளுடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்தது*
*ஒத்தான்.*[1] (ஷ 109)

நாட்டைப் பரதன் ஆள்வதும், தான் கானகம் செல்வதுமாகிய ஆணை தந்தையிடமிருந்து வரவில்லையே என்று இராமன் எண்ணவில்லை. தாய் கூறினாலும் அதனை ஏற்று, உடனே நிறைவேற்றுவதே தனது கடமை என்றும், அதனினும் நன்மை தரும் செயல் தனக்கு வேறில்லை என்றும், பரதன் பெற்ற செல்வம் தான் பெற்றதற்குச் சமமே என்றும் கூறுகிறான்.

*மன்னவன் பணிஅன்றாகில் நும்பணி மறுப்பனோ என்*
*பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன்*
*பெற்றதுஅன்றோ.*[2] (ஷ 110)

இராமன் கைகேயியிடம் விடைபெற்றுப் பிரிதல்

இராமன் இப்பொழுதே கானகம் செல்லப் போவதாகக் கூறி, கைகேயியை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, உணர்விழந்து கிடக்கும் தசரதரையும் திசை நோக்கி வணங்கிவிட்டு, அங்கிருந்து அகன்று, அன்னை கோசலா தேவியின் அரண்மனைக்கு வருகிறான்.

———

[1] உருள் - சக்கரம். உடையவன் - எஜமானன். காரேறு - கரிய எருது. பிணி - துன்பம். அவிழ்ந்தது - நீங்கியது.

[2] பணி - கட்டளை. பின்னவன் - பரதன்.

## 6. தசரதரின் துயரம்

முடிசூடாமல் வரும் இராமனைக் கண்டு கோசலை காரணம் வினாவுதல்

கோசலா தேவி தன் மகன் முடிபுனைந்து, ஏவலர்கள் கொற்றக்குடை பிடிக்கவும், வெண்சாமரம் வீசவும் தன்னைக் காண வருவான் என்னும் மகிழ்ச்சி மீதூர, அவன் வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். அத்தகைய அன்னையின் முன் இராமன்,

*குழைக்கின்ற கவரிஇன்றிக் கொற்றவெண்*
*குடையும்இன்றி*
*இழைக்கின்ற விதிமுன்செல்லத் தருமம்பின்*
*இரங்கி ஏக*
*மழைக்குன்ற மனையான் மௌலிகவித்தனன்*
*வரும்என்றுஎன்று*
*தழைக்கின்ற உள்ளத்தன்னாள் முன் ஒருதமி*
*யன்சென்றான்.*[1] (நகர் நீங்கு. 2)

சென்று, அவள் பாதத்தை வணங்குகிறான். கோசலை அவனை வாழ்த்திவிட்டுத் தான் எதிர்பார்த்ததற்கு மாறாக, அவனது வருகை அமைந்திருந்ததால் சற்று ஏமாற்றம் அடைந்தவளாய், ''முடிசூடுவதில் ஏதேனும் இடையூறு நேர்ந்துவிட்டதா?'' என்று வினவினாள். இராமன் அவளிடம், ''உனது அன்பு மகன் பரதன் முடிசூடப் போகிறான்'' என்றான். இதைக் கேட்ட கோசலையின் மனத்துள் துணுக்கமோ, வேறு எந்த மாற்றமோ நிகழவில்லை. அவள் அமைதியாக, ''பரதன் நிறை குணத்தவன்; நின்னினும் நல்லன்; குறைவிலன். அவன் அரசனாக வருவதில் மரபு முறைக்குப் பொருந்தவில்லை என்னும் குறை ஒன்றே உளது'' என்று கூறினாள்.

---

[1] குழைக்கின்ற - குழைவாக வீசப்படுகிற. கொற்றம் - வெற்றி. இழைத்தல் - நன்மை தீமைகளைச் செய்தல். மழை-மேகம் மௌலி-கிரீடம். தழைத்தல் - பூரித்தல்.

(தலைமகனாதலால் ஆட்சிக்கு உரிமையுடையவனாய், மன்னரால் முடிசூட்டப் போவதாக அறிவிக்கப்பட்ட தன் மைந்தன் அரசை இழப்பதையும், அதனை மாற்றாள் மைந்தன் முறைமையின்றிப் பெறுவதையும் கோசலையன்றி மற்றொரு தாயாயின் சகித்துக்கொள்ள மாட்டாள். அவள் வெந்து வெதும்பி, அவற்றிற்குக் காரணமான மன்னரையும், கைகேயியையும், பரதனையும்கூடக் கடிந்தும், தாக்கியும் பேசி, ஆரவாரத்தோடு கூடிய ஒரு பெரிய கிளர்ச்சியையே உண்டுபண்ணி யிருப்பாள். ஆனால் கோசலையோ எவ்வித மனச்சஞ்சலமும் இன்றி, பரதனது அருங்குணங்களைப் பாராட்டியதுடன், 'அவன் தன் மகன் இராமனை விடவும் நல்லவன்' என்று எவரும் கூற முற்படாத அன்பு மொழியையும் வெளியிடுகிறாள். கோசலை அவ்வாறு கூறியதற்குக் கம்பர் அவள், 'நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்' (நகர் நீங்கு. 5) என்பதைக் காரணமாகக் கூறி, அவளது உயர்ந்த உள்ளத்தைப் பாராட்டுகிறார்.) கோசலை இராமனிடம், ''மன்னர் ஏவியபடி அரசைப் பரதனுக்குக் கொடுத்துவிட்டு, அவனுடன் இணைந்து நெடுங்காலம் வாழ்வாயாக!'' என்று கூறினாள்.

தன்னைக் கானகம் செல்லுமாறு தந்தையார்
பணித்திருப்பதை இராமன் கூறுதல்

அதைக் கேட்ட இராமன், ''அன்னையே! தந்தையார் என்னை நல்வழிப்படுத்துவதற்காக நான் கானகம் சென்று, தவ முனிவர்களுடன் பதினான்கு ஆண்டுகள் வாழ்ந்து வரவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறார்'' என்றான். (பரதன் முடிசூட வேண்டும் என்பதும், இராமன் கானகம் செல்ல வேண்டும் என்பதும் மன்னரின் ஆணை எனச் சிற்றன்னை தன்னிடம் கூறிய செய்தியை, இராமன் தன் தாய்க்கு அறிவிக்கும்போது, அவளுக்குச் சிற்றன்னை மீது செற்றமும் சினமும் எற்படாதவாறு, அதனைத் தந்தையே தனது நன்மையைக் கருதிக் கூறிய

தாகச் சொல்லுகிறான். உண்மையைச் சொன்னால் அன்னை, 'அது மன்னவர் ஆணையன்று; எனவே நிறை வேற்றத் தேவையில்லை' என்று தன்னைத் தடுத்து விடக்கூடுமென்றும், அப்போது சிற்றன்னையிடம் தான் ஏற்றுவந்த ஆணையை நிறைவேற்ற முடியாமல் ஆகி விடும் என்றும் எண்ணியே இராமன் தான் கானகம் செல்வது தந்தையின் ஆணை என்று கூறுகிறான்) இராமன் அரசை இழப்பது மட்டுமன்றிக் கானகம் செல்ல வேண்டியிருப்பதையும் எண்ணியபோது கோசலை,

*ஏங்கினாள் இளைத்தாள் திகைத்தாள் மனம்*
*வீங்கினாள் விம்மினாள் விழுந்தாள்.*[1] (ஷ 9)

இராமனைப் பார்த்து, "மகனே! மன்னர் உன்னை நாட்டை ஆளும்படி சொன்னதும் ஒரு வஞ்சனையா? உன்னைப் பிரிந்து நான் எங்ஙனம் உயிர் வாழ்வேன்?" என்று கூறித் தன் கையை நெரிக்கிறாள்; வயிற்றில் அடித்துக் கொள்ளுகிறாள். "உன்னிடம் பேரன்பு வைத் திருந்த மன்னர் உன்னைக் காட்டிற்கு அனுப்புவதற்கு நீ என்ன பிழை செய்தாய்? அந்தோ! அறம் என் விஷயத் தில் பொய்யாகி விட்டதோ? இத்துன்பத்திற்கு ஆளாகும் படி நான் செய்த தீவினை யாதோ?" என்று புலம்பி னாள். கன்றைப் பிரிந்த கறவைப் பசுவைப் போல் உள்ளம் கலங்கினாள். பல ஆண்டுகளாக மகப்பேறில் லாது வருந்தி, பின் இராமனைப் பெற்று மகிழ்ச்சியில் திளைத்த கோசலை மீண்டும் அவனைப் பிரிந்து இடருற நேர்வதற்குக் கம்பர் வறுமையில் வாடிய ஒருவன், இடை யில் செல்வத்தைப் பெற்று மகிழ்ச்சியுற்ற வேளையில் அச்செல்வத்தை இழக்க நேர்ந்ததை உவமை கூறுகிறார்.

அழுது புலம்பும் அன்னையை இராமன் தேற்றுதல்

அன்னை இவ்வாறு ஆற்றாது அழுது புலம்பி அல்ல லுறுவதைக் கண்ட இராமன் அருகிற் சென்று, அவளைப்

---

[1] வீங்கினாள் - துன்பம் மிகுந்தாள்

பரிந்தெடுத்து, ''அருங்கற்புடைய அன்னையே! சத்திய விரதராகிய எனது தந்தையை நீ பொய்யராக்க எண்ணு கிறாயோ? சிறந்த தம்பி பரதன் ஆட்சியைப் பெறவும், அதனால் தந்தையை மெய்யுடையவராக்கவும் நான் கானக வாழ்க்கையை ஏற்றுக் கொண்டுள்ளேன். பஞ்சபூதங்களும், ஏழு கடல்களும் நிலை குலைந்தாலும், தந்தையின் ஆணையை மறுத்தற்கு என்னால் இயலுமோ? உலகில் பிறந்து நான் பெறும் பேறுகளுள் இதனினும் சிறந்தது யாது உளது? அன்னையே! இதற்காக வருந்தாதே'' என்று ஆறுதல் கூறினான். கோசலை மகனைப் பார்த்து, ''தந்தையின் கட்டளையை மீறி, கானகம் செல்லாதிருக் கும்படி நான் கூறவில்லை. உனது பிரிவால் உயிர் வாழ இயலாத என்னையும் நீ உன்னுடன் அழைத்துச் செல்'' என்று வெண்டினாள். அந்நிலையில் இராமன் தன் தாயைத் தேற்றுவதற்காகப் பொருள் பொதிந்த, உண்மை நிறைந்த, இனிய சொற்களைக் கூறத் தொடங்கினான். ''அன்னையே! தந்தையார் என்னைப் பிரிந்து துன்பக் கடலுள் ஆழும்போது, அருகில் இருந்து அவருக்குத் தேறுதல் மொழி கூறாமல் என்னுடன் காட்டிற்கு வர எண்ணுவது அறம் ஆகுமா? அவர் ஆட்சியைப் பரதனிடம் ஒப்புவித்துவிட்டு, காட்டிற்குச் சென்று நோன்பு நோற்கும் போது, அவருடன் இருந்து அவ்வரிய நோன்பை நீயும் ஆற்ற வேண்டாமா? நான் கானகம் செல்வது பற்றி நீ மனம் கலங்குவது ஏன்? அங்குச் சென்றால் புண்ணிய மாதவர்களுடனிருந்து தவத்தைச் செய்து மேன்மையடை யும் பேறு எனக்கு வந்தமையும். தேவர்களும்கூட மாதவத்தைச் செய்து அதனால் உயர்வு பெற்றவர்கள் அல்லரோ? தவத்தில் சிறந்த கோசிக முனிவரின் அரு ளால் நான் பெற்ற வித்தையும், அடைந்த நன்மைகளும் எனக்குப் பயன் விளைத்தன வன்றோ? (இராமன் 'வித்தை' என்று கூறுவதில், 'பலை', 'அதிபலை' என்ற 'பசி தாகத்தைப் போக்கும் இரு மந்திரங்களையும் நன்மை' என்று கூறுவதில், முனிவரின் வேள்வியை, நிறைவேற்றிய புண்ணியத்தையும், தனக்கும், தனது

சகோதரர்களுக்கும் நடந்த திருமணங்களையும் குறிப் பிடுகிறான்.) கானகம் சென்று அங்குள்ள முனிவர்களுக்கு வழிபாடாற்றி, அரிய ஞானத்தை ஈட்டி, பல வித்தை களும் கைவரப் பெற்று, தேவர்களின் அன்புக்கும் பாத் திரமாகி, நான் மீண்டு வருவதை நீ காண்பாயாக! நான் வனத்தில் கழிக்க வேண்டிய பதினான்கு வருடங்களும் பதினான்கு நாள்கள் போன்று விரைவில் கழிந்துவிடப் போகின்றன'' என்று கூறினான்.

இராமன் மேலும் தான் செய்ய எண்ணியதை நியா யப்படுத்துவதற்கு, தந்தை சொற்படி நடந்து அதனால் இன்றும் நிலைத்த புகழுடன் விளங்கும் இருவர் செய்தி களைக் குறிப்பிடுகிறான். கடலைத் தோண்டிய சகரர்கள் தம் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றி, அதனால் தாம் உயிர் துறக்க நேர்ந்ததையும், பரசுராமன் தந்தை சொல்லைத் தட்டாமல் தாயைக் கொன்றதையும், அத னால் அவர்களது ஒப்பற்ற கீர்த்தி உலகில் நிலை நிற் பதையும் எடுத்துக் கூறி, ஆன்றோர்களின் செயல்கள் அங்ஙனமாகவும் தான் தந்தை சொல்லை மீறுவது தகுதியோ? என்று வினவுகிறான்.

இராமன் சுமித்திரையின் மாளிகைக்குச் செல்லுதல்

இராமனது இவ் வாசகங்களை கேட்ட கோசலை' அவன் கூறும் கருத்துக்களை மறுக்க இயலாதவளாய், அவனது உறுதியைத் தளர்த்துவது தன்னால் இயலா தென்பதை உணர்கிறாள். பின்னர் அரசரைக் கொண்டு அறிவுரை கூறி, அவன் காட்டிற்குச் செல்வதைத் தடுத்து விட வேண்டும் என்னும் அவாவால், அவரைக் காண்பதற் காகக் கைகேயியின் மாளிகைக்குச் செல்லுகிறாள். இரா மன் தாயை வணங்கிவிட்டு, தந்தை, தாய் ஆகிய இருவரது சோகத்தையும் தீர்ப்பவள் சிற்றன்னை சுமித்திரையே என்றெண்ணி. அவளைக் காண்பதற்காக அவளிருக்கும் மாளிகைக்குச் செல்லுகிறான்.

மன்னர் மூர்ச்சையுற்றுக் கிடக்கும் நிலைகண்டு
கோசலை அழுது புலம்புதல்

கைகேயியின் மாளிகைக்குச் சென்ற கோசலை அங்குத் தசரதர் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு, ஆற்றொணாத் துயரத்தால் அழுகிறாள். மன்னரை ''உலகம் செய்த தவமே! திருவின் திருவே! கல்விக் கடலே! கருணையின் நிலையமே!'' என்று அழைத்து, ''பிரியத் தகாத இராமனைப் பிரிவதற்குக் காரணம் யாது? இது தக்கதோ? இதுகாறும் அறநெறியில் இயங்கி வந்த ஆணைச் சக்கரத்தை அழிவுப் பாதையில் செலுத்த நினைத்தது ஏனோ? மனமுருகி வருந்தும் எனக்கு ஆறுதலாக ஒரு வார்த்தையாவது கூறக்கூடாதா?'' என்று அழுதுகொண்டே வினவுகிறாள். இராமனை எண்ணி ''மகனே! மன்னரின் நிலை காண வாராய்!'' என்று அழைத்து, அழுது புலம்புகிறாள். அவளது அழுகுரல் கேட்டு விழாவிற்கு வந்திருந்த மன்னர் முதலியோர் திகிலடைகிறார்கள்.

அழுகை ஒலிகேட்டு வசிட்டர் அங்கு வருதல்

வசிட்டர் ஒலி கேட்ட இடத்திற்கு விரைந்து வருகிறார். வந்தவர் தசரதர் கிடக்கும் நிலைகண்டு தமக்குள், ''மன்னர் இன்னும் இறக்கவில்லை; ஆனால் பிழைக்கப் போவதில்லை. இப்பொழுது உணர்விழந்து கிடக்கிறார். கைகேயியோ துயரத்தைத் துறந்துவிட்டிருக்கிறாள். மனிதர் இவ்வாறு திடீரென மனம் மாறும் விதம் உணர்தற்கரிதாக உள்ளது' என்று எண்ணிக் கொண்டு, மன்னர் அந்நிலைக்கு ஆளாகியிருக்கும் காரணத்தை அறிய விரும்புகிறார். 'துன்பத்துள் ஆழ்ந்து வருந்தும் கோசலையிடம் கேட்டுப் பயனில்லை' என்றெண்ணிய வேளையில், கைகேயியே அவரைத் தொழுதுகொண்டு அவர் முன்பாக வருகிறாள். வசிட்டர் அவளிடம் ''மன்னர் மூர்ச்சையுற்றுக் கிடக்கும் காரணம் யாது?'' என்று வினவினார். கைகேயி முனிவரிடம், 'தன்னால் நிகழ்ந்த தன்மை தானே தெரியச் சொன்னாள்'.

முனிவர் மன்னவர்க்குக் கூறும் ஆறுதல் மொழி

கேட்ட வசிட்டர் (அவளைக் குறையாக எதுவும் கூறாமல்) மன்னரை மண்ணிலிருந்து தம் கையால் தூக்கி, "அரசே! வருந்தாதீர். அரசியே உமது அன்பு மகனுக்கு அரசைக் கொடுப்பாள்; கவலை ஒழிக'' என்று கூறினார். வசிட்டரது இவ் இன்னுரையாலும், குளிர்ந்த நீரைத் தெளித்தும், ஆலவட்டத்தால் வீசியும் செய்த சைத்தி யோபசாரத்தாலும், கைகேயியின் சொல்லாகிய ஆலகால விடத்தின் வேகம் சற்றுத் தணிய, தசரதர் இராமனது பெயரைக் கூறிக்கொண்டே உயிர்த்தெழுந்தார். வசிட்டர் அவரிடம், "ஐயா! நீர் கவலை ஒழிக! இராமனே இனி நாட்டை ஆள்வான்; அதற்குத் தடை இல்லை கைகேயியே நாட்டை இராமனுக்கு அளிப்பாள் இராமன் அரசை ஏற் காமல் காட்டிற்குப் போனால் நாம் உயிருடன் இருக்கப் போகிறோமா!'' (அவன் காட்டிற்குச் செல்லும் நிலை ஏற்படாது. எனவே, வருந்தாதீர்.) என்று தேற்றினார். தசரதர் முனிவரிடம், "எனது இறுதிக்காலத்தில் இராமன் காட்டிற்குப் போகாதபடி தடுத்து, அவனுக்கு முடிசூட்டி, எனது சொல்லும் பழிப்புக்கு இடனாகாதபடி செய்வீராக!'' என்று வேண்டினார்.

முனிவர் கைகேயிக்குக் கூறும் அறிவுரை

வசிட்டர் கைகேயியின் பக்கமாகத் திரும்பி, அவள் முகம் நோக்கி, "இலக்குமி போன்றவளே! உன் மகன் இராமனுக்கு அரசும், மனுவின் வழிவந்த மன்னருக்கு உயிரும் உதவி, புகழ் பெறுவாயாக!'' என்று உபதேசித் தார். (வசிட்டர் இராமனைக் கைகேயியின் மகன் என்று கூறி, அவன் மீது அவளது பாசவுணர்வைத் தூண்டுகிறார். மன்னரை மனுவின் வழிவந்தவர் என்று கூறி, அவர் சொல் திறம்பாதவர்; அவர் உய்வதற்குக் கைகேயியே தன் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று குறிப் பால் உணர்த்துகிறார். இராமனுக்கு அரசையும், மன்ன ருக்கு உயிரையும் உதவும்படி வசிட்டர் கைகேயியை

வேண்டுவதால் அவள் பெற்ற வரத்தின்படி அரசு அவள் மகனுக்கே உரியதென்பதை உடன்பட்டு, அதனை அவளே மரபு முறைமை நோக்கி இராமனுக்கு அளித்து, அரசரின் உயிரைக் காப்பாற்றும்படி வேண்டுகிறார்.)

முனிவர் கைகேயியைக் கடிந்துரைத்தல்

முனிவரின் சொல்லைக் கேட்டதும் கைகேயி விம்மி அழுது, "அரசர் வாய்மையிலிருந்து மாறுபடுவாரானால் நான் உயிரோடு வாழ்ந்திரேன். என் சொல் பழுதாகாமல் இருக்க நான் இறக்கவும் தயங்கேன்" என்று கூறினாள். அச்சொற்களைக் கேட்டவுடன் வசிட்டர் உள்ளம் கொதித்து, கைகேயியிடம், "உனது வரத்தால் அரசர் மடிவார் என்றும், உனது செயலை உலகம் ஏற்றுக் கொள்ளாது என்றும், பழியும் பாவமும் உனக்கு உண்டாகும் என்றும் நான் எடுத்துக் கூறியும், நீ உன் பிடிவாத குணத்தை விடுகிறாயில்லை. பிறர் கூறும் அறிவுரைகளையும் நீ உணராதிருக்கிறாய். இரக்கமே இல்லாமலும், உயிர் நீங்கி விடப் போகும் கணவரின் துன்பத்தை நினையாமலும், புண்ணில் நெருப்போ விடமோ நுழைந்தாற் போலத் துன்பம் தரும் வகையில், பேசுகிறாய். நீ பெண்ணா? அல்லது நெருப்பா? அல்லது பேயா? ஏ! கொடியவளே! அரசர்க்கு உன்னோடும், இம்மண்ணோடும் இனி என்ன உறவு இருக்கப்போகிறது? (அவர் மரணமடைதல் உறுதி.) நீ முன்பு மன்னன் மகனை (இராமனை)க் 'காட்டிற்குச் செல்' என்று கூறினாய். அவனோ காட்டிற்குச் செல்லுதலைத் தவிரான். கணவரின் புகழையும் உயிரையும் சுட்டெரிக்கின்ற நெருப்புப் போன்றவள் நீ. உன்னைப் போன்ற கொடியவர்கள் உலகில் யார் உளர்? நீ செய்யத் துணிந்த செயல் போன்ற கொடிய செயலும் வேறு இல்லை" என்று சினந்து கூறினார். (முன்பு இராமனை கைகேயியின் மகன் என்று கூறிய முனிவர் அவளது கல் நெஞ்சத்தைத் தெரிந்துகொண்டபின் அவனை, 'மன்னர் மகன்' (தசரதரின் மகன்) என்று குறிப்பிட்டதாகக் கம்பர் பாடுவது பொருத்தமாகவும், நயமாகவும் உள்ளது.)

தசரதர் கைகேயியோடும் பரதனோடும் உறவு ஒழிதல்

வசிட்டருக்கும் கைகேயிக்கும் நடந்த உரையாடலைக் கேட்டு அவள் மனநிலையை உணர்ந்த மன்னர், தாங்கொணாத் துயரத்தால் கைகேயியை, ''ஏ! பாவி'' என்று அழைத்து, ''என் உயிரை (இராமனை) 'காட்டிற்குச் செல்' என்று ஏவினாயோ? அவனும் காட்டிற்குச் சென்று விட்டானோ? ஏ கொடியவளே! நான் உன்னோடு வாழ்ந்த காலத்தில் உன் கனிவாய் அதர பானமாகிய விடத்தை நெடுநாளாக உண்டேன். ஆதலால் நீ என் உயிரை முற்றிலுமாக உண்டுவிட்டாய், பண்டு உன்னை மணம் செய்த காலத்தில் ஒரு பெண்ணைக் கொள்ளவில்லை; உயிரைப் பறிக்கும் கூற்றத்தையே மனைவியாகக் கொண்டேன். இராமனையே கண்ணாகக் கொண்டு, அவனையன்றி வேறு கண்ணில்லாதவன் நான். இங்ஙனம் எனக்குக் கண்ணாக அமைந்த என் மகனை உன் வஞ்சகச் செயலால் காட்டிற்கு அனுப்பச் சூழ்ச்சி செய்கிறாய். அதனால் நீயே எனக்கு அழிவைத் தேடுகிறாய். உனது செயலால் உனக்கு வரும் பழிக்கு நீ நாணுகிறாய் இல்லை. ஏ பாவி! நீ கழுத்தில் கட்டியிருக்கிற மங்கல நாணே, முடிசூட்டு விழாவில் உனது மகன் கையில் கட்டப்போகும் காப்பு நாணாக அமையப்போகிறது.'' என்று கூறினார்.

*விழிக்கும் கண்வேறுஇல்லா வெம்கான்*
*என் கான்முளையைச்*
*சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய்*
*என்னைப் போழ்வாய்*
*பழிக்கும் நாணாய் மாணாப் பாவீ! இனிஎன் பல உன்*
*கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பின்*
*நாண்ஆம் என்றான்.*[1] (நகர் நீங்கு. 49)

[1] கான் - காடு. கான்முளை - மகன். சுழிக்கும் வினை - வஞ்சனைச் செயல். சூழ்வாய் - சூழ்ச்சி செய்கிறாய். போழ்வாய் - பிளப்பாய். மாணா - மாட்சிமை இல்லாத. கழுத்தின் நாண் - கழுத்தில் கட்டிய தாலிக் கயிறு.

(பரதன் முடிசூடுவதானால் அதன்முன் தான் இறப்பது உறுதி என்ற கருத்தைத் தசரதர் இவ்வாறு கைகேயியின் மங்கல நாணே பரதனுக்குக் காப்பு நாணாகப் போகிறது என்று கூறுவது உருக்கமாக உள்ளது.) இவ்வாறு பற்பல கூறி இரந்து வேண்டியும் சற்றேனும் மனம் இரங்காத கைகேயியைக் குறித்து அரசர், வசிட்டர் கேட்கும்படி, "இன்றே சொன்னேன்; இவள் என் மனைவியல்லள். இவளை நான் துறந்துவிட்டேன். மன்னனாக வரும் பரதனையும் மகனாக எண்ணேன். எனது அந்திமக் கடனை ஆற்றுவதற்கு அவன் தகுதியுடையவன் ஆகான்." என்று கூறினார்

*இன்னே பலவும் பகர்வான் இரங்காதாளை நோக்கிச்*
*சொன்னேன் இன்றே இவள் என் தாரம்*
*அல்லள் துறந்தேன்*
*மன்னே ஆவான் வரும் அப் பரதன் தனையும்*
*மகன் என்(று)*
*உன்னேன் முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு*
*என்றான்.*[1] (நகர் நீங்கு. 50)

பரதனைக் கூறிய சொற்களின் விளக்கம்

இங்கு ஒரு சிந்தனை எழுகிறது. 'தசரதர் கைகேயியைத் தாரமல்லள் என்று கூறியது சரியாகலாம்; ஆனால் கைகேயியின் செயலோடு எவ்விதத் தொடர்பும் இல்லாத பரதனை, 'மகனல்லன்; உரிமைக்கு ஆகான்' என்று விலக்கியது நியாயமா? சொல் பிழையாத மனுகுலத்தில் உதித்த தசரதரின் நாவில் வழுக்கியும் இத்தவறான சொல் வரலாமா?' என்று சிலர் வினவக் கூடும். ஆனால் தசரதர் கூறிய சொற்களைக் கூர்ந்து நோக்கினால் இக் கேள்விக்கு இடமில்லை யென்று தெரியலாம். மன்னர் என்ன சொன்னார்? மன்னனாவதற்கு வரும் பரதனை மகனென்று உன்னேன்; அவன் உரிமைக்கு ஆகான்

[1] இரங்காதாள் - கைகேயி. உரிமை - உத்தரகிரியை செய்வதற்குள்ள உரிமை.

என்றுதானே சொன்னார். மன்னனாக வரும் எண்ணம் பரதனுக்கு இல்லாதபோது, தசரதரின் கூற்று அவனைப் பந்திப்பதில்லை; அக் கூற்றுப் பொய்யாதலு மில்லை. பரதன் முன் போலத் தசரதரின் மைந்தனாவதற்கும், அந்திமக் கடனாற்றுவதற்கும் உரிமையுடையவனாகவே உள்ளான். தசரதர் கைகேயியின் செயலில் பரதனுக்கும் பங்கிருக்குமோ என்ற ஐயப்பாட்டில் அவனை அவ்வாறு கூறிவிட்டார். மன்னர் கூறிய அவ்வெவ்வுரையையும் கம்பர் தமது கவிதையில் அவரது வாய்மை பிறழாமலும், பரதனின் நேர்மைக்குப் பழுது வராமலும் தக்க சொற்களை அமைத்துப் பாடிய புலமை போற்றற்பாலதாகும்.

### கோசலை மன்னரைத் தேற்றுதல்

தசரதர் கோசலையைப் பார்த்து, ''இராமன் என்னைக் காணாமல் சென்றது போலவே, உன்னையும் காணாமல் சென்றனனோ? என்று வினவினார். இதைக் கேட்ட கோசலை, மன்னரைக் கொண்டு இராமன் கானகம் செல்வதைத் தடுக்க வேண்டும் என்று எண்ணி வந்த தன் எண்ணத்தைக் கைவிட்டவளாய், மன்னர் உற்ற தளர்நிலை கண்டு தானும் சோர்வடைகிறாள். மன்னர் வரத்தை அளித்துவிட்டு அதை மீற முடியாமல் தளர்ந்துள்ளார் என்றும், அனைத்தும் கைகேயியின் செயலே என்றும் கோசலை உணர்கிறாள். அந்நிலையில் அவள் தன் மனத்தை ஆற்றிக்கொண்டு மன்னருக்குத் தேறுதல் மொழி கூறுகிறாள். ''இராமன் கானகம் செல்லாமல் வந்துவிடுவான்'' என்று சும்மா சொல்லி ஆறுதல் அளிக்க முயல்கிறாள். கைகேயி கேட்ட வரத்தைக் கொடாதிருந்தால், 'சத்தியத்தைக் கைவிட்டார்' என்று உலகம் கூறும் பழிக்குத் தன் கணவர் ஆளாக நேருமே என்றெண்ணி அதற்காகச் சோர்கின்றாள். மகனைக் 'கானகம் செல்லாதே' என்று தான் கூறினால், அதனால் மன்னர் புகழுக்கு இழிவு வருமே என்பதை எண்ணி, மகனிடம் அதைக் கூறாமல், துன்பத்துள் அழுந்துகிறாள். மன்னரை நோக்கி, ''உரவோய்! 'சத்தியத்தைக் கைவிடமாட்டேன்'

என்ற நிலையை ஏற்றுக் கொண்டபின் அதற்குத் தவறு வரும்படி நடப்பது உமது பெருமைக்கு இழிவாகும். மகன்மீது வைத்த அன்பு காரணமாக உமது கொள்கையில் தளர்வு நேர்ந்தால் அதை உலகம் ஏற்றுக் கொள்ளாது'' என்று கூறிவிட்டுப் பின் தனக்குள்ளேயே, 'இராமன் கானகம் செல்லாதிரான்; மகன் பிரிவால் மன்னரும் இறவாதிரார்' என்று கூறி வருந்துகிறாள்.

### கோசலை அறத்தில் கொண்ட பற்று

தசரதர் மகன் மீது வைத்த அன்பைக் கைவிட முடியாமலும், சத்தியத்தைக் கைநெகிழ இயலாமலும் அல்லலுழந்து ஆவி சோர்கிறார். தசரதரைப் போலக் கோசலையும் தன் மகனிடம் பேரன்பு உடையவள் என்பதைக் கூறவும் வேண்டுமோ? ஆனால் அவள் பிள்ளைப் பாசத்தை விடவும், சத்தியத்தையே மேலாக மதிக்கிறவள். ஆதலால் தனது கணவர் மகன்மீது வைத்த காதலால், மனுகுல வேந்தர்கள் கடைப்பிடித்துவந்த வாய்மையைக் கைவிட்டு, உலகோர் பழிக்கு ஆளாகிவிடக் கூடாதே என்று கவலைப்படுகிறாள். சத்தியத்தில் கொண்ட உறுதிப்பாட்டில் அவள் தசரதரையும் விஞ்சி விடுகிறாள். மகன் பிரிந்தால் மன்னர் உயிர் தரியார் என்பதை அவள் உணராமல் இல்லை. ஆயினும், நிலையற்ற உயிரை விடவும், நிலையான அறத்தைப் பேணுவதே கணவரின் கடமை என்பதை இலட்சிய நிலையில் நின்று அவள் உணர்கிறாள். ஆதலால் உள்ளம் ஊசலாடுகிற மன்னருக்கு, அறிவுரை கூறும் ஓர் அமைச்சரைப் போன்று கோசலை, மகனின் பிரிவை ஆற்றி, அறத்தைக் கடைப்பிடிக்குமாறு அவரை வேண்டுகிறாள். இச் செயல் இலட்சிய வாழ்வில் அவளுக்கிருந்த துளங்காத உறுதிப் பாட்டைப் புலப்படுத்துகிறது.

### இராமனது உயர்பண்புகளை எண்ணி மன்னர் வருந்துதல்

தசரதர் கைகேயியின் உறுதியைத் தளர்த்தல் அரிது என்பதையும், இராமன் கானகம் சென்றேதீருவன் என்

பதையும் உணர்ந்து, மகனின் பிரிவை எண்ணி வருந்துகிறார். இராமனின் ஆற்றலையும், வீரத்தையும், வெற்றியையும், நற்பண்புகளையும் சொல்லிச் சொல்லிப் புலம்புகிறார். ''எனக்குத் துணையாக உள்ளவனே! என் முன்னே வா. நான் உன் பிரிவை எண்ணிக் கண்ணீர் பெருக்கி, உயிர் உடலை விட்டுப் பிரியும் நிலையை அடைந்துள்ளேன். உனது முடிசூட்டு விழாவில் உன் மீது சொரிவதற்காகக் கங்கை முதலிய புண்ணிய நதிகளிலிருந்து கொண்டுவந்த புனித நீரைக் கொண்டு எனக்கு நீர்க்கடன் ஆற்றிவிட்டுப் பிறகு காட்டிற்குச் செல்வாயாக,

*... ... ... நின்மேற் சொரிய*
*மண்ணும் நீராய் வந்த புனலை மகனே வினையேற்கு*
*உண்ணும் நீராய் உதவி உயர் கான் அடைவாய்*
*என்றான்.*[1] (நகர் நீங்கு. 56)

அரசபரம்பரையை இருபத்தொரு தலைமுறையாகத் தன் மழுவால் கொன்றுவந்த பரசுராமனை வில்லால் வென்ற வீரமகனே! 'கிரீடத்தை அணி' என்று சொல்லி, சடையை அணியும்படி செய்துவிட்டேனே! முப்புரங்களை வென்ற சிவபெருமானின் வில்லை ஒடித்தவனே! எனது முதுமையை எண்ணாமல் என்னைத் தனியனாய் விட்டுச் செல்கிறாயே! நான் இனி வாழேன். எனக்கு முன்னே உன்னை வனம் செல்ல விடுவதற்கு நான் அத்துணை எளிமையுடையவன் அல்லன். உனக்கு முன்னே நான் வானகம் சென்று விடுவேன். அன்பால் உருகும் உள்ளமும், அன்புக்காக உயிர்விடும் உடலும் உடையேன் நான். என்னிடம் அன்பில்லாமல் என்னைப் பிரிந்து போகின்ற உன்போல் அல்லன் யான். சீதையை மணந்து, அவள் கையைப் பற்றி நீ இம்மாநகரில் புகுந்ததைப் பார்த்த கண்ணால், நீ பிரிந்து கானகம் செல்வதைக் காணப் பொறேன். உனது பிரிவை இவ்வுலகமும், வானுலகமும்

---

[1] மண்ணும்நீர் - கழுவிக் குளிப்பாட்டும் நீர்; உண்ணும் நீர் - இறந்தவர் உண்ணுதற்கு எள்ளுடன் இறைக்கும் நீர்.

வருந்தாமல் ஏற்று அமையினும், உன்னை நோற்றுப் பெற்ற நான் ஆற்றேன். நீ பிரிந்தால் நான் பிழைக்க மாட்டேன். நாட்டையும், நாட்டில் உள்ள செல்வம் அனைத்தும் கள்ளக் கைகேயிக்குக் கொடுத்துவிட்டுப் புகழைக் கொண்ட உனது வள்ளல் தன்மையே என் உயிரை மாய்க்கும். பரசுராமனுக்கும் தளராத வலிமை யுடைய உனக்கு நிகராவார் மூவுலகிலும் உளரோ? நீ கானகம் செல்வதைக் கேட்டபின், தற்போது உயிருடன் இருந்தாலும், நான் இன்றைக்கே மடிந்து வானுலகை அடைவது உறுதி. அப்படி அடையாமற் போனால்தானே நான் வன்கண்ணன் ஆவேன். நான் கைகேயியைப் பழி வாங்காமல் நாட்டில் உயிர்வாழ்ந்து கொண்டிருந்தால் எனது நிலைமை என்னாகும்? நீ கானகம் சென்றால் திருமகளும், நிலமகளும் பிழைக்கமாட்டார்கள். நான் உன்னைப் பிரிந்து உயிர்வாழ்ந்தால் கைகேயிக்கு ஒப் பாக மாட்டேனோ? நீ அணிகளைப் பூண்டு முடிபுனைந்து சிம்மாசனத்தில் கொற்றக் குடை நிழலில் வீற்றிருக்கும் போது, ஜெயலெட்சுமி அமர்ந்திருக்கும் உனது மார்பைக் காண விரும்பிய நான், 'நீ மரவுரியும், மான்தோலும் அணிவதைக் காணாது ஒழியின் அன்றோ எனது செயல் நன்றாகும்''. இராமனது பிரிவை ஆற்றாது அல்லலுறும் மன்னரின் சோக நிலையைச் சொல்லோவியமாகச் சித்தி ரிக்கும் கம்பர் பாடல்கள், அக்காட்சியைக் கற்பவர்கள் கண்முன் நிறுத்துகின்றன.

### முனிவர் கூறும் ஆறுதல் மொழியில் மன்னர் நம்பிக்கை வைத்தல்

மன்னர் இங்ஙனம் பலவாறாகக் கூறிப் பரிதவிப்பதைக் கண்ட வசிட்டர் ''மன்னா! வருந்ாதீர். இராமனைக் காட்டிற்குச் செல்லாதபடி தடுத்துவிடுகிறேன்.'' என்றார். வசிட்டர் அரசர்படும் அல்லலைக் கண்டு, அவருக்குத் தற்கால ஆறுதல் அளிப்பதற்காக இவ்வாறு கூறுகிறாரே யன்றி, இராமனைக் காட்டிற்குப் போகாமல் தம்மால்

தடுத்துவிட முடியும் என்ற நம்பிக்கையில் கூறியவரல்லர். இராமன் வனம் செல்லாமல் இருக்கவேண்டுமானால் கைகேயி தன் கொள்கையை மாற்றிக்கொள்ள வேண்டும்; அல்லது இராமன் ஆட்சியில் ஆசைவைத்துத் தசரதரை வாய்மை யிழக்கச் செய்வதற்கு முன்வர வேண்டும். இவ்விரண்டினுள் கைகேயி தனது பிடிவாத குணத்தைக் கைவிடமாட்டாள் என்பது, வசிட்டர் சற்று முன்பு அவளிடம் இராமனுக்கு அரசும், மனுவின் வழிவந்த அரசர்க்கு உயிரும் உதவுமாறு வேண்டியபொழுது அவள் அதை ஏற்றுக்கொள்ளாமல், மன்னர் வரத்தைத் தர மறுத்தால் தான் உயிரை விட்டுவிடப் போவதாகக் கூறியதிலிருந்து அவருக்குப் புலனாகியிருக்கும். இனி, முனிவர் இராமனுக்குக் குருவாக இருந்து, அவனது இயல்பை நன்குணர்ந்தவராதலால், தந்தை வாய்மையிலிருந்து வழுவுவதற்கு அவன் ஒருபொழுதும் காரணமாகமாட்டான் என்பதை நன்கு அறிவார். மேலும், திருமால் அரக்கரை அழிப்பதன் பொருட்டு இராமனாக அவதரித்துள்ள தேவ ரகசியச் செய்தியை வசிட்டர் முன்பே அறிந்துள்ளமையால் இராமன் தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றுவதற்குக் கானகம் செல்வது உறுதி என்பதையும் அவர் உணர்ந்துள்ளார். வசிட்டர் தசரதருக்கு ஆறுதல் அளிப்பதற்காகக் கூறிய சொற்களில், மன்னர் இராமன்மீது வைத்த பாசத்தினாலும், அவன் கானகம் செல்லாதிருக்க வெண்டுமே என்ற அங்கலாய்ப்பினாலும், முழு நம்பிக்கை வைக்கிறார். முனிவர் சொன்னால் இராமன் வனம் செல்வதைத் தவிர்வான் என்று எண்ணி, அழியும் நிலையிலுள்ள தம் உயிரைச் சற்றுத் தடுத்து வைக்கிறார்.

### மன்னர் நிலை கண்டு கோசலை வருந்துதல்

கோசலை மன்னரின் நிலைகண்டு, 'நினைவு மறந்திருக்கும் இவர் இறந்து போய்விட்டாரா?' என்று அயிர்த்துத் துன்பத்துள் ஆழ்ந்து வருந்துகிறாள். பின்பு மகனை நினைந்து 'இந்நாட்டுடன் எங்களையும் துறந்து விட்டாயோ?' என்று கூறுவாள். மன்னரை நோக்கி,

"வாய்மைக்கும் வாய்மையாய் உள்ளவரே! எனது வாழ்க்கைத் துணையாக அமைந்த நீர் என்னை விட்டுப் பிரிவதுதான் அறமாகுமா? நீர் உம் உயிரைப் பாது காவாது இங்ஙனம் சோர்ந்து வீழின் உலகம் முழுதும் துன்பத்தில் உழன்று மறுக்கம் அடையும். முனிவருடன் இராமன் வந்தாலும் வரக்கூடும். மனத்தைத் தேற்றுக" என்று ஆறுதல் கூறி, அவர் உடலை மென்மையாகத் தடவுகிறாள். அப்போது மயக்க நிலையிலிருந்த மன்னர் உணர்வுபெற்று அவளிடம், "இராமன் வருவானா?" என்று வினவினார். அரசர் மேலும் கூறுவார்: "வஞ்சனைக் கைகேயி, கூனியின் மொழியால் தூண்டப்பட்டு என்பால் வரங்கேட்டு என் உயிரை மாய்க்கத் துணிந்துள்ளாள். அவள் தானும், தன் மகனும் நாட்டைப் பெறுவதோடு நில்லாமல் என் மகனைக் காட்டிற்குப் போகும்படியும் கூறிவிட்டாள். (முன்பு தசரதர் 'பரதனை என் மகனாக எண்ணேன்' என்று கூறியதற்கேற்ப இப்பொழுது அவனைக் குறிப்பிடும்போது, கைகேயியின் மகன் என்று கூறுகிறார். கைகேயி கூனியால் தூண்டப்பட்ட செய்தியைத் தசரதர் எங்ஙனம் அறிந்தார் என்ற கேள்விக்கு, கூனிக்கு இயற்கையாகவுள்ள தீய குணத்தையும், அவளுக்குக் கைகேயியிடம் இருக்கும் செல்வாக்கையும் முன்பே அறிந்த மன்னர் அவளே கைகேயியைத் தவறான வழியில் தூண்டியிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டார் என்று அமைதி காண வேண்டும்.)

தசரதர் சலபோச முனிவரிடம் பெற்ற சாபம்

தசரதர் கோசலையிடம், "இராமன் கானகம் செல்வதைக் கைவிடான்; எனது உயிரும் நீங்காமல் இராது. முன்னாளில் முனிவர் ஒருவர் எனக்கிட்ட சாபம் ஒன்று உளது. அச்செய்தியைக் கேள்: (தசரதர் கோசலைக்குக் கூறுமுகமாகச் சாப வரலாற்றைக் கம்பர் வாசகர்களுக்கு அறிவிக்கிறார்.) நான் ஒரு சமயம் துட்ட மிருகங்களை வேட்டையாடுவதற்காக, வில்லும் அம்பும் கொண்டு கானகம் சென்று, ஓர் ஆற்றங்கரையில் மறைவாக

நின்று கொண்டிருந்தேன். அப்போது சற்றுத் தொலைவில் யானை நீர் பருகுவதைப் போன்ற குரல் கேட்டது நான் யானை என்றெண்ணி, அத்திசை நோக்கி அம்பு எய்தேன். எய்த இடத்தில் மனிதனின் அலறக் குரல் கேட்டு, நான் துடிதுடித்து அவ்விடத்திற்கு ஓடிச் சென்று பார்த்தபோது, முனி குமாரன் ஒருவன் அம்பு பட்டு இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து புரள்வதைக் கண்டேன். அவன் அருகில் கமண்டலம் ஒன்று கிடந்தது. நான் அவனிடம், 'அப்பா! நீ யார்?' என்று வினவினேன். அவன், 'என் பெற்றோர்கள் இரு கண்ணும் தெரியாதவர்கள்; என்னைத் துணையாகக் கொண்டே காட்டிலிருந்து தவம் புரிகிறார்கள். எனது தந்தையார் காசியப முனிவருடைய மைந்தரான விருத்தேசன் என்பவரின் புதல்வரான சலபோசன் என்பவர். என் பெயர் சுரோசனன். நீர் இக்கமண்டலத்தில் நீரை எடுத்துச் சென்று என் பெற்றோர்களுக்கு அளித்து, அவர்களது தாகத்தைத் தணிவித்து, நான் இறந்த செய்தியை அவர்களுக்குக் கூறுவதுடன், நான் இறக்கும்போது அவர்களைத் தொழுது வணங்கிய செய்தியையும் அறிவிக்க வேண்டும்' என்று கூறினான்.

''நான் தண்ணீரை எடுத்துக்கொண்டு முனிவரையும், அவர் பத்தினியையும் அணுகினேன். நெடுநேரமாகியும் மகன் வராமையால் அவர்கள் வருந்திக் கொண்டிருந்தார்கள். என் காலடியின் ஓசை கேட்டதும் தம் மகன் வருகிறான் என்றெண்ணி, அவன் தாமதித்து வரும் காரணத்தைக் கேட்டுக்கொண்டே, தம்மை வந்து தழுவுமாறு அழைத்தார்கள். நான் அவர்களிடம், 'அய்யா! நான் ஓர் அரசன்; அயோத்தி நகரை ஆள்பவன்' என்று என்னை அறிவித்துக் கொண்டு. நடந்த செய்தியைக் கூறி, அறியாமல செய்த பிழையை மன்னித்தருளுமாறு அவர்கள் பாதத்தில் வீழ்ந்தேன். மகன் இறந்த செய்தியறிந்ததும் முனிவரும், முனிபத்தினியும் தரையில் வீழ்ந்து புரண்டு அழுது, 'மகனை இழந்து இனி உயிர் வாழோம்'

என்று கூறினார்கள். நான் அவர்களிடம், ‘நானே உங்களுக்குப் புதல்வனாக இருந்து நீங்கள் ஏவும் பணிகளையெல்லாம் செய்கிறேன். வருந்தாதீர்’ என்று வேண்டினேன். முனிவர், ‘கண்ணுள் மணிபோன்ற மகனை இழந்துவிட்டு, உலகில் பழியோடு வாழ விரும்போம். இன்றே மடிந்து விண்ணுலகம் செல்வோம். நீரும் எம்மைப் போல் மகனைப் பிரிந்த துன்பத்தால் வானுலகம் செல்வீர், என்று எனக்குச் சாபமிட்டனர். அன்று எனக்கு மகவு இன்மையால் சாபத்தின் பயனாக மகன் பிறப்பான் என்ற நம்பிக்கையில் மகிழ்ச்சியோடு திரும்பினேன். முனிவரது சாபம் தப்பாது. இராமன் கானகம் சென்றால் நான் இறத்தல் உறுதி'' என்றார். இச்செய்தியைக் கேட்ட கோசலை மயங்கி உணர்விழந்தாள்.

### மக்களின் துன்பத்தில் இயற்கையின் பங்கு

வசிட்டர் அங்கிருந்து எழுந்து ஆற்றொணா வருத்தத்துடன் முடிசூட்டுவிழா மண்டபத்திற்குச் சென்று அங்குக் கூடியிருந்த அரசர்கள், அந்தணர்கள், நாட்டு மக்கள் அனைவரிடமும் அரண்மனையில் நடந்த செய்திகளைக் கூறி, பரதன் நாடாளப் போவதையும், இராமன் காட்டிற்குச் செல்லப் போவதையும் அறிவித்தார். அப்போது, அவர்களும், நகரமாந்தர்களும் அடைந்த துன்ப மிகுதியைக் கம்பர் தம் கற்பனைத் திறன் விளங்கப் பதினெட்டுக் கவிதைகளில் மிக உருக்கமாகப் பாடுகிறார். அவற்றுள் ஒரிரு பாடல்களை எடுத்துக்காட்டாகத் தருவோம். இராமன் கானகம் போவதற்கு வருந்தி,

*ஆவும் அழுத அதன் கன்றுஅழுத அன்றுஅலர்ந்த*
*பூவும் அழுத புனல் புள்அழுத கள்ஒழுகும்*
*காவும் அழுத களிறுஅழுத கால்வயப்போர்*
*மாவும் அழுதன அம்மன்னவனை மானவே.*[1]

(ஷை 102)

[1] கால் - சக்கரம், அதனையுடைய தேர். வயம் - வலிமை. மா - குதிரை. மான - ஒப்ப.)

இங்கு, இராமன் வனம் செல்வதால் மக்களுக்கு உண்டாகும் துன்பத்தில் கம்பர் அஃறிணைப் பொருள்களையும் பங்கு கொள்ள வைக்கிறார். நகரத்தவர் சிலர் 'கைகேயி அளித்தாலும் பரதன் நாட்டை ஆளமாட்டான்' என்கிறார்கள். சிலர் 'நாம் எல்லோரும் இராமனுடன் கானகம் செல்வோம்; சென்றால் சின்னாள்களில் காடு நாடாய் விடும்' என்கிறார்கள். 'இராமன் காட்டிற்குச் சென்றால் கோசலை உய்ய மாட்டாள்' என்று சிலர் கூறுகிறார்கள். 'மன்னர் நாட்டை முதலில் இராமனுக்குக் கொடுத்து-விட்டுப் பின்னர் அதையே பரதனுக்குக் கொடுத்தால் சத்தியம் தவறாதா?' என்கிறார்கள் சிலர். இராமன் வனம் செல்வதை யறிந்து வருந்தாதவர் இல்லை என்பதை,

*... ... ... ... ... ... .. நாயகனைக்*
*கான் ஈயும் என்று உரைத்த கைகேசியும் கொடிய*
*கூனியும் அல்லால் கொடியார் பிறர்உளரோ.*[1]

(ஷை 103)

என்று கேட்டுக் கம்பர் இராமன் கானகம் செல்வதற்குக் காரணமாக இருந்த கூனி, கைகேயி ஆகிய இருவர் மீதும் கற்பவர்களுக்கு வெறுப்பை உண்டுபண்ணுகிறார்.

---

[1] நாயகன் - இராமன்.

## 7. இராமன் கானகம் செல்லுதல்

### இலக்குவன் சினம் கொள்ளுதல்

கைகேயியின் சூழ்ச்சியால் இ ரா ம ன் காட்டிற்குச் செல்லப் போவதை இலக்குவன் கேள்வியுறுகிறான். கேட்டதும் ஊழிக்காலத் தீயைப் போன்று, கோ ப ம் பொங்கி எழுகிறான். கண்களில் தீப்பொறி பறக்கிறது; புருவம் மேலேறுகிறது; உடம்பு முழுவதும் வியர்வையால் நனைகிறது; மூச்சு கொடுங்காற்றாக வெளிவருகிறது. இந்நிலையில் அ வ ன் தனது ஆதி வடிவமான ஆதி-சேடனை ஒத்திருந்தான் என்று க ம் ப ர் கூறுகிறார். இலக்குவன் கோபத்தால் கைகேயியின் செயலைக் காய் கிறான். 'சிங்கத்திற்கு அளிக்க வேண்டிய உ ண வை நாய்க்குட்டிக்கு அளிக்க எண்ணுகிறாள் போலும்! இது நன்று' எ ன் று கூறி, இரு கைகளையும் புடைத்துக் சொண்டு சிரிக்கிறான். உள்ளே சென்று மார்பில் கவச மணிந்து, காலில் வீரக்கழலைக் கட்டிப் போர்க்கோலம் பூணுகிறான். வாளை இடுப்பில் கட்டி, அம்புப் புட்டிலை முதுகில் தொங்கவிட்டுக் கொண்டு, வில்லைக் கையி லெடுத்தான். நாணொலியை ஊழிக்கால மேகங்களின் ஒலிபோல் எழுப்பிக்கொண்டு, போருக்கு ஆயத்தமாக வெளிவந்தான். ''நான் இன்றே எனது தமையனைக் கொற்றமௌலி சூட்டப்போகிறேன். தேவர்கள், விஞ்சை யர்கள், நாகர்கள் இவர்கள் என்ன, மும்மூர்த்திகளுமே எதிர்த்து வந்தாலும் கைகேயியின் கருத்தை நிறைவேற ஒட்டேன்' இவ்வாறு கூறிக் கொண்டே கடலில் சுழலும் மந்தரமலை போன்று நகரின் நடுவே திரிகிறான்.

### இராமன் இலக்குவன் சினத்தைத் தணித்தல்

இலக்குவனின் வில்லின் நாண்ஒலி, சுமித்திராதேவி யின் மாளிகையிலிருந்து, அவளுக்குத் தேறுதல்மொழி கூறி, அவள் வருத்தத்தைத் தணிக்க முயன்றுகொண்டி ருக்கும் இராமனின் காதுகளில் சென்று விழுகிறது.

உடனே அவன் இலக்குவன் நிற்குமிடத்திற்கு வருகிறான். இராமனது வருகையை, ஊழித்தீயை அவிக்கும் கார் மேகம் வந்ததாகக் கம்பர் பாடுகிறார். வந்தவன், தம்பியை, ''குழந்தாய்!'' என்றழைத்து ''நீ கொஞ்சமும் கோபப்படாதவனாயிற்றே. இப்போது போர்க்கோலம் பூண்டு, வில்லும் கையுமாக நிற்பதன் காரணம் யாது?'' என்று வினவினான் இலக்குவன், ''அறத்தையும், குல மரபையும் சிதைத்த கைகேயியின் கண்முன் நானே உனக்கு முடிசூட்டப் போகிறேன். அதற்குத் தடைவிளைப்பவர் தேவர்களேயானாலும் அவர்களையும் அழித்துவிட உறுதி பூண்டிருக்கிறேன்'' என்றான். இராமன் அவனைப் புகழ்ந்த வண்ணம் ''நீ நீதிநெறிகளை யெல்லாம் நன்கு உணர்ந்தவனாயிற்றே! அறம் சிதையும்படி உன் உள்ளத்தில் சினம் எவ்வாறு எழுந்தது?'' என்று வினவினான். அதற்கு இலக்குவன் ''அரசர் அளிக்க நீ ஏற்றுக் கொண்ட ஆட்சியை, பகைவரின் சூழ்ச்சியால் இழந்து, காட்டிற்குச் செல்லப் போகிறாய். உன்னைப் பிரிந்துநான் உயிருடன் வாழ்வேனோ? நான் இச்சமயத்தில் சினம் கொள்ளாது, பின்னர் எப்பொழுது கொள்வது? அண்ணா! ஆட்சியை முதலில் உனக்கு அளித்துவிட்டுப் பின்பு இல்லையென்று சொன்ன கொடிய தன்மையுடைய மன்னர் போல, நானும் உன்னிடம் அன்பில்லாதவனாய், அவர் உன்னைக் காட்டுக்கு அனுப்புவதைப் பார்த்துக் கொண்டு இவ்வுடலைத் தாங்கியிருப்பேனா'' என்று கேட்டான்.

இராமன், ''தம்பி! தந்தை எனக்கு ஆட்சியை அளிப்பதாகக் கூறியபோது, அதை ஏற்றால் பல குற்றங்களுக்கு இடனாகும் என்பதை எண்ணாமல், நான் ஏற்க முன் வந்தது என் குற்றமன்றோ? இதில் மன்னர் குற்றம் யாது? தந்தை, சிற்றன்னை இவர்களில் எவரும் பிழை செய்யவில்லை. எல்லாம் விதியின் பிழையே. எனவே, நீ சினத்தைத் தவிர்தி'' என்றான். ஆனால், இலக்குவனோ சினம் அடங்காமல் ''அண்ணா! தாங்கள் கூறுகிறபடி

விதி வலியுடையதாயின், அவ் விதிக்கும் விதியாகவும். கைகேயியின் மதிக்கும் மதியாகவும், முத்தேவர்களின் வலிமையினும் விஞ்சியதாகவும் உள்ள எனது வில்லின் தொழிலை நீ இப்போதே காண்பாயாக'' என்று ஆர வாரம் செய்தான். இராமன் அவனிடம் அமைதியாக, ''தம்பி! வேதத்தைக் கற்ற நீ வாயில் வந்தபடி யெல் லாம் பேசலாமா? நீ இப்பொழுது கூறியது அறநெறிக்கு மாறான செயலன்றோ? சினத்தைத் தாய் தந்தையர் களிடமா காட்டுவது?'' என்று கூறினான். இலக்குவன், ''எனக்குத் தந்தையும், தலைவனும், பெற்றதாயும் நீ-தான்; வேறு யாரும் இல்லை. நீ உனக்குரிய பொருள் எதுவாயினும் அதைப் பிறருக்குத் தானம் செய்வதற்கு மட்டுமே கற்றுக்கொண்டுள்ளாய். ஆனால், நான் இதற்கு மாறாக இன்று செய்யப் போவதைப் பார்''.

*நல்தாதையும் நீ, தனி நாயகன் நீ, வயிற்றில்*
*பெற்றாயும் நீயே, பிறர்இல்லை; பிறர்க்கு நல்கக்*
*கற்றாய் இது காணுதி இன்று.* (நகர் நீங்கு. 137)

என்று சினவெறி கொண்டு நின்றான். இராமன், ''தம்பி! தந்தையிடம் முன்பே வரம்பெற்ற சிற்றன்னையே இந் நாட்டை மெய்யாக உடையவள். அவளும் தந்தையும் கூற, பரதன் அதனைப் பெறுவான். இனி எனக்குரிய செல்வம் விரதம் ஆகும். அதனினும் நன்மை பயப்பது வேறு யாது உளது? தம்பி! நன்னெறிக்கண் வாழ்கின்ற வனும், துணையாகவுள்ளவனுமான தம்பி பரதனைப் போரில் வதைத்தா, அல்லது மேன்மக்களால் போற்றப் படும் தந்தையைத் துன்புறுத்தியா, அல்லது தாயைக் கொன்றா நீ சினம் தணியப் போகிறாய்?'' என்று கனிவாகப் பேசினான்.

இராமன் இதுகாறும் கூறிய அன்பு மொழிகளால் இலக்குவன் கட்டுப்பட்டு, அவன் விருப்பத்திற்கு இணங்க வேண்டியவனானான். ஆயினும், அண்ணனுக்கு அநீதி இழைத்தவர்க்குத் தான் விரும்பியவாறு தக்க தண்டனை

அளிக்க, அண்ணன் தடையாக இருப்பதை எண்ணி வருந்துகிறான். அண்ணனின் கருணைச்செயல் குறித்து மனத்திற்குள் நொந்துகொண்டே இலக்குவன், ''கல் போன்ற எனது தோள்கள் பயனற்றுப் போகவும், வில்லையும் கணைப்புட்டிலையும் வீணில் சுமக்கவும் நான் பிறந்துள்ளேன். நான் வெகுண்டதனால் பயன் என்ன?'' என்று தான் கொண்ட சினமும், எண்ணமும் பயனற்றுப் போவதைக் குறித்து வருந்துகிறான். இராமன் அவனிடம் ''தம்பி! அன்புடன் ஆதரித்து வளர்த்த தந்தையின் சொல்லை மீறி அரசாள்வது எனக்குத் தக்கதன்று. ஆனால் உனக்கு என் சொல்லை மீறுவதால் வரப்போகும் குற்றம் யாதுமில்லை'' என்றான். இறுதியில் கூறிய வாசகம், இலக்குவனின் உள்ளத்தில் தைத்து, அவனைச் சிந்திக்கவைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இதன்பின் இலக்குவன் சினம் முற்றும் அடங்கப்பெற்று நின்றான். இலக்குவன் இராமனது சொல்லுக்குக் கட்டுப்பட்டு நின்றதற்குக் கடல் கடவுளின் ஆணைக்கு அடங்கித் தன் எல்லை கடவாது இருத்தலைக் கம்பர் உவமை கூறுவது சிறப்பாக உள்ளது. இலக்குவனது தணியாத சினத்தையும், தன் சொல்வன்மையால் தணித்து, அவனைத் தன் வழிக்கே ஈர்த்துவிட்ட இராமனைக் கம்பர், 'செல்லும் சொல்வல்லான்' என்றும் (ஷை 140) 'தென் சொற் கடந்தான்; வடசொற்கலைக்கு எல்லை தேர்ந்தான்' (ஷை 141) என்றும் கூறிப் போற்றுகிறார்.

### சுமித்திரையிடம் விடைபெறுதல்

இராமன் இலக்குவனைத் தழுவி அணைத்தவண்ணம் சிற்றன்னை சுமித்திரையின் மாளிகைக்குச் செல்லுகிறான். இவர்கள் இருவரும் செல்வதற்குத் திருமாலும், சிவபெருமானும் அணைத்துக் கொண்டு செல்வதைக் கம்பர் உவமையாகக் கூறுகிறார். சுமித்திரை கண்போன்ற தன்

மக்கள் இருவரும்[1] கானகம் செல்வதற்காக வருந்துகிறாள். இராமன் அவளைத் தேற்றுவதற்காக, ''நான் அரசர்க்கிறையை (தசரதரை)ப் பொய்யுடையவராகச் செய்யமாட்டேன். கானகம் சென்று, அதைச் சற்றுக் கண்டுவிட்டு மீண்டு வந்துவிடுவேன். நான் எங்கிருந்தாலும் அயோத்தியில் இருப்பதையே போல்வேன். என்னை வருத்தும் வலியுடையார் யாருளர்? எனவே, அன்னையே! கவலற்க'' என்று கூறினான்.

### கைகேயி மரவுரியை அனுப்புதல்

இராமன் இவ்வாறு சுமித்திரையைத் தேற்றிக் கொண்டிருக்கும் வேளையில், கல்நெஞ்சக் கைகேயி கொடுத்தனுப்பிய மரவுரியைக் கொண்டுவந்து, அவளது பணிப்பெண்கள், தம் கண்களில் நீர்வடிய, இராமனிடம் அளித்தார்கள். இலக்குவன் அப்பெண்களைப்பார்த்து, ''நாட்டை இழக்கும்படி செய்த கைகேயி அளித்தவற்றை யெல்லாம் அணிவதற்கு, இராமன் உள்ளான். போர்வில்லோடு அதைக் கண்டுகொண்டிருப்பதற்கு நானும் உள்ளேன்'' என்று வருத்தத்தோடு சொன்னான். இராமன் மரவுரியைப் பெற்றுக்கொண்டு, சிற்றன்னையிடம், 'அவளது ஆசிமொழி தனது கானக வாழ்க்கைக்குத் துணையாகும்'

[1] இலக்குவனைக் கானகம் செல்லுமாறு யாரும் கூறவில்லை. கானகம் செல்லும் கடப்பாடும் அவனுக்கு இல்லை. அங்ஙனமிருக்க, சுமித்திரை, இராமனுடன் இலக்குவனும் கானகம் செல்வதாக எண்ணி வருந்துவதன் காரணம், இராமனைப் பிரிந்து இலக்குவனால் தனித்திருத்தல் இயலாதென்பதையும், இராமன் கானகம் சென்றால் அவன் செல்லாதிரான் என்பதையும் அவள் நன்கு உணர்ந்திருந்ததேயாம். முன்பும் விசுவாமித்திரர் தமது வேள்வியை நிறைவேற்றுவதற்குக் கரிய செம்மல் (இராமன்) ஒருவனைத் தருமாறு தசரதரிடம் வேண்டியபோது இலக்குவனும் உடன் சென்றதையும் எண்ணுதல் தகும்.

என்று சொல்லி, ஆசி கூறி விடையளிக்குமாறு வேண்டினான். சுமித்திரை தன் சொல்லைவிடப் பன்மடங்கு துணையாக அமையப் போகிற தன் மகன் இலக்குவனை இராமனுக்கு அளிப்பவளாய், இலக்குவனைப் பார்த்து, "இராமனே உனக்குத் தந்தை; சீதையே தாய்; அவன் செல்லும் வனமே உனக்கு அயோத்தி. இராமனுக்குத் தம்பி என்று எண்ணாமல், அடிமை போன்று அவனுக்கு ஏவல் செய். அவன் நகரத்துக்குத் திரும்பி வரும்போது நீயும் வா. இராமனுக்கு ஆபத்து நேரின் அவனுக்கு முன்பே நீ மடிவாயாக! உடனே புறப்படு" என்று கண்ணீர் பெருகக் கூறினாள்.

*ஆகாதது அன்றால் உனக்கு அவ் வனம் இவ் அயோத்தி,*
*மாகாதல் இராமன் நம் மன்னவன், வையம் ஈந்தும்*
*போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை என்றே*
*ஏகாய்; இனி இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்.*[1]

(நகர்நீங்கு. 151)

[1] அவ் வனம் உனக்கு ஆகாததன்று (ஆகக்கூடியதே; செல்லுதற்குத் தக்கதே) என்றும்; பூங்குழற் சீதை தாயர் என்றும் அன்வயப்படுத்துக.

மேற்குறித்த செய்தியைக் கூறும் மூலநூல் சுலோகம்:

*ராமம் தசரதம் வித்தி*
*மாம் வித்தி ஜனகாத்மஜாம்*
*அயோத்யாம் அடவீம் வித்தி*
*கச்சதாத! யதா சுகம்.*

வித்தி - அறிவாயாக. மாம் - என்னை (அன்னையாகிய சுமத்திரையை) ஜனகாத்மஜாம் - ஜனகன் மகள். அடவீம் - காடு கச்ச - போ. யதா சுகம் - சுகத்தோடு.

*இராமனைத் தசரதராக அறிக*
*ஜனகன் மகளை நான்என அறிக*
*அடவியை அயோத்தியாக அறிக*
*சுகமாகப் போய்வா.*

மைந்தர்கள் இருவரும் சுமித்திரையைத் தொழுதனர். அவள் இரு கன்றினுக்கு இரங்கும் ஆவைப் போன்று வருந்தினாள். இராமனும், இலக்குவனும் கைகேயி கொடுத்தனுப்பிய மரவுரியை உடுத்துக்கொண்டு வெளியேறினர். இலக்குவன் மரவுரியை உடுத்தும்போது இராமன் அவனிடம், ''தம்பி! நான் சொல்லும் உறுதி மொழிகளை நீ மறுக்காமல் ஏற்பாயாக! தந்தையாரும், தாயர் அனைவரும் முன்போலன்றி எனது பிரிவால் துன்பத்துள் ஆழ்ந்துள்ளார்கள். நீ எனக்குப் பதிலாக இங்கிருந்து, அவர்களுக்கு உதவுவாயாக''. என்று கூறினான்.

இலக்குவனை நாட்டில் இருக்குமாறு கூறிய இராமனுக்கு அவனுரைத்த பதில்

கேட்ட இலக்குவன் நடுங்கி அழுதுகொண்டே, ''நான் உனக்கு என்ன பிழை செய்தேன்? தண்ணீர் இருந்தால்-தானே மீன்களும், நீலமலர்களும் வாழ முடியும்! மண்ணுலகம் இருந்தால்தானே சீவராசிகள் நிலைக்க முடியும்! அதைப்போல நீ இருந்தால்தானே பிராட்டியும், நானும் இருப்பவராவோம். மனைவியின் சொல்லைக் கேட்டு உன்னைக் காட்டிற்கனுப்பிவிட்டு உயிரோடிருக்கும் தந்தை தசரதரின் மகன் என்று எண்ணியா என்னைப் பார்த்து இவ்வார்த்தைகளை வழங்கினாய்? சற்று முன்பு நீ கானகம் செல்வதை அறிந்தபோது நான் அடைந்த வெகுளியை அகற்றுமாறு நீ இட்ட ஆணையினும், இப்பொழுது கூறிய சொல் மிகக் கொடியதாக உள்ளது. உனக்குரிய அரசு முதலிய உடமைகளையெல்லாம் கைவிட்டுக் கானகம் செல்லும்போது அவ்வுடமையுள் ஒன்றாக என்னையும் கருதி, என்னையும் கைவிட்டுச் செல்வதே கடமை என்று கருதினாயோ?'' என்று கூறினான். இலக்குவன் அண்ணனைப் பிரிந்து வாழ இயலாதவாறு அவனிடம் வைக்கும் ஆழ்ந்த அன்பினை விளக்குவதற்கு அவன் வாய்மொழியாகக் கம்பர் கூறும் இக்கருத்துக்கள் மிக்க நயமுடையனவாய், அவர் புலமைக்குச் சான்றாகவுள்ளன. இராமன் தம்பியின் சொற்களுக்குப் பதில்

எதுவும் கூறமுடியாமல் அவன் முகத்தைப் பார்த்த வண்ணம் கண்ணீரைப் பெருக்கி நின்றான்.

வசிட்ட முனிவருக்கு இராமன் கூறும் சமாதானம்

அப்போது வசிட்ட முனிவர் அங்கு வருகிறார். இராமலட்சுமணர்கள் அணிந்துள்ள மரவுரி அவர் கண்ணில் படுகிறது. அவர்கள் முகத்தைப் பார்த்து அவர்களது மனவுறுதியையும், அவர்கள் கானகம் செல்வதற்கு ஆயத்தமாகி விட்டதையும் உணர்ந்து கொள்கிறார். அப்போது உண்டான துன்பத்தில் முனிவர் தம்மையே மறந்து விடுகிறார். பின்பு அவர் தமக்குள்ளே பின்வருமாறு எண்ணுகிறார்: 'இராமன் முடிசூட வேண்டிய மங்கல நாளில் மரவுரி அணிய நேர்ந்துள்ளது. ஊழ்வினையை யாராலும், பிரமனாலும்கூட, ஒழிக்க முடியாது. இத்தீவினை கைகேயியால் விளைந்ததன்று. இராமன் இதனை அடைதற்குரியவனல்லன். இது எந்த வினையினால் நடந்ததோ? யாருடைய சூழ்ச்சியோ? உண்மை பின்னால் தெரியக் கூடும். (முக்காலங்களையும் உணர்ந்தவரும், இராவண வதத்தின் பொருட்டுத் திருமால் இராமனாக அவதரித்திருப்பதை முன்பே அறிந்தவருமான வசிட்டமுனிவர் இங்ஙனம் சொல்வதன் பொருத்தத்தை அறிஞர்கள் சிந்திக்கவும்.) இவ்வாறு எண்ணிய முனிவர் இராமனை அணுகுகிறார். அவர்களுக்குள் பின்வரும் உரையாடல் நிகழ்கிறது.

முனிவர்: நீ கானகம் சென்றால் மன்னர் உயிர் வாழ மாட்டார்.

இராமன்: தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவது எனது கடமை. அவருடைய இடரை நீக்குவது உமது கடமை. இதுவே முறையாகும்

முனிவர்: சக்கரவர்த்தி உன்னைக் கானகம் செல் என்று கூறவில்லையே கைகேயிதானே அக்கொடிய சொல்லைச் சொன்னாள். மன்னர் ஆராயாமல், வரங்களைத் தருவதாக அவளுக்குக் கூறினார்.

(அதனால் அவற்றை நிறைவேற்றியே தீரவேண்டும் என்ற கடப்பாடு உனக்கு இல்லை.)

இராமன்: தந்தை வரம் தருவதாக முதலில் சம்மதித்தார். அதன்பின் அன்னை வரத்தைக் கேட்டாள். அதை நான் தலைமேற் கொண்டேன். எல்லாவற்றையும் சாட்சியாக இருந்து அறிந்த நீர் என்னைத் தடுக்கின்றீரா?

வசிட்டர் பதில் சொல்ல மாட்டாது கண்ணீர் வடித்தார். இராமன் அவரை வணங்கிவிட்டு, முற்றிய உவகையனாய்த் தம்பியுடன் தந்தையின் மாளிகைக்குச் செல்கிறான். (ஷ 170)

விண்ணவரும் மண்ணவரும் அடையும் துயரம்

இராமன் கானகம் செல்வதை அறிந்து விண்ணவரும், மண்ணவரும் வருந்துகிறார்கள். தேவர்கள் இராமன் காட்டிற்குச் செல்வதால் தமக்கு வரவிருக்கும் நன்மையையும்கூட விரும்பாதவராய் வருந்துகிறார்கள். அந்தணர்கள், முனிவர்கள், அரசர்கள் அனைவரும் துன்புறுகின்றனர். தசரதரின் அறுபதினாயிரம் தேவிமார்களும் அழுது கொண்டு இராமனைப் பின் தொடர்கிறார்கள். இதுகாறும் அத்தேவியர்களின் முகத்தைக் காணாத சூரியனும் இன்று அவர்கள் முகத்தைக் கண்டுவிடுகிறான். கம்பர் இச்செய்தியின் அடியாக ஓர் உண்மையை விளக்குகிறார். இந்திரனும்கூட இடர் வரும்போது அவன் எதிர்பாராத செயல்கள் நடந்து விடுகின்றன என்கிறார். நகர மக்கள் கடல்போலத் தன்னைப் பின்தொடர்ந்துவர இராமன் அவர்களுக்கு ஆறுதல் கூற அறியானாய்த் தன் மனைநோக்கி நடக்கிறான் (ஷ 187). (இராமன் தந்தையின் மாளிகைக்குச் சென்ற செய்தியைக் கூறிய கம்பர், அங்கு நிகழ்ந்ததைப் பற்றி எதுவும் கூறாமல், அவன் கானகம் செல்வதற்காக முனிவர்கள், அந்தணர்கள் முதலியோர் அடையும் துன்பங்களை வர்ணித்துவிட்டுப் பின் இராமன் தன் மனையை நோக்கி நடந்தான் என்று கூறுகிறார்.)

முடிசூடுவதற்காகத் தேரிலேறிச் சென்ற இராமன், தான் சென்ற தெருவிலேயே மரவுரியை உடுத்துக் கால் நடையாக வருவதைக் கண்ட மக்கள் தமது ஆற்றாமையைப் பலபடியாக வெளிப்படுத்துகிறார்கள். 'பெண்ணால் (கைகேயியால்) தீவினை நிகழப்பெற்ற நாட்டில் அதைக் காணும்படி கண்ணைக்கொண்டு பிறந்ததே இழிவாம்' என்று சிலர் கூறுகின்றனர்.

*பெண்கொடு வினை செயப்பெற்ற நாட்டினில்*
*கண்கொடு பிறத்தலும் கடைஎன்றார் சிலர்.*[1]
(ஷை 190)

'கைகேயியின் சொல்லை மறுத்துரைக்க முடியாமல் எளியராகி விட்ட அரசரை 'நீர் தருமத்தை அழிக்க விரும்புகிறீரா?' என்று கேட்காத இராமன் மக்களுக்குத் துன்பம் விளைப்பதில் கைகேயிக்கு ஒப்பாவான்' என்று வேறு சிலர் கூறுகிறார்கள். 'இராமனுடன் இலக்குவன் மட்டுந்தானே கானகம் செல்கிறான். இந்த நாட்டில் இராமனுக்கு உறவு இவன் ஒருவன் தானா?' என்று வினவுவார் சிலர். பட்டாபிஷேகத்தைக் காண்பதற்காக விலையுயர்ந்த ஆடைகளை அணிந்து வந்த மக்கள், இராமன் கானகம் செல்வதை அறிந்த வருத்தத்தில் எளிய உடைகளை உடுத்துக் கொண்டு, விலையுயர்ந்த ஆடைகளைக் கிழித்தெறிந்து விட்டார்கள். மற்றும் சிலர், 'மகனைக் கானகத்திற்கு அனுப்பிவிட்டு, வாய்மையைக் காக்கும் மன்னரின் மனம் இரும்பேயாம்' என்று பழிக்கிறார்கள். 'மக்கள் எல்லோரும் இராமனுடன் காட்டிற்குச் சென்றுவிட்டால் ஆளில்லாத நாட்டைக் கைகேயியும் பரதனும் இருந்து ஆள்வார்களா?' என்று சிலர் வினவுகிறார்கள்.

## இராமன் தான் கானகம் செல்வதைச் சீதைக்கு அறிவித்தல்

வழியிற் கண்ட மக்களெல்லாம் இவ்வாறு வருந்திப் புலம்புமாறு, இராமன், தாய்மார்கள், முனிவர், அந்தணர் முதலியோர் பின்தொடரத் தன் அரண்மனையை

[1] கடை - இழிவு.

அடைந்து, சீதை இருக்கும் இடத்திற்கு வருகிறான். இராமனை மரவுரி உடுத்த கோலத்தில் கண்ட சீதை துணுக்கமுறுகிறாள். கோசலையும், சுமித்திரையும் அவளைக் கட்டிக் கொண்டு ஓவென்று கதறுகிறார்கள். பிராட்டி ஒன்றும் விளங்காத நிலையில், எல்லோரும் அழுவதைப் பார்த்துத் தானும் உடல் நடுங்கிக் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டு, தன் நாயகனைப் பார்த்து, "இம் மிகப்பெரிய துன்பத்திற்குக் காரணமாகப் பேரரசர்க்கு ஏதேனும் தீங்கு நிகழ்ந்துவிட்டதா?" என்று வினவினாள். அப்போது இராமன் சீதையிடம் நடந்த செய்திகளைக் கூறுகிறான். ஒப்பற்ற என் தம்பி பரதன் நாட்டை ஆளப்போகிறான். நான் எனது தந்தை தாயார் இருவரது ஆணையையும் தலைமேற்கொண்டு கானகம் சென்று வருவேன். நீ வருந்தாதே" என்றான்.

**சீதையின் சோகம்**

இச்சொற்கள் காதில் புக்கதும், சீதை சொல்லொணாத் துயரத்தால் தேம்பித் தேம்பி அழுகிறாள். அவளது மனநிலையையும், அவள் வருந்துவதன் காரணத்தையும் கம்பர் பின்வருமாறு விளக்குகிறார்.

*நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்*
*மேயமண் இழந்தான் என்றும் விம்மலள்*
*நீ வருந்தலை நீங்குவன் யான் என்ற*
*தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்*[1]

(ஷை 224)

தனது நாயகன் தனக்குரிய நாட்டை இழந்ததற்காகச் சீதை வருந்தவில்லை. அவன் காட்டிற்குச் செல்வது குறித்தும் அவள் கவலைப்படவில்லை. 'நான் உன்னைப் பிரியப் போகிறேன் நீ வருந்தாதே' என்று கூறிய கொடிய சொற்களே அவளால் பொறுக்க முடியாதனவாக

[1] விம்மலள் - வருந்தவில்லை, தேம்புவாள் - விம்மி அழுவாள்.

இருந்தன அச்சொற்கள் அவளது செவிகளைச் சுட்டு விட, அதனால் அவள் தேம்புகிறாள். கம்பர் இதன்மேல் மற்றோர் செய்தியையும் நமக்கு நினைப்பூட்டுகிறார். திருமால் உலகில் அறத்தை நிலைநிறுத்துவதற்காகத் தனது பாற்கடல் பள்ளி நீங்கி, இராமனாக அவதரித்த வேளையில், கணவரின் பிரிவை ஆற்றாது அவரதுதேவி[1] சீதையாக உலகில் பிறந்துள்ளாள். அத்தகைய சீதை, இப்போது இராமன், 'உன்னைப் பிரியப்போகிறேன்' என்று சொன்னால் அச்சொல்லை எங்ஙனம் ஆற்றுவாள்? என்று கூறுகிறார்.

இராமன் கூறிய சொற்களை எண்ணுந்தோறும் அவளுக்கு மேன்மேலும் வருத்தமே மிகுகிறது, 'தன் நாயகர் (இராமன்) தமது தாய் தந்தையர்கள் கூறிய செயலைச் செய்யத் துணிந்தது தக்கதே. ஆனால், அவர் ஏன் என்னை மட்டும், 'நீ இங்கே தனித்திரு' என்று சொன்னார்?' இவ்வாறு எண்ணிச் சீதை உயிரே உடலைவிட்டு நீங்குவதைப் போன்ற நிலையை அடைந்தாள்.

*அன்ன தன்மையள் ஐயனும் அன்னையும்*
*சொன்ன செய்யத் துணிந்தது தூயதே*
*என்னை என்னை இருத்தி யென்றான் என்றாள்*
*உன்ன உன்ன உயிர்உமிழா நின்றாள்.*[2]

(நகர் நீங்கு. 226)

---

[1] திருமாலின் தேவியர்களான பூதேவி (இலக்குமி), புவி தேவி (மண்மகள்) ஆகிய இருவருள் புவிதேவியே சீதையாக அவதரித்துள்ளாள் என்பது பின்வரும் செய்தியால் அறிப்படும்.

*உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரின்ஒளி*
*பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப்பட்டதென*
*... ... தோன்றினாள்.*

(பாலகாண்டம்; கார்முக. 17)

[2] என்னை-எதற்காக. உமிழ்தல்-உடம்பைவிட் டகல்தல்.

சீதைபடும் அல்லலைக் கண்ட இராமன், தான் அவளைத் தன்னுடன் அழைத்துச் செல்ல எண்ணாததன் காரணத்தைக் கூறி, அவளது வருத்தத்தைத் தணிக்க முயல்கிறான். தான் செல்ல வேண்டிய காட்டு வழியிலுள்ள கற்கள் அரக்கை உருக்கி வார்த்தாற் போன்ற வெம்மையுடையனவாய் இருக்குமென்றும், சீதையின் செம்பஞ்சு ஊட்டிய மெல்லிய பாதத்தால் அவற்றைத் தாங்குதல் இயலாதென்றும் கூறுகிறான்.

*கல்அரக்கும் கடுமைய அல்ல நின்*
*சில்அரக்குஉண்ட சேவடிப் போதுஎன்றான்.*[1]

(ஷை 227)

கேட்ட சீதை, ''நீர் உம் மனத்துள் என் மீது இரக்கமும், பற்றும் இன்றி, என்னைப் பிரிந்துசெல்ல எண்ணி, அதற்குக் காடு சுடும் என்பதைக் காரணமாகக் கூறுகிறீர். ஊழிக்காலச் சூரியனும், அக்கால நெருப்பும் ஒப்பாகாத உமது பிரிவாகிய பெருநெருப்பை விடவும், நீர் செல்லும் காடு சுடுமோ?'' என்று வினவினாள்.

*... ... ... ... ... ஊழி அரக்கனும்*
*எரியும் என்பது யாண்டையது ஈண்டு நின்*
*பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்றாள்.*[2]

(ஷை 228)

சீதையின் அச் சொற்களைக் கேட்ட இராமன், அவள் உள்ளத்தில் ஓங்கி நிற்கும் உணர்ச்சியின் உறுதியைத் தெரிந்து கொண்டான். கண்ணீர்க் கடலில் கிடந்து அழுந்தும்படி அவளைக் கைவிட இயலாதவனாகி, 'என்ன செய்வது?' என்று சிந்தித்தான்.

---

[1] அரக்குதல் - தைத்தல். சில் - குளிர்ச்சி. அரக்கு - செம்பஞ்சு. உண்ட - பூசிய.

[2] அருக்கன் - சூரியன்.

சீதை மரவுரி உடுத்து இராமனுடன் புறப்படுதல்

அவ்வேளையில் பிராட்டி அரண்மனைக்குள்ளே புகுந்தாள். புகுந்தவள், சிறிது நேரத்தில் வெளிவந்தாள். இப்பொழுது அவள் முன்பு போல இளவரசிக் கோலத்தில் இல்லை. மரவுரி உடுத்துத் தவக்கோலத்தில் காட்சி அளித்தாள். வந்தவள் நேரே இராமனைக் கிட்டி அவனது பருத்து நீண்ட கரங்களைப் பற்றிக்கொண்டு நின்றாள்.

*அனைய வேலை அகன்மனை எய்தினள்*
*புனையும் சீரை துணிந்து புனைந்தனள்*
*நினையும் வள்ளல்பின் வந்து அயல் நின்றனள்*
*பனையின் நீள்கரம் பற்றிய கையினாள்.*[1]

(ஷை 230)

இராமன் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் தான் அவனுடன் செல்வது உறுதி என்பதை இச்செயலின் மூலம் சீதை அங்கிருந்த எல்லோருக்கும் உணர்த்திவிடுகிறாள். இச் செயலைக் கண்டார் அனைவரும் கலங்கி அழுகின்றனர்.

*ஏழை தன்செயல் கண்ட யாவரும்*
*வீழும் மண்ணிடை வீழ்ந்தனர் வீந்திலர்.*[2]

(ஷை 231)

(கம்பர் இந் நிகழ்ச்சியைச் சோகச் சித்திரமாகப் படம் பிடித்துக் காட்டிக் கற்பவர் கண்களில் கண்ணீரை ஊற்றெடுத்துப் பெருகச் செய்துவிடுகிறார்.) இராமன் பின்னும் பிராட்டியைப் பார்த்து, ''காட்டிற்கு வருவதால் விளையக்கூடிய தீமையை உணராமல் நீ என்னுடன் புறப்பட்டுவிட்டாய். இதனால் நீ எனக்கு எல்லையற்ற இடர் தரப் போகிறாய்''[3] என்றான். இராமன் இவ்வாறு

---

[1] வேலை - பொழுது. *சீரை* - மரவுரி.

[2] ஏழை - *சீதை*. வீதல் - இறத்தல்.

[3] இராமனின் இக்கூற்று, வருங்கால நிகழ்ச்சியை உள்ளுணர்வால் உணர்ந்து கூறியதுபோல் அமைந்துள்ளது.

கூறியதில் சீதைக்குச் சினமே ஏற்படுகிறது. ''நான் உம்முடன் வருவது ஒன்று மட்டுமே உமக்குத் துன்பமாக உள்ளது போலும்! என்னைத் துறந்துவிட்டால் பின்னர் வருவன அனைத்தும் இன்பந்தாமா?'' என்று வினவினாள். இராமனால் இதற்கு மறுமாற்றம் சொல்ல இயலவில்லை. (அறிவால் வினவும் கேள்விக்கு அறிவால் சிந்தித்து விடை கூறுவது சாத்தியமாகலாம். ஆனால். ஆழமான அன்புள்ளத்திலிருந்து உருவெடுக்கும் உணர்ச்சிமயமான கேள்விகளுக்கு விடைகூற அறிவால் இயல்வதில்லை. அன்புச் செயல்களைச் செய்வதன் மூலமே அவற்றிற்குத் தக்க விடையிறுக்க முடியும்.)

மூவரும் மன்னரின் அரண்மனைக்குச் செல்லுதல்

இராமன் மறுமாற்றம் கூறாமல், அங்கிருந்து புறப்பட்டுச் சீதை முன்னும், இலக்குவன் பின்னுமாகத் தன்னுடன் வர, வீதி வழியே தந்தையின் மாளிகைக்குச் செல்கிறான். வழியில் அவர்களைக் கண்ட மக்கள், 'இப்பொழுது அழுகையைக் கைவிட்டு நாமும் இராமனுடன் காட்டிற்குச் செல்வோம்' என்று கூறிப் போகிறார்கள் இராமன் தந்தையாரின் அரண்மனைக்குச் சென்று, அங்குத் தம் 'தாயரைக் கும்பிட்டு', மன்னரைத் தேற்றுமாறு அவர்களை வேண்டிக்கொள்ளுகிறான்.

மூவரும் கானகம் செல்லுதல்

தாய்மார்கள் அழுது கொண்டே இராமனையும், சீதையையும், இலக்குவனையும் காக்குமாறு கடவுளை வேண்டி வாழ்த்துக் கூறுகிறார்கள். பின்னர் இராமன் முதலிய மூவரும் வசிட்ட முனிவரை வணங்கிவிட்டுச் சுமந்திரர் செலுத்தும் தேரில் ஏறிக் கானகத்திற்குப் புறப்படுகின்றனர். இராமன் செல்வதைக் கண்ட நகர மாந்தர்கள் அனைவரும் அவனைப் பின் தொடர்கிறார்கள். மன்னரை விட்டு நீங்குதலில்லாத அவரது தேவிமார்களும், அந்நகரத்திலுள்ள உயிரில்லாத ஓவியங்களும் மட்டுமே

இராமனுடன் செல்லவில்லை என்று கம்பர் இக்கருத்தை அதிசயோக்தியாகப் பாடுவது கற்பனை நயம் சிறந்ததாகும்.

இளங்கோ இச்செய்தியைச் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடுதல்

இராமனது பிரிவை ஆற்றவியலாத நகர மாந்தர்கள், அவனைப் பின் தொடர்ந்து கானகத்திற்குச் சென்ற நிகழ்ச்சியை, இளங்கோவடிகள், தமது சிலப்பதிகாரத்தில், கோவலன், கண்ணகியுடன் மதுரைக்குச் சென்ற வேளையில் அதனை அறிந்த புகார்நகர மக்கள் அடைந்த துன்பத்திற்கு உவமை கூறுகிறார்.

*பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்*
*அரசே தஞ்சம் என்று அருங்கான் அடைந்த*
*அருந்திறல் பிரிந்த அயோத்தி போல*[1]
(புறஞ்சேரி இறுத்த காதை 63-5)

இளங்கோவடிகள் குறிப்பிடும் இராமாயணச் செய்திகள் மூன்றனுள் இஃது ஒன்று என்பது அறியத்தகும்.[2]

---

[1] பெருமகன் - தசரதர். தஞ்சம்-எளிய பொருள். அருந்திறல்-இராமன்.
பெருமகன் ஏவலைச் செய்தலே உயர்ந்தது. அஃதல்லாத அரசாட்சி எளியது (தாழ்ந்தது) என்பது கருத்து.

[2] இரண்டாவது செய்தி: கோவலன் மாதவியுடன் வாழ்ந்து, அதனால் செல்வமனைத்தும் இழந்து, பின்பு அவளையும் வெறுத்துக் கண்ணகியிடம் வருகிறான். அங்கு அவள் அளித்த சிலம்பை மதுரையில் கொண்டு விற்க அவளுடன் புறப்பட்டுப் போகிறான். கவுந்தியடிகள் என்னும் சமணப் பெண் துறவி அவர்களுக்கு வழித்துணையாக அமைகிறாள். செல்லும் வழியில் கோவலன் தனக்கு நேர்ந்த துன்பங்களையெல்லாம் கவுந்தியடிகளிடம் வாய் விட்டுக் கூறி வருந்துகிறான். அப்போது அடிகள் இராமன் கானகம் சென்று, மனைவியை இழந்து, பட்ட துன்பத்தை எடுத்துக்கூறிக் கோவலனுக்கு ஆறுதல் அளிக்கிறாள்.

## 8. தசரதர் அமரராதல்

### கானகம் சென்றவர்கள் இரவில் ஒரு சோலையில் தங்குதல்

இராமன், சீதையுடனும், இலக்குவனுடனும், சுமந்திரர் செலுத்தும் தேரிலேறி, நகரமாந்தர்கள் பின்தொடர்ந்து வரக் கானகத்தினுள் செல்லுகிறான். இரண்டு யோசனை தூரம் சென்றதும், வழியில் ஒரு சோலையைக்கண்டு, அது முனிவர்கள் வாழும் இடம் என்பதைத் தெரிந்து, இராமன் தேரைவிட்டிறங்கி, முனிவர்களைச் சந்தித்து அவர்களோடு அளவளாவுகிறான். அவனுடன் சென்ற நகரமாந்தர்கள் சோலையின் பின்புறத்தில் தங்குகிறார்கள். எல்லோரும் அன்றைய இரவுப் பொழுதை அச்சோலையிலேயே கழிக்கின்றனர். நள்ளிரவில் மக்கள் உறக்கத்தில் ஆழ்ந்திருக்

---

*தாதை ஏவலின் மாதுடன் போகி*
*காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்*
*வேத முதல்வற் பயந்தோன்.*

(ஊர்காண் காதை 46-8)

தாதை - தசரதர். மாது - காதலி; சீதை. உழந்தோன் - இராமன். நீங்க-(இராவணனால் கவரப்பட்டு) பிரிதலால். வேத முதல்வன் - பிரமன். பயந்தோன் - திருமால்.

மூன்றாவது செய்தி: கோவலன் கொலையுண்ட மறுநாள் காலையில், ஆயர்பாடியில் பல உற்பாதங்கள் நிகழ்கின்றன மாதவி அவற்றின் பரிகாரமாக ஆயர்பாடியில் குரவைக்கூத்து நிகழ்த்துகிறாள். அக்கூத்தில் குரவையாடும் பெண்கள் திருமாலைப் புகழ்ந்து பாடிய பாடல்களில் இராமன் இலங்கையை அழித்த செய்தியைப் பின் வருமாறு குறிப்பிடுகிறார்கள்.

*தம்பியொடும் கான்போந்து*
*தொல்லிலங்கைக் கட்டழித்த*
*சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே*
*திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே*

(ஆய்ச்சியர் குரவை; படர்க்கைப் பரவல் 3-5)

கட்டழித்தல்-நிலைகுலையச்செய்தல் சேவகன்-இராமன்.

கும்போது இராமன் சுமந்திரரைத் துயிலெழுப்பி, உறங்கு கின்ற மக்கள் அறியாமல் தேரை நாட்டிற்கு ஓட்டிச் செல்லும்படி கூறினான்.

### சுமந்திரர் இராமனைப் பிரிவதற்கு வருந்துதல்

சுமந்திரர் இராமனைப் பிரிந்து செல்வதற்கு வருந்து கிறார். இராமனைக் காட்டில் விட்டுவிட்டுத் தாம் மட்டும் நாட்டிற்குச் சென்றால் கைகேயியை விடவும், விதியை விடவும் தாம் கொடியர் ஆதல் கூடுமே? என்று இராம னிடம் கூறுகிறார். 'தசரதர், 'இராமன் எங்கே?' என்று கேட்டால் என்ன பதிலுரைப்பேன்?' என்று எண்ணி வருந்துகிறார். 'இராமனை அழைத்து வருவான்' என்ற நம்பிக்கையில் உயிர் தரித்திருக்கும் மன்னருக்கு, இயம தூதன் போல் சென்று 'இராமன் வரவில்லை' என்று சொல்வேனோ?' என்று கேட்டுத் துன்பமிகுதியில் தரையில் புரள்கிறார். இராமன் அவரை இரு கைகளாலும் தூக்கித் தனியாக ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று, அறத்தின் மேன்மையையும், அதைப் பேண வேண்டிய தனது கடமை யையும், தந்தையை வாய்மையுடையவராகச் செய்வதற்குத் தான் கானகம் செல்வது அவசியம் என்பதையும் விளக்கிச் சொல்லி அவரைச் சமாதானப்படுத்துகிறான்.

### இராமன் சுமந்திரரிடம் செய்தி சொல்லி அனுப்புதல்

இராமன், வசிட்டருக்கும், தந்தையாருக்கும் அறிவிக்கு மாறு சில செய்திகளைச் சுமந்திரரிடம் கூறுகிறான். ''நான் வசிட்டரை வணங்கும் செய்தியை முதலில் அவ ருக்கு அறிவித்து விட்டு, பின் முனிவருடன் தந்தையிடம் சென்று, நான் தந்தையை வணங்கும் செய்தியை அறிவி யுங்கள். தம்பி பரதனிடம், வேதியர்க்கும், தேவர்களுக்கும் இனிய செயல்களைச் செய்யுமாறும், நான் பிரிந்த வருத் தத்தைத் தந்தையார்க்குத் தணிக்குமாறும், முனிவரைக் கொண்டு கூறச் செய்யுங்கள். நான் கானகம் வந்தது சிற்றன்னையால் நிகழ்ந்ததென்று நான் கருதவில்லை. தந்தையார் என்னிடம் வைத்த அன்பைச் சிற்றன்னை

யிடமும், தம்பி பரதனிடமும் வைக்குமாறு நான் வேண்டிய தாக முனிவர் வாயிலாக அவருக்குக் கூறுங்கள். பதினான்கு ஆண்டுகள் கழிந்தவுடன் தந்தையாரின் திருவடியை வந்து வணங்குவேன் என்பதை முனிவரைக் கொண்டு மன்னரிடம் அறிவிக்கவும். என்னைப் பெற்றெடுத்த தாய் மார்கள் மூவருக்கும் எனது வணக்கத்தைத் தெரிவிக்கவும் பிறகு மன்னரின் வருத்தத்தைப் போக்கியவாறு அவர் பக்கத்திலேயே இருப்பீராக!'' என்று வேண்டினான். (கம்பர் இச்செய்தியைப் பாடும்போது திருமாலே இராம னாக அவதரித்து வந்துள்ள பாரமார்த்திக உண்மையைச் சில இடங்களில் குறிப்பிடுகிறார். அவர் குறிப்பிடும் சொற்கள் வருமாறு:

*அடக்கும் ஐம்பொறியோடு கரணத்து அப்புறம்*
*கடக்கும் வால்உணர்வினுக்கு அணுகும் காட்சியான்.*[1]

(தைலமாட்டு. 27)

இதன் பொருள்: மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளாலும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அகக் கரணங்களாலும் அறியப் படாதவனாய், உண்மை ஞானத்தால் மட்டுமே உணரப் படுபவன் இராமன் என்பதாம்.

*மறைகளை மறைந்து போய் வனத்துள் வைகுவான்.*

(ஷை 37)

இதன் பொருள்: வேதங்களால் அறியப்படாத இராமன் இப்பொழுது கானகத்தில் தங்குகிறான்.

சீதையும் இலக்குவனும் கூறி அனுப்பும் செய்திகள்

சீதை சுமந்திரரிடம், ''எனது வணக்கத்தை அரசருக்கும், அத்தைமார்களுக்கும் கூறி, அதன்பின் நான் வளர்த்த பூவையையும், கிளியையும் பேணுமாறு என் தங்கைமார்களுக்கு அறிவிக்கவும்'' என்று வேண்டுகிறாள். சீதை தான் வளர்த்து வந்த பறவைகளைப் பேணுமாறு

[1] வால்உணர்வு - மெய்ஞ்ஞானம்.

தன் தங்கையர்க்குச் சுமந்திரர் மூலம் அனுப்பும் செய்தியிலிருந்து, அவளது வெள்ளை உள்ளம், பிள்ளை மதி, சிற்றுயிர்களிடம் வைக்கும் கருணை இவை புலப்படுவதை உணரலாம். கடைசியாக இலக்குவன் செய்தி சொல்லும் போது, "இராமனுக்கு முதலில் ஈந்த அரசை, பின்பு கைகேயிக்கு அளித்தவரை ஒரு மன்னர் என்று கூறுதல் தகுமா? மூத்த புதல்வனைக் காட்டிற்கனுப்பிவிட்டு, இன்னும் சாகாமல் இருக்கும் அரசரின் ஆயுள் மிக்க வலிமையுடையதே. நாட்டை முறையின்றி ஆளப்போகும் பரதனுக்கு நான் தம்பியல்லன்'' என்று, இராமன் நாட்டை இழந்து காட்டிற்குச் செல்ல நேர்ந்த கோபத்தில், தசரதரை நிட்டூரமாகப் பேசினான். இராமன் தம்பியைச் சமாதானப் படுத்திவிட்டு, சுமந்திரருக்கு விடை கொடுத்தனுப்புகிறான். சுமந்திரரும் யாருமறியாமல் தேரை அயோத்தி நோக்கி ஓட்டிச் சென்று விடுகிறார்.

சுமந்திரரை அனுப்பிவிட்டு இராமன் பயணத்தைத் தொடர்தல்

சுமந்திரரை நகரத்திற்கு அனுப்பிவிட்டு, இராமன் அந்நள்ளிரவிலேயே பயணத்தைத் தொடர்கிறான். அப்பொழுது அவனுக்குத் துணையாக அவனது அறிவு, வாய்மை, கருணை, ஆகிய குணங்களும், கைவில்லும், சீதையின் கற்பும், இலக்குவனும் உடன் சென்றதாகக் கம்பர் பாடுகிறார். மேலும், அவரே இராமன் கானகம் சென்றதை,

*வள்ளல் தாதை பணிஎன்னும் வானோர்*
*தவத்தால் வயங்கு இருளில்.*[1] போனான்.
(தைலமாட்டு. 87)

என்று கூறி, தசரதர் ஆணைப்படி இராமன் கானகம் செல்வது, தேவர்கள் செய்த தவத்தின் பயனால் நிகழ்ந்தது என்ற தேவ ரகசியத்தை நமக்கு நினைப்பூட்டுகிறார்.

[1] வள்ளல் தாதை - தயரதர். பணி - கட்டளை. வயங்கு இருள் - செறிந்த இருள்.

### மக்கள் ஊர் திரும்புதல்

சோலையில் துயின்றுகொண்டிருந்த மக்கள் காலையில் விழித்தெழுந்தபோது இராமனைக் காணாது வருந்தி பின்பு தேரின் சுவடு அயோத்தி நோக்கிச் செல்வதைப் பார்த்து, 'சுமந்திரர் இராமனைச் சமாதானப்படுத்தி, நாட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டார்' என்றெண்ணி, மகிழ்ச்சியோடு ஊருக்குத் திரும்பினார்கள் அங்குச் சென்ற பின் அவர்கள் மன்னர் இறந்ததையும், இராமன் நாட்டிற்கு மீளவில்லை என்பதையும் அறிந்து வருந்தினார்கள். அவர்களுக்கு வசிட்டர் ஆறுதல் மொழி புகன்றார்.

### இராமன் வரவில்லை என்பதை அறிந்த மன்னர் மரணமடைதல்

அயோத்திக்கு மீண்டு வந்த சுமந்திரர் முதலில் வசிட்டரைச் சந்தித்து, காட்டில் நடந்த செய்திகளை (இராமனை நாட்டிற்கு வந்து, அவன் பிரிவை ஆற்றாது அலமரும் அரசருக்கு உயிரை அளிக்குமாறு தான் பரிந்து வேண்டியதையும், அவன் மன்னரின் வாய்மையைக் காப்பதற்குத் தான் கானகம் செல்லப் போவதாக உறுதிபடக் கூறிச் சென்றுவிட்டதையும்) அறிவிக்கிறார். கேட்ட முனிவர், "அந்தோ! முடிந்தனன் மன்னன். மேலை விதியினை வென்றவருளரோ?" என்று கூறி வருந்துகிறார். பின்னர் இருவருமாகத் தசரதரைக் காணச் செல்கின்றனர். அங்குக் கூடியிருந்த மக்கள் சுமந்திரரைக் கண்டதும் "தேர் வந்துவிட்டது" என்று கூறினார்கள். சுமந்திரர் இராமனை அழைத்து வருவார் என்ற நம்பிக்கையில் உயிரைத் தாங்கியிருந்த தசரதர், "தேர் வந்தது" என்ற சொல்லைக் கேட்டதும் கண்விழித்து, வசிட்டரைப் பார்த்து, "வீரன் (இராமன்) வந்தானோ?" என்று கேட்டார். 'இராமன் வரவில்லை' என்று சொல்லி, அதனால் மன்னரின் உயிருக்கு இயமனாக அமைந்துவிட அஞ்சிய முனிவர் வாய் திறவாது நின்றார். முனிவரின் மௌனத்திலிருந்து இராமன் வரவில்லை என்பதை உணர்ந்துகொண்ட தசரதர் உடனே உயிர் சோர்ந்தார் இன்ப துன்பங்களைச்

சமமாகப் பாவிக்கும் பக்குவ முதிர்ச்சியுடைய வசிட்டரே மன்னர்படும் அவலத்தைக் கண்டு, 'இவ் அல்லல் காண்கிலேன்' என்று கூறி அவ்விடம் விட்டகல்கிறார். தசரதர் இந்த நிலையிலும் மகன்மீது வைத்த கழிபெருங் காதலால் 'இராமன் வந்துவிட மாட்டானா?' என அவனைக் காணத் துடிக்கும் அவாவால் சுமந்திரரைப் பார்த்து, "நம்பி (இராமன்) சேயனோ? அணியனோ?" என்று வினவுகிறார். பொய்யுரைக்க அஞ்சிய சுமந்திரர், "இராமனும், தம்பியும், பிராட்டியும் கானகம் போயினர்" என்று உண்மையைக் கூறினார். கூறிய அக்கணமே மன்னர் 'ஆவி போனார்'; இராமனையே உயிராகவுடைய தசரதர் இராமன் இனி வாரான் என அறிந்ததும் உயிர் நீங்கிய உடம்பாயினார்.

### தேவிமார்களின் அழுகை

மன்னர் மடிந்ததை அறிந்த கோசலை பலவாறு கூறி அழுது புலம்புகிறாள். 'நன் மக்களைப் பெற்றவர்களுக்கு உலகில் தீங்கேதும் நேராதென்பார்கள். ஆனால், என் மகன் இராமனோ தனது பிரிவால் தந்தைக்கு இறுதியை அளித்துவிட்டான் மன்னர் யாதொரு நோயுமின்றி மகன் பொருட்டு மடிந்ததால் அவர் சந்ததி தழைப்பதற்காகத் தன்னைத் தியாகம் செய்யும் நண்டு, முத்துச்சிப்பி, வாழை இவற்றை ஒத்துள்ளார்'[1] என்று கூறி அழுகிறாள். சம்பரனை வென்று வானோர்க்கு வாழ்வளித்த மன்னரின் ஆற்றலையும், கருணையையும் குறிப்பிடுகிறாள். 'கைகேயி அரசரிடம் பெற்ற வரத்தால் அவரை முடித்துவிட்டாள்' என்று கூறி வருந்துகிறாள். கம்பர் அவளது நிலையை அரச யானையை இழந்து துடிக்கும் பிடியானை

---

[1] *நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும்*
*வித்தகற் கல்லால் அரிது.* (குறள் 235) என்பதும்,
*நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறுங்காலத்துக்*
*கொண்ட கருவழிக்கும்.* என்பதும் இக்கருத்தை அரண் செய்தல் அறிக.

யின் நிலையோடு ஒப்பிடுகிறார். கோசலையைப் போலவே சுமித்திரையும், மற்றத் தேவிமார்களும் அழுகிறார்கள். சுமந்திரர் மன்னர் மரணமடைந்த செய்தியை வசிட்டருக்கு அறிவிக்க, அவர் விதி செய்த வினையை எண்ணி விம்முகிறார். கடலில் சென்ற மரக்கலமொன்று உடைந்த வேளையில் அம்மரக்கலத்துக் குரியவனும் இறந்துவிட, அந்நிலையில் செய்வது இன்னதென்றறியாத மாலுமி போன்று வசிட்டர் மனம் கலங்குகிறார்.

மன்னரின் உடலைத் தைலத்தில் இடுதல்

மனனருக்கு அந்திமக்கடனைச் செய்வதற்கு மக்கள் யாரும் அங்கில்லாமையால், பரதனுக்குச் செய்தியனுப்பி, அவனும் சத்துருக்னனும் வரும்வரையில், மன்னரின் உடலைத் தைலத்தில் இட்டுப் பாதுகாக்கிறார்கள். கடல் போல் திரண்ட மனைவிமார்களின் நடுவிலிருந்து தசரதரின் உடலை எடுத்துவந்து எண்ணெய்க்கடாரத்தில் இட்ட செய்தியைக் கம்பர், 'தையற் கடலிற் கிடந்தானைத் தைலக் கடலின் தலையுய்த்தார்' என்று பாடுவது நயமாக உள்ளது. உடனே வசிட்டர் கேகய நாட்டிலிருந்து பரதனை அழைத்து வருமாறு, மன்னவரின் ஆணை என்ற பெயரால், தூதுவர்கள் மூலம் ஓலை அனுப்புகிறார்.

சூரியோதய வருணனை

அன்றைய இரவுப் பொழுது கழிந்து மறுநாள் சூரியன் உதயமாகிறான். சூரியன், 'என் குலத்தில் தோன்றிய தசரதர் வானுலகம் சென்றுவிட்டார். அவரது புதல்வர்கள் நால்வரும் இப்பொழுது நாட்டிலில்லை. எனவே, அப்புதல்வர்கள் வருமளவும் இவ்வுலகை நானே காப்பேன்' என்று கூறிக்கொண்டு உதித்தெழுந்ததாகக் கம்பர்,

*வானே புக்கான் அரும்புதல்வன் மக்கள் அகன்றார், வரும்அளவும்*
*யானே காப்பன் இவ்உலகை என்பான் போல*
*எறிகதிரோன்* (தோன்றினான்.)
(தைலமாட்டு. 79)

என்று பாடுவது அவரது பெரும்புலமைக்கும், கற்பனைக்கும் மகுடம் சூட்டுவதாக அமைந்துள்ளது.

## 9. இராமன் — குகன் தோழமை

இராமன் - சீதை இவர்களின் அழகு வருணனை

இராமன் அரசை இழந்த கவலை எதுவுமின்றி மிக்க மகிழ்ச்சியுடன் சீதையும் இலக்குவனும் பின் தொடர்ந்து வரக் காடு நோக்கிச் செல்வதைக் கம்பர் பின்வருமாறு வருணிக்கிறார்.

*வெய்யோன் ஒளி தன்மேனியின்*
*விரிசோதியின் மறையப்*
*பொய்யோ எனும் இடையாளொடும்*
*இளையானொடும் போனான்*
*மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ*
*ஐயோ இவன் வடிவு என்பதுஓர் அழியா*
*அழகு உடையான்.*[1] (கங்கை 1)

இராமனது தெய்வத் திருமேனியின் விரிந்த இயற்கை ஒளியின் முன், சூரியனின் பேரொளியும் மறைந்துவிடு கிறதாம். அவனது கரிய திருமேனிக்குக் கருமைக்குப் பெயர் பெற்ற மரகதம், மறிகடல், மழைமுகில் இவை ஒப்பாகாமையாலும், அவற்றினும் சிறந்த பொருள் வேறு அறியப்படாமையாலும் கம்பர் இராமனின் பேரழகை எண்ணி, 'ஐயோ!' என்று கூறி வியப்பினுள் ஆழ்கிறார் சீதையை வருணிக்கும்போது அவளுக்கு இடை இருக் கிறதா? இருப்பதாகச் சொல்லப்படுவது பொய்தானா? என்று ஐயுறுவதற்கு இடனாக உள்ளது என்கிறார்.

இதைத் தொடர்ந்து, மேலும் சில பாடல்களில் அவர்களது அழகைக் கம்பர் தமக்கேயுரிய தனிப்புலமை வளத்துடன் பாடுகிறார். சான்றாக ஓரிரு பாடல்களைக் காண்போம்.

*அஞ்சுஅம்பையும் ஐயன் தனது அலகு*
*அம்பையும் அளவா*
*நஞ்சங்களை வெலல்ஆகிய நயனங்களை உடையாள்*

---

[1] வெய்யோன் - சூரியன்.

*துஞ்சும் களி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்*
*கஞ்சங்களை மஞ்சன்கழல் நகுகின்றது கண்டாள்.*[1]

(டி 3)

இராமனின் பாதங்கள், தடாகத்தில் மலர்ந்துள்ள தாமரை மலர்களைப் பார்த்து, அவை தமது அழகுக்கு ஒப்பாகாமையால் ஏளனமாகச் சிரிக்கின்றனவாம். அதைச் சீதை, மன்மத பாணத்தையும், இராகவனின் அம்பையும் வென்ற தனது கூர்மையான கண்களால் பார்க்கிறாள். இப்பாடலில் இராமனின் பாதங்களின் அழகு, மென்மை, பொலிவு ஆகிய பண்புகளும், சீதையின் கண்களின் கூர்மையும் சிறப்பிக்கப்படுவதோடு, சீதை இராமன்மீது வைக்கும் அன்பின் மிகுதியும் துலக்க மெய்துகிறது.

இராமனும், பிராட்டியும் காட்டில் உல்லாசமாக நடந்து செல்கிறார்கள். அவர்கள் செல்வதற்குக் கம்பர் மேகம் மின்னலோடு செல்வதையும், களிற்றியானை பிடியானையுடன் செல்வதையும் உவமைகளாகக் கூறுகிறார்.

*மேகம் தனிவருகின்றது மின்னோடு என மிளிர்பூண்*
*நாகம் தனிவருகின்றது பிடியோடு என நடவா.*[2]

(டி 4)

முதல் உவமையில் இராமனின் கரிய நிறத்துக்கு மேகமும், சீதையின் பொன்னிற மேனிக்கு மின்னலும் உபமானங்களாகக் கூறப்படுகின்றன. இரண்டாவது உவமையில் இருவரின் கம்பீரமான தோற்றமும் நடையும், களிற்றோடும் பிடியோடும் உவமிப்பதன் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

முனிவர் விருந்தளித்தல்

இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் செல்லும் வழியில் பல இயற்கைக் காட்சிகளைப் பார்த்த

---

[1] அலகு - கூர்மை. அளவா - அளந்து; வென்று. குழல் - வேய்ங்குழல். கஞ்சம்-தாமரைமலர். மஞ்சன்-மைந்தன்; இராமன்.

[2] நாகம் - களிறு.

வண்ணம் கங்கைக் கரையை அடைகிறார்கள். அவர்களைக் கண்டதும் அங்குத் தவம் செய்து கொண்டிருக்கும் முனிவர்கள், காணாமற் போன தம் மக்களை மீண்டும் கண்டவர் போல மகிழ்ச்சி மீதூர்ந்து, எதிர்சென்று நல்வரவு கூறித் தமது ஆசிரமத்துக்கு அழைத்துச் செல்கிறார்கள். பின்னர் விருந்தினர் மூவரும் கங்கையில் நீராடச் செல்கின்றனர். இராமனும், சீதையும் நீராடும் வனப்பைக் கம்பர் பத்துப் பாடல்களில் அற்புதமாகப் பாடுகிறார். ஒரு பாடலில் திருமாலின் பாதத்திலிருந்து தோன்றிய கங்கையாற்றில் அத்திருமாலின் அவதாரமாகிய இராமன் நீராடினான் என்று புராண வரலாற்றை அமைத்துப் பாடியுள்ளார். நீராடி முடிந்ததும் இறை வழிபாடு, அக்கினி கோத்திரம்[1] இவற்றை நிறைவேற்றி விட்டு, மூவரும் முனிவர்களுக்கு விருந்தினராய் அமைந்து, அவர்கள் அன்புடன் அளித்த காய், கனி, கிழங்குகளை அருந்தினார்கள். உணவுண்டு இராமன் மகிழ்ச்சியோடிருக்கும் வேளையில், கங்கைக் கரையில் உள்ள சிருங்கபேரபுரம் என்னும் ஊரைச்சார்ந்தவனும், படகோட்டும் தொழிலினனுமான குகன் என்னும் வேட்டுவன் இராமனைக் காண வருகிறான்.

### இராமன் குகன் சந்திப்பு

கம்பர் குகனின் தோற்றத்தைச் சொல்லோவியமாகச் சில கவிகளில் சித்திரிக்கிறார். இருள் செறிந்தாற் போன்ற, எண்ணெய் பூசிய கரிய நிறம், வன்மையிலும், திரட்சியிலும் கல்லை ஒத்த மார்பும் தோளும், பனைமரத்தின் சிறாம்பு போன்ற அடர்ந்த உரோமம், முழங்கால் வரை தொங்கும் ஆடை, புலிவால் கச்சு, அக் கச்சில் பிணித்த வாள், வில்லைத் தாங்கிய கை, காலில் செருப்பு, துடியும், கொம்பும், பம்பையும் தொங்கும் முதுகு, மீன் ஊன் இவற்றின் நாற்றம் வீசும் வாய், நெருப்புப் போன்ற

[1] அக்கினி கோத்திரம் - தினந்தோறும் செய்யும் ஓம வழிபாடு.

பார்வை, கூற்றும் அஞ்சும் குரல் — இவற்றின் மொத்த வடிவமே குகன். கங்கையில் படகு விடும் தொழிலைத் தொன்மையாக உடையவன் ஆயிரம் நாவாய்களுக்கு நாயகன். ஆழங்காண வொண்ணாத கங்கையின் ஆழத்தைக் கண்டவன். குகன், வேட்டைநாய் பின்தொடரத் தனது பெரிய சேனையோடு, மேகம் வருவதைப் போல இராமனைக் காண வருகிறான். (காவியத்தில் குகனுக்கிருக்கும் முதன்மை கருதியும், வைணவர்கள் அவனை இராமபக்தனாக வழிபடும் சிறப்புப் பற்றியும் கம்பர் அவனைக் குறித்த செய்திகளைச் சற்று விரிவாகவே பாடுகிறார்.)

இராமனிருக்கும் தவப்பள்ளிக்குச் சற்று அப்பால் வரும்போதே குகன் தன்னுடன் வந்த சேனைகளை அங்கே நிறுத்திவிட்டு, தனக்குரிய வில், அம்பு, வாள் முதலிய ஆயுதங்களையும் களைந்து விட்டு, கைகளில் தேனையும், மீனையும் காணிக்கைப் பொருள்களாக எடுத்துக் கொண்டு பேரன்போடு வருகிறான் தவச்சாலையின் வாயிலில் நின்றபடியே, ''இறைவா!'' என இராமனை அழைத்து, ''நாயடியேன் யான்; உமக்குப் பணி செய்வதற்காக வந்துள்ளேன்'' என்று கூவினான். குகனின் குரல் கேட்டு, இலக்குவன் வெளியில் வந்து, ''நீ யார்? வந்த காரியம் யாது?'' என்று வினவினான். குகன் இலக்குவனை அன்போடு வணங்கி, ''நான் கங்கையில் நாவாய் ஓட்டும் வேட்டுவன். நாய் போன்று அடியவனாகிய நான் தேவரீரது பாதத்தைத் தரிசிக்க வந்தேன்'' என்றான். (குகன் இலக்குவனை இராமன் என்று எண்ணினான் போலும்!.) இலக்குவன், ''இங்கு நில்'' என்று கூறிவிட்டு, இராமனைச் சென்று கண்டு வணங்கி, ''அண்ணா! உன்னைக் காணக் குகன் என்பவன் தன் சுற்றத்தோடு வந்துள்ளான். அவன் கங்கையிலுள்ள நாவாய்களுக்குத் தலைவனாம். அவன் உள்ளம் தூயவனாகவும், தாயைப் போன்று நல்லவனாகவும் காணப்படுகிறான்'' என்று அறிவித்தான்.

இராமன் "அவனை அழைத்துவா" என்று தம்பிக்குப் பணிக்க, குகனும் இராமன் முன்னிலையில் சென்று, அவனைக் கண்களால் நோக்கிக் களித்தவனாய், அவனது பாதத்தில் வீழ்ந்து பணிந்தெழுந்து, வாய் புதைத்து நின்றான். இராமன் "இரு" என்று சொல்லியும் அவன் இருந்திலன். இராமனிடம், "தேனும் மீனும் தங்களுக்கு உணவாகக் கொண்டு வந்துள்ளேன்; திருவுள்ளம் யாதோ?" என்று அன்பு கனியக் கூறினான். (கம்பரின் இராமன் புலாலுண்ணாதவன்; மேலும் அவன் மேற் கொண்டுள்ள துறவு வாழ்க்கைக்கும் அது ஏலாது குகன் கொணர்ந்த மீனைக் கண்டபோது இராமன் புன்முறுவ லோடு முனிவர்களைப் பார்க்கிறான். தான் உண்ண முடியாத பொருளை அன்பின் மிகுதியால் குகன் கொண்டு வந்திருக்கிறான் என்ற கருத்தை அம் முறுவல் புலப் படுத்தியது.

குகன் இலக்குவனோடு இராமனை இரவில் காவல் புரிதல்

இராமன் குகனைப் பார்த்து, "நீ என்மீது வைத்த அன்பின் முதிர்ச்சியால் கொண்டுவந் துள்ளமையால் இப்பொருள்கள் புனிதமானவை; அமுதினும் இனியவை; அவற்றை ஏற்றுக் கொண்டேன். எனவே, நான் உண்ட வன் போல் ஆனேன்" என்று கூறி, அவனை மகிழ் வித்து, "நாளை காலையில் கங்கையைக் கடக்க நாவா யோடு வருக" என்று கூறி அனுப்பினான். ஆனால் குகன் போகாமல் நின்றுகொண்டே, "உலகனைத்தை யும் செல்வமாக உடையவரே! உம்மை அரசகோலத்தில் காணாமல் தவக் கோலத்தில் காண நேர்ந்ததற்காக இக்கண்களைப் பிடுங்கியிருக்க வேண்டும். அவ்வாறு செய்யாத எனது அன்பு பொய்ம்மையுடையதே. நான் இவ் இடம் விட்டகலாமல் தங்களுக்கு அடிமைத் தொழில் செய்து கொண்டு இங்கேயே இருப்பேன்" என்றான். கேட்ட இராமன் குகனின் அன்பால் உள்ளம் நெகிழ்ந்து, சீதையையும், இலக்குவனையும் மாறி மாறிப் பார்த்து,

''இவன் நம்பால் நீங்காத பக்தியுடையவன்'' என்று கூறி, பின்பு குகனைக் கருணையோடு நோக்கி, ''சிறந்த நண்பா! நீ எங்களோடு இருப்பாயாக'' என்று கூறி அவன் விருப்பத்திற் கிணங்கினான். குகன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. குகன் இலக்குவனை உசாவி இராமன் கானகத்திற்கு வர நேர்ந்த செய்திகள் அனைத்தையும் அறிந்து கொண்டான். இரவுப் பொழுதில் இராமன் தேவியுடன் தவப்பள்ளியினுள், நாணல்புற் படுக்கையில் துயிலச் சென்றபோது, இலக்குவன் பள்ளியின் வாயிலைக் காவல் புரிந்தான். அவன் காவல் புரிந்த தன்மையைக் கம்பர்,

*வரிவில் ஏந்திக் காலைவாய் அளவும் தம்பி*
*இமைப்பிலன் காத்து நின்றான்*[1] (ஷ 50)

என்று பாடுகிறார்.

### இலக்குவன் நித்திரா தேவியை அகற்றுதல்

இலக்குவன் ஒரு நாளன்று, இராமன் வனத்தில் கழித்த பதினான்கு ஆண்டுகளும், இரவும் பகலும் கண்ணுறங்காது காவல் புரிந்ததை ஒரு நிகழ்ச்சியின் மூலம் கம்பர் விளக்குகிறார். நித்திரையாகிய அணங்கு எல்லோரிடமும் செல்வதைப் போல இலக்குவனிடமும் சென்றாளாம். ஆனால் அவன் அவளிடம், ''இப்போது வர வேண்டாம்; வனவாசம் முடிந்து அயோத்திக்கு மீளும் போது வந்தால் போதும்'' என்று கூறி அனுப்பி விட்டானாம். இச்செய்தியின் வாயிலாக இலக்குவன் 14 ஆண்டுகள் உறங்காமல் இருந்தான் என்ற கருத்தைக் கவிஞர் நமக்கு உணர்த்துகிறார்.

### இலக்குவன் 14 ஆண்டுகள் கண்ணுறங்காமல் இருப்பதன் தேவை

இலக்குவன் இராமனைக் காவல் புரிவதன் பொருட்டு 14 ஆண்டுகள் இரவும் பகலும் கண் துஞ்சாமல் விழித்

[1] வரிவில் - கட்டமைந்த வில்.

திருந்ததாகக் கதை அமைவதற்கு ஒரு காரணம் கூறப்படுகிறது. வரவிருக்கும் போரில் இராவணன் மகன் இந்திரசித்து இலக்குவனால் கொல்லப்பட வேண்டுமென்பது தேவர்களின் நியமம். ஆனால் இந்திரசித்து தவம் செய்து பெற்ற வரங்களில் ஒன்று 14 ஆண்டுகள் உறங்காமல் இருக்க வல்ல ஒருவனால் மட்டுமே தன்னைக் கொல்லமுடியும் என்பதாகும். உலகில் ஒருவராலும் அத்துணை ஆண்டுக்காலம் உறக்கமின்றி வாழ முடியாது என்பதை எண்ணியே இந்திரசித்து, தான் எவராலும் கொல்லப்படாமல் இருப்பதற்காக அவ்வரத்தை வேண்டிப் பெற்றுள்ளான். இதனால் அண்ணனைக் காவல் புரிவதன் நிமித்தமாக 14 ஆண்டுகள் உறக்கம் தவிர்ந்திருந்த இலக்குவன் ஒருவனே இந்திரசித்தைக் கொல்வதற்குத் தகுதியுடையவனாகிறான். இலக்குவனைக் கொண்டு இந்திரசித்தைக் கொல்விப்பதற்குரிய முன்னேற்பாடாகவே இது கருதத்தகும். இச் செய்தியை யுத்த காண்டத்தில், நாகபாசப் படலத்துள் வரும் பாடல் ஒன்றில் கம்பர் குறிப்பாகப் புலப்படுத்துகிறார். வீடணன் இலக்குவனுக்குக் கூறுவதாக அமைந்த அப்பாடல் வருமாறு:

*ஐய! ஈது அன்னதேயால்; ஆயிர கோடித் தேவர்*
*எய்தினர்; எய்தினாரகன் ஈடுபட்டு இரிந்தது அல்லால்*
*செய்திலர் இவனை ஒன்றும்; நீ இது*
*தீர்ப்பின் அல்லால்*
*உய்திறன் உண்டோ வேறு இவ் உலகினுக்கு*
*உயிரோடு என்றான்.*[1] (நாகபாச. 89)

இப்பாடலின் பொருள்: இந்திரசித்தோடு போர் புரிவதற்காக மிகப்பல தேவர்கள் வந்தனர்; வந்தவர்கள் அவனுக்குத் தோற்று ஓடினார்களேயன்றி, எவராலும் அவனை ஒன்றும் செய்யக் கூடவில்லை. நீ அவனைக் கொன்றா

---

[1] ஐய - இலக்குவனைக் குறித்த விளி. அன்னதே - உண்மையானதே. எய்தினர் - இந்திரசித்தோடு போர் புரியக் கிட்டியவர்கள். ஈடுபட்டு - வலியழிந்து.

லல்லாமல் உலகுக்கு உய்யும் வழியில்லை என்பதாம். 'நீ கொன்றாலன்றி, உலகுக்கு உய்வில்லை' என்பதில் 14 ஆண்டுகள் உறக்கம் தவிர்ந்திருந்த இலக்குவனால் மட்டுமே இந்திரசித்தைக் கொல்ல முடியும் என்ற கருத்து அடங்கியிருப்பதாக உரையாசிரியராகிய வை. மு. கோ. விளக்குவர்.

### பாரத இதிகாசத்தில் வரும் குறிப்பு

உறக்கத்தைத் தவிர்த்து அதனால் பேராற்றல் அடைவதைப் பற்றிய குறிப்பொன்று பாரத இதிகாசத்துள் வந்துள்ளது. பாரத வீரர்களில் பெரும் புகழுக்குரிய அர்ச்சுனனைக் கண்ணபிரான் 'குடாகேசன்' என்று அழைக்கிறார். அதன் பொருள்: உறக்கத்தை வென்றவன் என்பதாகும். அர்ச்சுனன் உறக்கத்தை அகற்றியதால் எப்பொழுதும் ஊக்கத்துடனும், உற்சாகத்துடனுமிருந்து பாரதப்போரில் எண்ணிலடங்காத பகைவர்களை வென்று வாகை மலைதல் அவனுக்கு இயல்வதாயிற்று.

### உறக்கம் தவிர்த்த ஞானி ராம்கோபால் மஸூம்தார்

'14 ஆண்டுகள் உறங்காமல் ஒருவன் வாழமுடியுமா? உறக்கம் அனைத்துப் பிராணிகளின் ஆரோக்கிய வாழ்விற்கு இன்றியமையாததன்றோ? ஓரிரு தினங்கள் உறங்காமல் இருந்தாலும் உடல் தளர்ச்சியடைவதை அனுபவத்தால் உணர்கின்றோம். எனவே, இலக்குவன் 14 ஆண்டுகள் உறக்கமின்றி இருந்தான் என்பது புனைந்துரையேயாம். அண்ணனைக் கண்ணும் கருத்துமாக அவன் பாதுகாத்தான் என்ற கருத்தை வலியுறுத்துவதற்குக் கூறிய கற்பனைச் செய்தியே' என்று பலரும் எண்ணக் கூடும்.

ஆனால், நமது இந்திய நாட்டு ஞானியர்களுள் விவேகானந்தருக்கு அடுத்தபடியாக நமது சனாதனசமய உண்மைகளை மேனாடுகளில் பரப்பிப் புகழ் பெற்ற 'யோகானந்த பரமஹம்ஸர்' என்பார் எழுதிய 'ஒரு

யோகியின் சுயசரிதம்'[1] என்னும் அரிய நூலில் காணப்படும் ஒரு செய்தியைக் கற்பவர்கள் இலக்குவன் உறக்கத்தைத் தவிர்த்ததாகக் கூறப்படும் செய்தியைக் கற்பனை என்று கூறத் தயங்குவர். 16 உலக மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட சிறப்பைப் பெற்றுள்ள அந்நூலிற் கண்ட செய்தி வருமாறு:

பரமஹம்ஸர் சந்தித்த பல யோகியர்களுள் 'ராம் கோபால் மஸூம்தார்' என்பவர் ஒருவர். அவர் முக்காலமும் அறிந்த ஞானி. அவர் 'உறக்கம் தவிர்த்த ஞானி' என்ற பெயராலேயே எல்லோராலும் அழைக்கப்பட்டார். அவர் முதலில் 20 வருடம் ஒரு குகைக்குள் யாரும் அறியாமல் தங்கியிருந்து நாள் ஒன்றுக்கு 18 மணி நேரம் தவம் புரிந்தார். அதன்பின் மற்றோர் குகைக்குச் சென்று 25 வருடம் தங்கி, நாள் ஒன்றுக்கு 20 மணி நேரம் மனத்தை ஒருநிலைப்படுத்தி, ஆன்மிகச் சிந்தனையில் ஈடுபட்டு நோற்றதன் பயனாக எப்பொழுதும் உறங்காமல் விழிப்புடனிருக்கும் அபூர்வ ஆற்றல் கைவரப் பெற்றார். மஸூம்தார் தமது அனுபவத்தைத் தாமே பின்வருமாறு கூறுகிறார்.

"எனக்கு உறக்கம் தேவையில்லை. ஏனெனில் நான் எப்பொழுதும் தெய்வத்துடனேயே இருக்கிறேன். நான் பல ஆண்டுகளாக உறக்கத்தைத் தவிர்த்துள்ளேன். மிக மேம்பட்டதும், மனத்தின் விழிப்பு நிலையால் உண்டாவதுமான பூரண அமைதியின் காரணமாக எனது உடல் எப்பொழுதும் ஓய்வுநிலையில் இருந்து வருகிறது. (I did not need sleep for I was ever with God. My body was ever rested by the complete calmness of super consciousness.)

[1] Autobiography of a Yogi by Paramahamsa Yogananda - 1989. Jaico Publishing House, Bombay, Delhi etc. Chapter 13. The Sleepless Saint. Page 123.

சாதாரண மக்களின் உறக்க நிலையில், கை கால் முதலிய வெளியுறுப்புகளிலுள்ள சதைகள் இயக்கமின்றி ஓய்வெடுத்தாலும், இதயம், சுவாசப்பை, சிறுநீரகம் இரத்தக்குழாய் போன்ற உள்ளுறுப்புக்கள் இடையறாது இயங்கிக் கொண்டே இருக்கின்றன. அவை ஒருபோதும் ஓய்வெடுப்பதில்லை. ஆனால் ராம்கோபாலுக்கோ மனத்தின் விழிப்பு நிலையில் (இறையனுபவ நிலையில்) பிறக்கும் முழுமையான அமைதியில், உடலிலுள்ள உள்ளுறுப்புக்கள், வெளியுறுப்புக்கள் அனைத்தும் இயக்கம் ஒழிந்து ஓய்வு கொள்ளுகின்றன. அந்நிலையில் பிரபஞ்ச சக்தி (Cosmic energy) ஒன்றே அவருடம்பினுள் மெதுவாக இயங்கிக் கொண்டிருக்கும்.

மஸூம்தார் வரலாற்றிலிருந்து, ஆன்மிக சக்தியைப் பெருக்கி இறைவனோடு இடையறாத தொடர்பு கொள்வதன் மூலம் உறக்கத்தை வெல்லலாம் என்ற உண்மை புலனாகிறது. மஸூம்தாராகிய மனிதருக்குத் தமது முயற்சியினால் இந்நிலையை அடைய முடியுமானால், ஆதிசேஷனின் அம்சமான இலக்குவன், திருமாலின் அவதாரமாகிய இராமனை விட்டு அகலாமல் நிழல்போலக் கூடவே இருந்து அவனுக்குத் தொண்டாற்றும் நிலையில் இவ்வாற்றல் கைவரப் பெற்றதில் வியப்பில்லை யன்றோ?

குகன் இராமனைக் காவல் புரியக் காரணம்

இலக்குவன் காவல் புரிவதைக் கண்ட குகன் தவப் பள்ளியைச் சுற்றிக் காவல் புரியுமாறு தன் சேனைகளுக்குப் பணித்து விட்டுத் தானும் நாணேற்றிய வில்லோடு இலக்குவனுடன் நின்றுகொண்டிருந்தான். இங்கு, ‘இலக்குவன் கண்துஞ்சாமல் அண்ணனைக் காவல் புரியும்போது, குகனுக்கும் இராமனைக் காவல் புரியும் தேவை எங்ஙனம் உண்டாயிற்று’ என்ற கேள்வி எழுமன்றோ? அதுபற்றியும் சிந்திப்போம்: தம்பி வீர இலக்குவன் காவல் புரியும்போது, குகன் காவல் புரியும் தேவை இல்லைதான். இலக்குவன் அழைத்துக் குகன் காவல் புரியச் சென்றவனல்லன். அவன்

இராமன் மீது வைத்த அன்பின் மிகுதியால் தானாகவே அச்செயலை மேற்கொள்ளுகிறான். குகனுக்கு இலக்குவன் மட்டும் காவல் புரிவது மன நிறைவளிக்கவில்லை. இராமன் மீது வைத்த பேரன்பானது அவனையும் இலக்குவனுடன் காவல் புரியுமாறு உந்துகிறது. அதற்கு மேலும், குகன் தன் படை வீரர்களையும், இராமன் துயிலும் தவப்பள்ளியைச் சூழ்ந்து நின்று காவல் புரியுமாறு பணிக்கிறான். இச்செயல் அவன் இராமன் மீது வைத்த அன்பின் ஆழத்தை மேலும் ஒளிபெறச் செய்கிறது. படைவீரர்களும் குகனின் ஆணைக்காக மட்டுமன்றித் தாம் இராமனைத் தொலையிலிருந்தே காண நேர்ந்த போதிலும், அவன்மீது எழுந்த ஆராக்காதலால், அவனுக்குக் காவல் புரிவதைத் தமக்குக் கிடைத்த பேறாக எண்ணி மகிழ்ச்சியோடு செயல்படுகிறார்கள். குகனுக்கு இராமன் மீது தோன்றிய அன்பு, இராமனைச் சந்தித்த அவ் ஒரே நாளில் அரும்பி, போதாகி, மணம் கமழ்கிறது. எனவே, அவனது அன்பு ஒப்பற்றதும், வியந்து போற்றுதற்குரியது மாகும்.

இவ்வியத்தகு அன்பு குகனிடமும், அவனது மறவர்களிடமும் எவ்வாறு தோன்றியது? இராமனைக் கண்ட மாத்திரத்தில், காண்பவர்கள் எத்தகையராயினும் அவர்கள் அனைவரையும் கவர்ந்திழுக்கும், சொல்லால் விளக்குதற்கரிய, ஒரு தெய்விக ஆற்றல் இராமன்பால் இருந்ததே காரணமாக வேண்டுமன்றோ? இல்லாவிடில், பிறப்பாலும், வளர்ப்பாலும், தோற்றத்தாலும், குணத்தாலும், உணவாலும், செயலாலும், ஒழுக்கத்தாலும், காட்டு வேடனாகவே வாழ்ந்து வந்த குகனுக்கு இராமனைக் கண்ட மாத்திரத்தில், ‘அடிநாயேன்’ என்று கூறி, அவனுக்கு அடிமையாகி, அவன் பணிக்கே தன்னை முற்றிலுமாக ஆளாக்குதல் எங்ஙனம் இயலும்? குகன் இராமன் மீது வைத்த ஆழங்காண முடியாத அன்பினை எண்ணி வியந்த வைணவ ஆசாரியர்கள், அப்பக்திச் செயலுக்குப் புதியதோர் விளக்கத்தைத் தம் கற்பனையால் படைத்துக் கூறிச் சிறப்பித்துள்ளார்கள்.

ஆசாரியர் தரும் விளக்கம்

தாய்மார்கள் வெளியூருக்குச் சென்ற தம் புதல்வர்கள் திரும்பி வரும் மட்டும், அவர்களுக்கு ஆபத்து ஏதேனும் நேர்ந்துவிடக் கூடாதே என்று கவலைப்படுவது இயற்கையன்றோ? காரணமின்றியும் அவர்கள் கவலைப்படுவதற்கு மக்கள் மீது வைத்த அன்பே ஏதுவாகும். அதுபோலவே, குகனும் இராமன் மீது வைத்த அன்பின் மிகுதியால், சந்தேகிக்கத் தகாத இலக்குவனையும் சந்தேகப்படுகிறான். குகனின் ஏவலாளர்கள் இலக்குவனாலும், குகனாலும் இராமனுக்குத் தீங்கு நிகழ்ந்து விடக் கூடாதே என்று இருவர் மீதும் ஐயுறவு கொள்கிறார்கள். இக்கருத்து ஸ்ரீவசனபூஷணம் என்ற வைணவ நூலில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

*இளையபெருமாளை ஸ்ரீகுகப்பெருமாள் அதிசங்கை பண்ண, இருவரையும், அதிசங்கை பண்ணி ஸ்ரீகுகப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றே*[1]

மேற்சொன்ன ஸ்ரீவசனபூஷண வாக்கியத்திற்கு ஸ்ரீமணவாள மாமுனிகள் எழுதிய வியாக்கியானத்தில் இக்கருத்து மேலும் விளக்கப்படுகிறது, அதன் ஸாரம் வருமாறு: பர்ணசாலைக்குள் இளையபெருமாள் அமைத்த படுக்கையில் இராமனும் பிராட்டியும் பள்ளி கொண்டருளுகிறார்கள். அப்போது அவர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிடுமோ என்று அஞ்சி, இலக்குவன் நாணேற்றிய வில்லைக் கையில் பிடித்து, முதுகில் அம்பறாத்தூணியைத் தொங்கவிட்டுக் கொண்டு நடமாடும் மதில் போலப் பர்ணசாலையைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறான். அதைக் கண்ட குகன் தனக்குள், 'ஒரு தம்பி பரதன் தன் தாயைக் கொண்டு இராமன் நாட்டை ஆளாதபடி காட்டிலே தள்ளிவிட்டான். இந்த இலக்குவனும் பரதனைப் போன்ற மற்றோர் தம்பி தானே! தனியிடத்தில்

---

[1] இளையபெருமாள் - இலக்குவன். அதிசங்கை - மிக்க சந்தேகம். பரிகரம் - படை வீரர்கள்

என்ன செய்ய நினைத்து இவன் ஆயுத பாணியாக நிற்கிறானோ தெரியாது' என்று சொல்லி இலக்குவன் மீது சந்தேகப்பட்டு, அப்படி ஏதாவது தீங்கு இவனால் நேருமாயின், இவனைத் தீர்த்து விட வேண்டுமென்று வில்லும் கையுமாக எச்சரிக்கையுடன் நிற்கிறான். குகனுடைய ஏவலாளர்கள் குகனைப் பற்றி, 'இவன் ஒரு காட்டு மனிதன்; இவனும் இலக்குவனும் பங்காளிகளாகச் சேர்ந்து இராமனுக்கு எங்கே ஆபத்தை விளைவித்து விடுவார்களோ' என்று இருவரையும் சந்தேகித்து, இவர்களால் ஆபத்து நேரின் இருவரையும் கொன்று இராமனைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் ஒவ்வொருவரும் தனித்தனியே வில்லும் கையுமாக ஆயத்தமாக நிற்கிறார்கள்.[1]

குகன் இலக்குவனைச் சந்தேகித்ததாக ஸ்ரீவசன பூஷணமும், மணவாள முனிவரின் வியாக்கியானமும் கூறுவதன் மூலச் செய்தி, வான்மீகி இராமாயணத்தில் சருக்கம் 87ல் காணப்படுகிறது. ஆனால் அதில், குகனின் ஏவலாளர்கள் இலக்குவனையும், குகனையும் சந்தேகித்த செய்தி கூறப்படவில்லை.

### குகன் இராமனைச் சிருங்கிபேரபுரத்தில் தங்குமாறு வேண்டுதல்

மறுநாள் காலையில் சூரியன் உதயமானதும் இராகவன் கங்கையைக் கடப்பதற்கு நாவாய் கொணருமாறு குகனிடம் கூறினான். கேட்ட குகன் இராமனைப் பிரிய வேண்டுமே என்ற துக்க மிகுதியால், கண்ணீரைச் சொரிந்து கொண்டே, தன்னையும் ஓர் உறவினனாக எண்ணி, சிருங்கிபேரபுரத்திலேயே தன்னுடன் இருக்குமாறு இராமனை வேண்டுகிறான். இராமன் அமுது செய்வதற்குத் தேன், தினை, ஊன் என்பனவும், உடுப்பதற்

---

[1] இச்செய்தி அயோத்தியா காண்டம் கங்கைப்படலம் செய்யுள் 54 வை. மு. கோ. உரையில் கண்டது.

குத் தோலும், படுப்பதற்குப் பரணும், தங்குவதற்குக் குடிசையும், விளையாடி மகிழ்வதற்குக் காடும், நீராடி இன்புறுவதற்குக் கங்கையும், குற்றேவல் புரிவதற்குத் தானும் தனது ஆயிரம் ஏவலர்களும் இருப்பதாகக் கூறி இராமன் இவற்றை ஏற்றுத் தன்னுடன் தங்கி, தனக்குச் சிறந்த வாழ்வை அளிக்கும்படி இரந்து வேண்டுகிறான். குகனின் அன்பு மொழிகளைக் கேட்ட இராமன் அகங் குழைந்து, ''வீர! நான் புண்ணிய நதிகளில் சென்று நீராடியும், ஞானியர்களைக் கண்டு வழிபட்டும், சின்னாள் களைக் கழித்துவிட்டு, மீண்டும் உன்னிடமே வந்துவிடு கிறேன்'' என்று கூறித் தேற்றுகிறான்.

தன்னையும் உடன்வர அனுமதிக்குமாறு வேண்டுதல்

இராமன் முனிவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு, சீதையோடும், இலக்குவனோடும் குகன் சித்தம்செய்து வைத்திருந்த நாவாயில் ஏறி, குகனே அதனைச் செலுத்த, மூவரும் மறுகரை எய்தினர். இராமன் குகனி டம் சித்திரகூடத்திற்குச் செல்லும் நெறி யாதென்று வினவினான். குகன் அவ்வேளையில் இராமனிடம் தன் னையும் உடனழைத்துச் செல்லுமாறு வற்புறுத்தி வேண்டு கிறான். தான் இராமனுக்குத் தேவையான கிழங்கை மலையிலிருந்து கல்லி எடுத்தும், நீர் தொலையிலிருந் தாலும் அங்குச் சென்று மொண்டு வந்தும், புலி முதலிய கொடிய விலங்குகளின்றி, மான் முதலிய நன்மிருகங்கள் வாழும் இடத்தில் உறைவிடம் அமைத்தும், இராமன் ஏவிய பணிகளையெல்லாம் நிறைவேற்றியும் உதவி புரி வதாகவும், ஆபத்து நேரின் தானே முதலில் உயிர் விடுவதாகவும் கூறி, இராமனைப் பிரிந்து தன்னால் ஒரு கணமும் உயிர்வாழ முடியாதென்ற தனது அன்பு நிலை யையும் அறிவித்தான்.

இராமன் கூறிய அன்புப் பதிலுரை

குகனின் அன்பின் ஆழத்தை உணர்ந்த இராமன், தானும் அதனால் உள்ளம் நெகிழ்ந்தவனாய், குகனை

'வேடன், இழிகுலத்தவன்' என்று எண்ணாமல்[1] அவனை, ''என் உயிருக்கு ஒப்பானவனே!'' என்று அன்பு ததும்ப அழைத்து, ''என் தம்பி இலக்குவன் உனக்குத் தம்பி; இச் சீதையும் உனது சுற்றமாவாள். எனக்குச் சொந்தமான நாடெல்லாம் உனக்கும் சொந்தமானதே, நான் நீ ஏவிய தொழிலைச் செய்யும் உரிமையில் உள்ளேன்.

*என்உயிர் அனையாய் நீ; இளவல் உன்*
*இளையான்; இந்*
*நல்நுதலவள் நின் கேள்; நளிர் கடல் நிலம் எல்லாம்*
*உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின்*
*உள்ளேன்.*[2] (ஷை 73)

பிரிவு என்னும் துன்பம் ஒன்று இருந்தால்தானே மீண்டும் கூடும்போது இன்பம் என்பது அனுபவப்படும்.

*துன்பு உளதெனின் அன்றோ? சுகம்உளது.*
(ஷை 74)

---

[1] இராமன், இவ்வாறு, குகனின் குலத்தாழ்ச்சியை எண்ணாமல் தன் உடன்பிறந்தவனாகவே மதித்துப் போற்றிய செயலையே திருமங்கையாழ்வார்,

*'ஏழை ஏதலன் கீழ்மகன்' என்னாது*
*இரங்கி மற்று அவற்கு இன்னருள் சுரந்து*
*''மாழை மான் மடநோக்கி உன்தோழி,*
*உம்பி எம்பி, என்று ஒழிந்திலை, உகந்து*
*தோழன் நீ எனக்கு, இங்கு ஒழி என்ற*
*சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட,*
*ஆழிவண்ண! நின் அடிஇணை அடைந்தேன்*
*அணிபொழில் திருவரங்கத்துஅம்மானே!*
(நாலாயிரம் 1418)

என்று பெரிய திருமொழியில் பாடியுள்ளார்.

(ஏதலன்-பகைவன். மாழை-இளமை, அழகு. ஒழிந்திலை-அதனோடு விடவில்லை. ஒழி - இரு. ஆழி - கடல்.)

[2] குளிர் - குளிர்ச்சி.

இதுகாறும் நாங்கள் சகோதரர்கள் நால்வர் மட்டும் இருந்தோம் இன்று முதல் உன்னையும் சேர்த்து நாம் அன்புச் சகோதரர்கள் ஐவர்களாக இருக்கிறோம்,

*முன்பு உளெம் ஒரு நால்வேம் முடிவு உளது என உன்னா*
*அன்பு உள இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்.*[1]
(டி 74)

நான் காட்டில் வாழும் காலமெல்லாம் எனது வருத்தத்தைத் தாங்குவதற்குத் தம்பி இலக்குவன் என்னுடன் இருக்கிறான். எனவே, நீ சிருங்கிபேரபுரம் சென்று உன் குடிமக்களைக் காப்பாயாக. நான் தென்திசைக்குச் சென்றுவிட்டு அயோத்திக்குத் திரும்பி வரும்போது உன்னிடம் வருகிறேன்; சொல் தவறேன். அயோத்தியில் உள்ள உனது சுற்றத்தைக் காப்பதற்கு உனது தம்பி பரதன் அங்கு உள்ளான். இங்குள்ள சுற்றத்தைக் காப்பதற்கு உன்னையன்றி யார் இருக்கிறார்கள்? உன் சுற்றம் என் சுற்றம் அன்றோ? அவர்கள் துன்பமடையலாமா? இங்குள்ள எனது சுற்றத்தை, எனது ஏவற்படி நீ இங்கிருந்து காத்து வருவாயாக!'' என்று பணித்தான். கட்டளையை மீற இயலாதவனாய்க் குகன் மிக்க வருத்தத்தோடு இராமனிடமிருந்து விடைபெற்றுத் திரும்பினான்.

மூவரும் சித்திரகூட மலைக்குச் செல்லுதல்

இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் சித்திரகூட மலையை இலக்காக்கி நீண்ட காட்டு வழியே நடந்தனர். வழியில் பரத்துவாச முனிவரை[2] அவரது ஆசிரமத்

---

[1] முடிவுளது என உன்னா அன்பு - இறுதி உண்டென்று கருத முடியாத அன்பு.

[2] பரத்துவாசர், பாரதநாட்டு முனிவர் பரம்பரையில் வந்த மிகப்பெரிய ஞானியருள் ஒருவர்; முக்காலமும் உணரவல்லவர்; வானுலகிலுள்ள காமதேனுவையும் கற்பகத்தருவையும் ஏவல் கொள்ளும் ஆற்றல் படைத்

தில் கண்டு, அவரளித்த உபசரிப்பைப் பெற்று, அன்றிரவை அங்கே கழிக்கின்றனர். மறுநாள் முனிவர், மூவரையும் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் மூன்று நதிகளும் சங்கமமாகிற பிரயாகை என்னும் புனிதத் தலத்தில் தங்கித் தமது வனவாசத்தைக் கழிக்குமாறு கூறுகிறார். இராமன் தான் அங்கிருந்தால் அயோத்தி மக்கள் அடிக்கடி வந்து, தனது அமைதியைக் குலைக்கக் கூடும் என்ற காரணத்தைக் கூறி, முனிவரின் அனுமதியுடன் சித்திர கூட மலைக்குச் செல்லுகிறான். அங்கு இலக்குவன் அமைத்த பர்ணசாலையில் மூவரும் தங்குகிறார்கள்.

---

தவர். பாரதப் போர் வீரர்களான பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் வில்வித்தை கற்பித்த துரோணாச்சாரியர் இவரது புதல்வராவர்.

## 10. அயோத்தி வந்த பரதனின் நிலைமை

### பரதன் நாடு திரும்புதல்

பரதனையும் சத்துருக்னனையும் அயோத்திக்கு அழைத்து வருமாறு வசிட்டர் கொடுத்தனுப்பிய கடிதத்துடன் சென்ற தூதர்கள், கேகய நாட்டின் தலைநகராகிய இராசகிருகத்தை அடைந்து, பரதனைக் கண்டு, கடிதத்தைக் கொடுத்தனர். சகோதரர்கள் இருவரும் தந்தையையும் தமையனையும் காணலாம் என்னும் ஆசையால் உடனே அயோத்திக்குப் புறப்படுகிறார்கள். ஏழு நாள்களாகச் செய்த பயணத்தின் பின் கோசல நாட்டை அடைகின்றனர். அடைந்ததும், நாடு முன்னைய நிலைக்கு மாறாக அழகிழந்திருப்பதைக் கண்டு வருத்தமடைகிறார்கள். அயோத்தி வந்த போது அந்நகரமும் அங்ஙனமே பொலிவற்றிருப்தைப் பார்த்து அதன் காரணத்தை அறியாமல் திகைப்புறுகின்றனர். தசரதரின் அரண்மனையைக் குறுகியதும், உள்ளே தந்தையிருக்கும் இடத்திற்குச் செல்கின்றனர்.

### தந்தை இறந்த செய்தி கேட்டு மூர்ச்சித்தல்

அங்கு அரசரைக் காணாமல் அதன் காரணம் யாதாக இருக்குமென்று ஐயுறும் வேளையில், பரதனைக் கைகேயி அழைப்பதாக ஒரு பெண் வந்து கூறினாள். பரதன் தாயைச் சென்று கண்டு வணங்கியபோது, அவள் கேகய நாட்டிலிருக்கும் தனது தந்தை, சகோதர, சகோதரிகளின் நலத்தை வினவினாள். பரதன் அவர்கள் அனைவரும் நலமாக இருக்கும் செய்தியை நவின்றான். பரதன் அவளிடம், ''தந்தையைத் தொழ விரும்புகிறேன். அவர் எங்குள்ளார்?'' என்று வினவினான். (கைகேயியின் அப்பொழுதைய கோலத்திலிருந்து அவள் கணவனை இழந்திருப்பதைப் பரதனால் அறிந்து கொள்ள முடியவில்லை போலும்!) கைகேயி எவ்வித மனச் சஞ்சலமு மின்றி, ''மன்னவர் தேவர்கள் தொழும்படி வானுலகம் எய்தினார்,

நீ வருந்தாதே'' என்றாள். இச்சொல்லைக் கேட்டதும் பரதன் இடிவிழுந்த மரம் போன்று மண்ணில் சாய்ந்து மூர்ச்சையுற்றான், உணர்வு வந்ததும் அவன் கைகேயியைப் பார்த்து, ''காதில் நெருப்பை நுழைத்தாற் போன்ற இச்சொற்களைச் சொல்வதற்கு, உன்னையன்றி மற்றெவருக்கும் மனத்தால் நினைத்தலும் அரிதாம்'' என்று கூறினான்.

தந்தையின் அரிய குணங்களைப் புகழ்தல்

பின்னர், பரதன் தந்தையின் வண்மை, சினத்தை வென்றமை, அறநெறி ஆட்சி, காமத் தீயை வென்றமை ஆகிய பண்புகளை நினைவு கூர்ந்தான். (பல மனைவியரை மணந்த தந்தையைக் 'காமத்தை வென்றவர்' என்று பரதன் குறிப்பிடுவதன் மூலம், அவர் புலன்களை வென்று, உள்ளம் இன்பத்தில் தோயாது, மனைவியருடன் வாழ்ந்தார் என்ற கருத்து உணர்த்தப்படுகிறது ) தசரதர் தமது மரணத்தால் நீதியை மறந்தும், அறத்தை வேரறுத்தும், அருளைக் கொன்றும் தமக்கே மாசு தேடிக் கொண்டார் என்றும், அவர் வானுலகம் சென்ற செயல் அவரது அறவொழுக்கத்திற்குப் பொருந்தாதது என்றும் பழிப்பார் போல் புகழ்கிறான். அவர் வானுலகம் சென்றதற்குப் பற்பல காரணங்களைத் தன் கற்பனையால் கூறுகிறான். 'உலகிலுள்ள அனைவரும் உம்மிடம் ஒன்றை இரப்பவராக இருத்தலின், ஒத்த நிலையுடைய நண்பர்களை நாடிச் சென்றீரோ? என்றும், சம்பரனைப் போன்ற அசுரர்கள் இன்னும் இருக்கிறார்கள் என்று அஞ்சிய தேவர்களுக்கு உதவுவதற்காகச் சென்றீரோ? என்றும், கற்பக மரத்தின் நிழலை நாடிச் சென்றீரோ? என்றும், இராமன் ஆட்சியை அடைவதற்காகச் சென்றீரோ? என்றும் வினவுகிறான். பின்னர், 'இராமனை விட்டு எவ்வாறு பிரிந்தீர்?' எனக் கேட்டு, இராமனது முடிசூட்டு விழாவைக் காணும் பேற்றைப் பெறாதது அவரது வாழ்வில் ஒரு குறையாகும் என்று கூறினான்.

(பரதனது இக் கூற்று அவன் இராமனிடம் வைத்த அன்பையும், இராமன் அரசனாக வருவதில் அவனுக்கிருந்த மகிழ்ச்சியையும் ஆர்வத்தையும் வெளிப்படுத்துவதோடு, கைகேயியின் தீய எண்ணத்திற்கு மாறான அவனது தூய உள்ளத்தையும் நம்மை உணரவைக்கிறது.)

இராமன் கானகம் சென்ற செய்தியை அறிதல்

இங்ஙனம் பலவாறாகப் பன்னி அழுது இரங்கிய பரதன் பின்னர்த் தன்னைத் தானே தேற்றிக் கொண்டு, ''எனக்குத் தந்தை, தாய், கடவுள், தமையன், அனைவரும் இராமனேயாதலால் அவனைக் கண்டு அவன் பாதத்தில் வணங்கினாலன்றித் துயரகலாது'' என்று கூறினான். (பரதனின் இச் சொற்கள் அவன் இராமன் மீது கொண்டுள்ள பெருமதிப்பையும், ஈடுபாட்டையும் புலப்படுத்தி, அடுத்தாற்போல் கைகேயியின் வாயிலாகக் கேட்கவிருக்கும் கொடிய செய்தியால் அவனுக்கு எழக்கூடிய துன்பத்தைப் பன்மடங்கு மிகுதிப்படுத்துவதற்கும் ஏதுவாகவுள்ளன. கம்பரின் கவிசமத்காரம் இங்கு வெளிப்படுதல் காணலாம்.) அவ்வேளையில் கைகேயி, ''இராமன் தேவியோடும், தம்பியோடும் கானகத்தில் உள்ளான்'' என்று கூறினாள். அவ்வெவ்வுரை பரதன் காதுகளில் இடியேறு போலச் சென்று பாய்ந்தது. அவன் நெருப்பை உண்டவன் போல வெந்து வெய்துயிர்த்து, ''தந்தை மடிந்தார்; தமையன் காடேகினான், இன்னும் இதைப் போன்று என்னென்ன துன்பச் செய்திகளைக் கேட்க இருக்கின்றேனோ'' என்று அஞ்சினான்.

பரதன்: (தாயை நோக்கி) அண்ணா காட்டிற்குச் செல்லக் காரணம் என்ன? ஏதாவது தீய செயல்களைச் செய்தாரா? தெய்வத்தின் கோபத்திற்கு ஆளானாரா? அல்லது விதி காரணமாக இருந்ததா? இராமர் தீய செயல்களைச் செய்ய மாட்டாரே! அப்படிச் செய்தால் அச்செயல் தாய் மக்களுக்குச் செய்யும் அன்புச்செயல் போன்று, உலகத்துக்கு

நன்மையைத் தரும் செயலாகவன்றோ இருக்கும்? அண்ணா காடு சென்றது தந்தை மடிந்த பின்னரா? அதன் முன்னரா?

கைகேயி: இராமன் கானகம் சென்றது நீ கூறும் காரணங்களுள் ஒன்றாலும் அன்று. மன்னர் உயிருடன் இருந்த போதே அவன் கானகம் சென்றான்.

பரதன்: அப்படியா! இராமர் வனம் செல்லவும், தந்தை மரணம் எய்தவும் காரணம் யாது?

கைகேயி: மன்னர் முன்பு எனக்களித்த இருவரங்களில் ஒன்றால் இராமனைக் காட்டிற் கனுப்பினேன். மற்றொன்றால் நாட்டை உனக்கு உரிமையாக்கினேன். இராமனது பிரிவைப் பொறுக்க இயலாமல் மன்னர் உயிர் நீங்கினார்.

இச்சொற்களைக் கேட்க அஞ்சிய பரதன் கைகளால் காதுகளைப் பொத்திக் கொண்டான். கோபத்தால் அவன் புருவங்கள் மேலேறின; பெருமூச்சில் நெருப்புச் சுவாலைகள் வெளிவந்தன; கண்கள் உதிரத்தை உமிழ்ந்தன; உதடுகள் மடிந்தன. இரு கரங்களையும் பேரொலியெழப் புடைத்தான். பரதன் கோபத்துடன் அடியெடுத்து வைத்த போது மேருமலையையுடைய இவ்வுலகம் யானையேற்றப்பட்ட மரக்கலம் போன்று நிலை பிறழ்ந்தது என்று கம்பர் வருணிக்கிறார். (பரதன் உற்ற கோபத்தைக் கம்பர் வருணிக்கும் முறையும், அதற்குப் பயன்படுத்தும் சொற்களும், முன்பு தசரதரும், இலக்குவனும் கொண்ட சீற்றத்தை வருணிக்கும் முறையிலிருந்து வேறுபட்டதாக அமைவது அவரது சொல்வளத்துக்கும், கற்பனையின் செழுமைக்கும் சான்றாகிறது )

தாயைக் கடிந்து கூறுதல்

கைகேயியின் வெஞ்சொற்களைக் கேட்டு உள்ளம் குமுறிக் கொதித்த பரதன் அவளைப் பார்த்து, ''இராமன்

வனம் நண்ணவும், தந்தை மாளவும் வரம் கேட்ட உனது வாயைக் கிழிக்கவேண்டும். நான் அது செய்யாத வரையில் நீ ஈட்டி வைத்த நாட்டை நான் ஆண்டவன் ஆவே னன்றோ? கொல்லப்பட வேண்டிய உன்னை நான் கொல்லாதிருப்பது உன்னை அன்னையெனக் கருதியன்று; நாயகன் (இராமன்) முனியும் என்பதால் அதைத் தவிர்த் தேன். கொடிய நஞ்சு போன்ற உன்னைக் கொல்லாமலும், நானும் மாயாமலும் அன்புடையவன்போல் அழுகிறேன். நீ யாரோடு ஆலோசித்து இந்தச் செயலைச் செய்யத் துணிந்தாய்? தருமத்தை அழித்து நீ என்ன பயனைக் கண்டாய்? அநீதி நிகழும் இவ்வூரில் இலக்குமி தங்கி யிராள். நீ எண்ணியபடி நான் உலகை ஆளுவதாயின், 'பரதன் சூரியகுல மன்னர் கடைப்பிடித்து வந்த மரபைச் சிதைத்தும், தந்தையைக் கொன்றும், தமையனைக் காட் டிற்கு உய்த்தும் அறத்தை அழித்துவிட்டான்' என்று உலகோர் கூறும் பழிக்கு ஆளாகேனோ? இராமன் காட் டில் இலை உணவைக் கையாகிய கலத்தில் ஏந்தி உண்ணும்போது, நான் பொற்கலத்தில் வெண்சோற்றை நெய்யுடன் கலந்து உண்ணப்பெறுவேனோ? 'தாயின் சூழ்ச்சியால் நாட்டைக் கைப்பற்றி ஆண்டான்' என்ற மாயாப் பழிச்சொல்லுக்கு என்னை ஆளாக்க எண்ணி னையே! எனக்கு நீ தாயல்லை; பேயே. என் தந்தை என்னைப்பற்றி என்ன எண்ணியிருப்பார்! அவர் எண்ணு வது இருக்கட்டும். இராமர், 'இதுகாறும் நமக்குப் பணி செய்தலையே இயல்பாகவுடைய பரதன் இப்பொழுது தீங்கிழைத்து விட்டானே' என்று நினைப்பதற்கு இட மளித்து விட்டாயே! உலகத்தார் என்னைக் குறித்துக் கூறும் பழிக்கு உண்மையில் நான் காரணமல்லன். 'உண்ணாத நஞ்சு கொல்லாது' என்னும் பழஞ்சொல் உண்டன்றோ? நான் சாகாமல் இருப்பதற்கு இதுவே ஏதுவாகும் பாவியாகிய உனது நரகம் போன்ற வயிற்றில் தங்கியிருந்ததால் உண்டான பாவமும், எனது துன்பமும் நீங்கும்படி, தரும தேவதையைச் சாட்சியாக வைத்து,

மூன்று உலகத்தவர் கண்முன் நான் தவஞ்செய்யப் போகிறேன். நீ உயிரைத் துறத்தலே உனது வசை நீங்குவதற்குரிய வழியாகும். நீ உயிரை விட்டால் உலகம் உன்னை, 'அறியாது செய்துவிட்டாள்' என்று மன்னித்துவிடும். அப்போது நீ தூய்மை உடையவளும் ஆவாய்''.

பரதன் கோசலையைக் காணுதல்

பரதன் இவ்வாறு கூறிவிட்டு அவளுடன் இருக்க மனமின்றி, தன் மனத்துயர் தணிவதற்காக அன்னை கோசலை இருக்குமிடத்திற்குச் சென்றான் அங்குத் தாயைக் கண்டதும், படிமிசை வீழ்ந்து அவள் பாதங்களைப் பற்றிக்கொண்டு அழுது புலம்பினான். ''தந்தை எங்கே? தமையன் எங்குள்ளார்? இந்த மறுக்கத்தைக் காண்பதற்காகவா நான் கேகய நாட்டிலிருந்து இங்கு வந்தேன்! இந்நாட்டிற்குக் காவலராகிய அண்ணா கானகம் செல்லத் தக்கவரோ! அன்னையே! நீர் அவரைத் தடுக்கவில்லையா? தடுக்காத காரணத்தால் நீரும் பிழையுடையவர் ஆவீர். தீய கைகேயியின் வயிற்றில் பிறந்த கொடியவனாகிய நான் என் மனத்துயர் நீங்குவதற்காக உயிர்விடப் போகிறேன். சூரியனிலிருந்து தோன்றிய பழைய குலமானது இப் பாவிப் பரதனால் பழியைப் பூண்டதே! மன்னர் வானகம் செல்லவும், மூத்த புதல்வர் கானகம் செல்லவும் அதனால் நாடு துன்பத்தில் நையவும் நான் காரணமானேனே'' என்று வருந்தினான். இவ்வாறு அழுது சாம்பிய பரதனைக் கம்பர் தரும தேவதைக்கு ஒப்பானவன் என்று குறிப்பிடுகிறார்.

பரதன் கூறும் சபத மொழிகள்

பரதனது இத் துயரச் சொற்களைக் கேட்ட கோசலை, 'இவன் தூய நெஞ்சினன்; நாட்டை ஆளும் எண்ணம் இவனுக்கில்லை' என்னும் உண்மையை உணர்ந்தவளாய், ''மகனே! கைகேயி இழைத்த வஞ்சனையை நீ அறியவில்லை போலும்!'' என்று கூறினாள். இச்சொல் பரதனால் பொறுத்தற்கரிதாக இருந்தது. தாய் இழைத்த

கொடுமையைத் தான் அறியவில்லை என்பதில் பெரிய அன்னைக்கு ஐயம் இருப்பதாக உணர்ந்தான். அவ் ஐயத்தை போக்குவதே தன் முதற் கடன் என்று எண்ணிய பரதன் கோசலா தேவியிடம், 'தன் அன்னையின் கொடிய செயலைத் தான் அறிந்திருந்தால் தனக்கு இன்னின்ன பாவங்கள் வந்து சேர்வனவாக' என்று சபதம் செய்யத் தொடங்கினான். அவன் செய்யும் சபதங்களைக் கம்பர் இருபது கவிகளில் பாடுகிறார். உலகில் ஒருவன் என்ன என்ன செயல்களைச் செய்வதன் மூலம் பாவத்திற்கு ஆளா கிறான் என்பதை இக்கவிகளில் எடுத்துக்கூறி, அவற்றைத் தவிருமாறு மக்களுக்கு அறிவுரை வழங்குகிறார், பரதன் கூறும் சபதமொழிகளைப், பொதுமக்கள் பின்பற்றுவதற்கு உரியனவும், போர் வீரர்கள், அரசர்கள் கடைப்பிடித்தற் குரியனவுமாக இரு கூறாக அமைக்கலாம். பொதுமக்க ளுக்கு உரியனவற்றை, 'அறத்தை அழித்தல்', 'அருளைச் சிதைத்தல்' எனப் பகுத்து அனைத்தையும் இங்கு முறைப் படுத்தித் தருவோம்:

பொது மக்களுக்குரியன: அறத்தை அழித்தல்

தெய்வ நிந்தனை செய்தல், திருமாலைப் பரம்பொருள் அல்லன் என அறைதல், வேதத்தின் புனிதத் தன்மையை ஐயுறுதல், நரகம் உண்டென்ற ஆன்றோர் கூற்றை மறுத் தல், துறவிக்குத் துன்பம் இழைத்தல், அறநெறி வாழு வாத அந்தணர்க்குத் தீங்கிழைத்தல், அந்தணர் இல்லில் தீ வைத்தல், தரும நெறியில் வாழும் தூயவர்க்கு இடர் இழைத்தல், பிறர் பொருளைக் கரவில் கவர்தல், ஏழை இரந்து வைத்திருந்த பொருளைத் தட்டிப் பறித்தல், பொய்க்கரி கூறுதல், நீதி மன்றத்தில் அநீதியாகத் தீர்ப்பு வழங்குதல், பிறன்கடை நிற்றல், கன்னியைக் கற் பழித்தல், குருவின் மனைவியைக் காதலித்தல், தன்னுடன் வழிப்பயணம் செய்த பெண்கள் ஆறலைப்போரால் தாக் கப்படும்போது அவர்களைக் காவாமல் தன் உயிரைக் காக்க ஓடி உய்தல், நன்றி மறத்தல், மது உண்டல், பிறர்பழி தூற்றுதல், பிறர் தொல்குலத்துக்கு மாசு கற்

பித்தல், பிறர் கூறும் பழிப்புரைக்கு நாணாதிருத்தல், ஒருவன் எய்த்திருக்கும் வேளையில் துன்பம் செய்தல், தன்பால் ஒரு பொருளை இரந்தவனுக்கு, உண்டெனின் அதனை உடனே அளிக்கவோ, இல்லையெனின் 'இல்லை' யென்று கூறி அனுப்பவோ செய்யாமல், 'பின்னை' என்று கூறிப் பலகால் அலைக்கழித்தல்.

அருளைச் சிதைத்தல்

மன்னுயிரைக் கொன்று வாழ்தல், பெண் கொலை புரிதல், சிறுவரைக் கொலை செய்தல், கன்றுக்குப் பால் விடாமல் கறத்தல், பசித்திருக்கும் பிறர் கண்முன் அவர் நாவில் நீர்வரக் கண்டும், அவருக்கு அளிக்காமல், தான் மட்டும் நாய்போலத் தனித்து உண்ணல், பெற்ற தாய் பசித்திருக்கும்போது அவளுக்கு அளிக்காமல், தன் பாழ் வயிற்றை நிரப்புதல்.

போர் வீரர்கள், அரசர்கள் இவர்க்குரியன

அரசன் அறநெறியைக் கைவிட்டு மறநெறியில் பொருளீட்டுதல், மன்னன், ஆட்சிக்கு வந்ததும், 'தன்னைக் கேட்பார் இல்லை' என்றெண்ணி, வழிவழியாக வரும் தருமத்தை மறந்து, பழியான செயல்களைச் செய்தல், படையெடுத்து வந்த பகையரசனைக் கண்டு மக்கள் அஞ்சி நிலைக்கெட்டு ஓட, மன்னன் அப்பகைவனை எதிர்த்துப் போரிடாமல் தன் உயிரைப் பேணுதல், ஆயுதம் தாங்கிப் போர்க்களத்துக்குச் சென்ற மன்னன் அங்குப் பகைவனைக் கண்டு அஞ்சி, கண்ட பெண்கள் நகும்படி, அவனுக்குத் தலைதாழ்த்தி அடிபணிதல், பகையரசன் தன் நாட்டை வென்று கைப்பற்றிய வேளையில் அவனோடு போர்புரிந்து மடியாமல், உயிரைப் பேணி அப்பகைவன் தன் காலில் பூட்டிய விலங்குடன் உயிர்வாழ்தல்.

திருமாலைப் பரம்பொருளாகக் கூறுதல்

பரதன் தான் கூறும் சபதங்கள் ஒன்றில், 'திருமாலைப் பரம்பொருள் அல்லன்' என்று கூறும் பாவத்திற்கு

ஆளானவன் நரகில் செல்வதைக் குறிப்பிடுகிறான். தசரதரின் முன்னோர்களில் ஒருவரான இட்சுவாகு மன்னர் காலம்தொட்டு, திருமாலின் பள்ளிகொண்ட திருவுருவை அவ்வரச மரபினர் தம் அரண்மனையில் வைத்து வழி வழியாக வழிபட்டு வரும் செய்தி இராமாயணத்தில் கூறப் படுகிறது.[1] எனவே, பரதன் தான் வழிபடும் திருமாலுக்குச் சிறப்பளித்து அவரையே பரம்பொருள் எனப் போற்றுகிறான் என்று கருதுவது தக்கதே. இனி, இச் செய்தியைக் கம்பரின் கருத்தாகக் கொண்டு, அவர் தமது திருமால் பக்தியைப் பரதனின் வாய்மொழியாக வெளியிடுகிறார் என்று கூறுதலும் பொருந்தும். அவர்,

*ஆசைபற்றி அறையல் உற்றேன் இக்*
*காசு இல் கொற்றத்து இராமன் கதை அரோ.*[2]

என்று தற்சிறப்புப் பாயிரத்தில் பாடுவது இக்கருத்தை அரண் செய்கிறது என்னலாம். அங்ஙனமாயின் கம்பர் ஓரிடத்தில்,

*அரன்அதிகன் உலகுஅளந்த அரிஅதிகன்*
*என்றுஉரைக்கும் அறிவிலார்க்குப்*
*பரகதி சென்றுஅடைவரிய பரிசே போல்.*[3]
(கிஷ்கி. நாடவிட்ட. 24)

என்று இறைவழிபாட்டில் பொதுநோக்குடையவராகப் பாடிய கருத்தோடு மாறு கொள்ளாதா? என்று வினவு

---

[1] இத்திருவுருவை இராமன் தனது முடிசூட்டு விழாவின் போது விபீஷணனுக்கு அளிக்க, அவன் அதை விமானத்தில் வைத்து இலங்கைக்கு எடுத்துச் செல்லும் வழியில், உபய காவேரியின் நடுவில் விமானம் நின்று விட, இறைவன் அங்கேயே கோயில் கொண்டுள்ளார் என்பதும், அதுவே இன்றுள்ள திருவரங்கப் பெரிய கோயில் என்பதும் வரலாற்றுச் செய்திகள்

[2] காசுஇல் - குற்றமில்லாத.

[3] அரன்-சிவன். அதிகன்-மேலானவன். அரி - திருமால். பரகதி - மோட்சம் பரிசு - தன்மை.

வார்க்கு, அவர் உணர்வால், வழிபாட்டால் திருமால் பக்தரே என்றும், பண்பால் பிறதெய்வங்கள் மீதும், அவற்றை வழிபடுவார் மீதும், காழ்ப்பில்லாதவர் என்றும் அமைதி கூறுதல் வேண்டும்.

பரதன் கூறும் பாவச் செயல்களை அரண் செய்யும் இலக்கியச் சான்றுகள்

பரதன் கூறும் பாவச் செயல்களில் ஒன்றான 'நன்றி மறத்தல்' வழுவாய் இல்லாத மிகப்பெரிய பாவச் செயலாக ஆன்றோர்களால் கருதப்படுகிறது. புறநானூறு,

*ஆன்முலை அறுத்த அறன்இலோர்க்கும்*
*மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்*
*பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்*
*வழுஆய் மருங்கின் கழுவாயும் உளவென*
*நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
*செய்திகொன் றோர்க்கு உய்தி இல்என*
*அறம்பா டிற்றே.*[1] (புறம் 34; 1-7)

என்றும், திருக்குறள்,

*எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம் உய்வுஇல்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு.*[2] (119)

என்றும் நன்றி மறவாமையாகிய அறத்தை வலியுறுத்தல் காணலாம்.

இனி, ஒரு பொருளை வேண்டி வந்தவனுக்கு உடனே ஈயாது, அலைக்கழித்துப் பின்னர் ஈதல், அறனெனப்படாது, 'காற்கூலி' என்றே கூறப்படும் என்ப

[1] மாண்இழை - சிறந்த அணி. தப்பிய - தவறு செய்த. வழு-குற்றம். ஆய்மருங்கு-ஆராயும் இடத்து. கழுவாய்-பிராயச்சித்தம். புடைபெயர்தல்-கீழ்மேலாதல் செய்தி-செய்த நன்றி உய்தி - உய்வு. அறம் - அற நூல்கள்.

[2] எந்நன்றி - எத்தகைய அறத்தையும்.

தைத் தமிழ் நாவலர் சரிதை, 'அடுத்தடுத்துப் பின்சென்றால் ஈவது காற்கூலி' என்று கூறுதல் காணலாம். தனித்திருந்து உண்டலின் இழிவைத் திருவள்ளுவர்,

*விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா*
*மருந்துஎனினும் வேண்டற்பாற்று அன்று.*[1] (82)

என்ற பாடலில் குறிப்பிடுகிறார். மேலும், போரில் மடிவதே அரசர்க்குப் புகழும், மோட்சத்திற்கு ஏதுவும் ஆம் என்பது தொன்றுதொட்ட கருத்து போரில் இறவாமல், நோய்வாய்ப்பட்டோ, முதுமையாலோ இறக்கும் வேந்தர்களின் உடலை வாளால் போழ்ந்து, பின்னர்த் தகனம் செய்யும் முன்னாளைய வழக்கம், உடல் வெட்டுண்ட மன்னர்களுக்கே வீர சொர்க்கம் உண்டு என்ற நம்பிக்கையின் அடியாகத் தோன்றியதாகும்.

*மன்னர் நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ... நான்*
*மறை முதல்வர் பசும்புற் கிடப்பி நல்லமர் வீழ்ந்த...*
*மறவர் செல்வுழிச் செல்கென வாள்போழ்ந்து அடக்கலும்.*[2]

என்னும் புறநானூற்று (93) அடிகளைக் காண்க.

### கோசலை பரதனின் உள்ளத்தூய்மையை உணர்தல்

பரதன் கூறிய சபத மொழிகளைக் கேட்ட கோசலை அவனது மனத்தூய்மையை உணர்ந்து, அவனை அன்போடு தழுவிப் பாராட்டி வாழ்த்துகிறாள். அவ்வேளையில் வசிட்டமுனிவர் அங்கு வருகிறார். பரதன் அவர் பாதத்தில் வீழ்ந்து, "என் தந்தை எங்கிருக்கிறார்?" என்று அழுதுகொண்டே வினவினான். முனிவரும் கண்களில் நீர்பெருகப் பரதனைத் தழுவினார். அவர் அவனிடம், "மன்னர் இறந்து ஏழு தினங்கள் கழிந்துவிட்டன.

---

[1] சாவா மருந்து - அமுதம்.

[2] நோய்ப்பால்-நோயினால். விளிந்த-இறந்த. யாக்கை-உடல். மறை - வேதம். கிடப்பி - கிடத்தி அமர் - போர். மறவர் - வீரர். போழ்ந்து - பிளந்து.

*செஞ்சரம் என்பன தீஉமிழ்கின்றன செல்லாவோ*
*உஞ்சுஇவர் போய்விடின் நாய்க்குகன் என்றுஎனை*
*ஓதாரோ?*[1] (குகப்பட. 14)

*ஆழநெடுந்திரை ஆறுகடந்து இவர் போவாரோ?*
*வேழநெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?*
*தோழமை என்றுஅவர் சொல்லிய சொல்ஒரு*
*சொல்அன்றோ?*
*ஏழமைவேடன் இறந்திலன் என்றுஎனை ஏசாரோ?*[2]
(குகப்பட. 15)

"இராமனைத் தனது மூத்த தமையன் என்று இப் பரதன் மதிக்கவில்லை. புலியை ஒத்த தம்பி இலக்குவன் அவனுடன் இருப்பதையும் எண்ணவில்லை. போகட்டும். என்னை அப்பரதன் இகழ்ச்சியாகக் கருதியது எதனால்? என் நாட்டின் எல்லையைக் கடந்த பின்பன்றோ அவன் இராமனை அணுக முடியும்? வேடர் விடும் அம்பு மன்னர் களின் மார்பைத் துளைக்காதா? பாவம், பழி, பகை, நட்பு ஆகிய உணர்வுகள் அரசர்களுக்கு இல்லையா? பரதன் உயிரோடும் சேனையோடும் இராமன்மேற் செல்வது எனது அம்புக்குப் பிழைத்த பின்பன்றோ? இராமன் தவம் புரிகையில் இப் பரதன் நாடாள்வதா? எனது உயிர் கிடைத்தற்கரிய தேவாமிர்தம் அன்று. இராமனுக்கு உதவி புரிந்து, அதனால் புகழை ஈட்டிப் பின்னர் நான் மடிவேன். அன்று நான் இராமனோடு காட்டிற்குப் போகாமல் இங்கு இருந்தது நல்லதாயிற்று. எனது கடமையை இன்றே செய்வேன். பரதன் தன் படை வலிமையால் இராமனுக்குத் துன்பம் விளைப்பது, கங்கையைக் கடந்த பின்பன்றோ? இராமனுக்கு முன்னே நான் உயிர்விடுதல் நன்றன்றோ? பரதனின் படை எனது

---

1 அஞ்சனம் - மை. அஞ்சன வண்ணன்-இராமன். செஞ் சரம் - சிவந்த அம்பு. உஞ்சு - உய்ந்து.

2 வேழம் - யானை. விலங்கிடும் - அஞ்சி ஒதுங்கும். ஏழமை - எளிமை.

படைவீரர்களுக்கு ஒருவேளைப் போருக்கும் பற்றாது. பரதன் படை மட்டும் என்ன; தேவர்களே திரண்டு வந்தாலும், அதனையும் நான் அழிக்கமாட்டேனா? பரத னோடு போர் செய்தால் இராமன் கோபிப்பாரே என்று நீங்கள் கருத வேண்டா. பரதனின் படைகள் ஏழு கடல் போன்ற பெருஞ்சேனையே யானாலும், பசு மேய்ந்தால் சிறுபுல் விரைவில் அழிதல் போல அதனைக் கணப் பொழுதிற்குள் அழித்துவிடப் போகின்றேன்''.

சுமந்திரர் பரதனுக்குக் குகனை அறிவித்தல்

இவ்வாறு கங்கையின் தென்கரையில் குகன் பரத னோடு போர் செய்வதற்கு ஆயத்தமாக இருக்கும் வேளையில், ஆற்றின் வடகரையில் பரதனுடன் நிற்கும் சுமந்திரர், எதிர்க்கரையில் குகன் நிற்பதைக் கண்டு அவனைப் பற்றிய செய்திகளைப் பரதனுக்கு அறிவிக்கி றார். ''குகன் கங்கையின் இருகரைகளையும் உரிமையாக உடையவன்; எண்ணற்ற நாவாய்களைக் கொண்டவன்; கரிய நிறமும், திரண்ட தோளும், திண்ணிய மேனியும் உடையவன். இராமனின் உயிர்த்துணைவன். அவனிடம் கரைகாணாக் காதலைக் கொண்டவன். உன்னைக் காண வேண்டும் என்ற ஆவலோடு நிற்கிறான்'' என்றார்.

(இங்கு ஒரு கேள்வி எழக்கூடும். சுமந்திரர் இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரையும் தேரிலேற்றிக் காட்டிற்குக் கொண்டு வந்த அன்றிரவே நகரத்திற்குத் திரும்பி விடுகிறார். இராமன் குகனுடன் நட்புச் செய்தது அதற்கடுத்த இரண்டாம் நாளிலாகும். அச்செய்தியை அறியும் வாய்ப்பில்லாத சுமந்திரர், குகன் இராமனிடம் வைத்த அன்பைப் பற்றி எவ்வாறு அறிந்தார்? என்பதே அக்கேள்வி. இதுபற்றி அறிஞர்கள் சிந்திக்கவும்.)

குகன் தவற்றை உணர்ந்து பரதனைக் காணவருதல்

குகன் இராமனிடம் பேரன்புடையவன் என்பதைச் சுமந்திரர் வாயிலாக அறிந்த பரதன் அவனைத் தானே

சென்று காண எண்ணி, சத்துருக்னனுடன் கங்கைக் கரையில் வந்து நின்றான். பரதனது திருமேனி நிலையைக் குகன் இக்கரையிலிருந்து பார்த்ததும், தான் அவனைக் குறித்து எண்ணியதற்கு மாறாக, அம்மேனி அமைந்திருத்தலின் துணுக்குற்றான். குகன் கண்ட பரதனது தோற்றத்தைக் கம்பர் பின்வருமாறு வருணிக்கிறார்.

*வற்கலையின் உடையானை மாசுஅடைந்த*
*மெய்யானை*
*நற்கலைஇல் மதிஎன்ன நகை இழந்த முகத்தானைக்*
*கல்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்.*[1]
(குகப்பட 29)

பரதன் இராமனை ஒத்திருப்பதையும், அவன் அருகில் நிற்கும் சத்துருக்னன் இலக்குவனை ஒத்திருப்பதையும், இருவரும் தவவேடம் பூண்டிருப்பதையும், பரதன் துன்பம் தேங்கிய முகத்துடன் இராமனிருக்கும் திசை நோக்கித் தொழுவதையும் குகன் கண்டபோது, பரதனைப் பற்றித் தான் தவறாக எண்ணியதற்கு வருந்தி, முன்பு கொண்டிருந்த கருத்தை மாற்றிக் கொண்டு, 'இராமனுக்குப் பின் பிறந்த சகோதரர்கள் பிழை செய்வார்களா?' என்று கூறிப் பரதனைப் புகழ்கிறான்.

குகன் பரதனைத் தானே சென்று காண விரும்பி, தனியே ஒரு நாவாயில் ஏறிக் கங்கையின் வடகரைக்கு வருகிறான். வந்த குகனைப் பரதன் எதிர்சென்று தொழுகிறான். தொழுத பரதனைக் குகனும் வணங்குகிறான். அதன்பின் பரதன் (கைகூப்பி வணங்கியதோடு அமையாமல்) குகனின் அடியில் வீழ்ந்து தொழுகிறான். குகன் பரதனை எடுத்து, தந்தையின் மிக்க களிப்புடன் தழுவுகிறான். கம்பர் பரதனை, 'பிரமனும் வணங்கத்தக்கவன்' என்றும், குகனைத் 'தகவுடையோர் சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான்' என்றும் சிறப்பிக்கிறார்.

---

[1] வற்கலை - மரவுரி. கலை இல் மதி - ஒளிக் கதிர்கள் இல்லாத சந்திரன்.

*வந்து எதிரே தொழுதானை வணங்கினான்*
*மலர்இருந்த*
*அந்தணனும் தனைவணங்கும் அவனும் அவன்*
*அடிவீழ்ந்தான்*
*தந்தையினும் களிகூரத் தழுவினான் தகவுடையோர்*
*சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும்*
*சீர்த்தியான்.*[1] (குகப்பட. 32)

(சில அறிஞர்கள், அரச குலத்தைச் சார்ந்தவனும் ஒரு பேரரசரின் புதல்வனுமான பரதன், தாழ்ந்த வேடர் குலத்தவனான குகனை, 'வணங்கினான்' என்று சொல்வதோடு அமையாமல், அதன் மேலும், 'அடி வீழ்ந்தான்' என்று கூறுவது அவ் இருவர் நிலைக்கும் பொருந்தாது என்று எண்ணி, மேற்கூறிய பாடலில் வரும் 'அவனும் அவன் அடி வீழ்ந்தான்' என்ற சொற்களுக்கு, 'பரதன் தன் அடியில் வீழ்ந்த குகனை (அவனும்-பரதனும். அவன் அடி - பரதனாகிய தனது அடியில். வீழ்ந்தான் - வீழ்ந்த குகனை) எடுத்துத் தந்தையினும் களிகூரத் தழுவினான் என்று பொருள் கூறுவர். இப் பொருளில், 'மலரிருந்த அந்தணனும் தனை வணங்கும் அவனும்' என்பதும், 'தகவுடையோர் சிந்தையினும், சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்' என்பதும் பரதனையே குறித்ததாக அமையும். இப் பொருளுக்கு மாறாக, வேறுசில அன்பர்கள் குகனுக்கு வைணவ நூல்களில் அளிக்கப்படும் பெருஞ் சிறப்பை எண்ணுகிறபோது பரதன் குகனின் முன் வீழ்ந்து வணங்கியயதாகக் கூறுவதில் ஒவ்வாமை எதுவும் இல்லை என்று சாதிப்பர்.)

---

[1] தொழுதானை - தொழுத குகனை. வணங்கினான் - பரதன் வணங்கினான். மலர் இருந்த அந்தணன் - பிரமன். அந்தணனும் தனை வணங்கும் அவன் - பரதன். அவனடி வீழ்ந்தான் - குகனின் பாதத்தில் பணிந்தான். *சீர்த்தி - கீர்த்தி. சீர்த்தியான்*-குகன். குகன் பரதனைத் தந்தையினும் களிகூரத் தழுவினான்.

குகன் பரதனைப் பாராட்டுதல்

குகன் பரதனிடம், அவன் வந்த காரியம் யாதென்று வினவினான். பரதன் "எனது தந்தையார் தம் முன்னோர்கள் பின்பற்றி வந்த முறையிலிருந்து வழுவிவிட்டார். அதை நீக்குவதற்காக மன்னனைக் (இராமனை) கொணர்வான் வந்தேன்" என்று கூறினான். (பரதன் 'மன்னனைக் கொணர்வான் வந்தேன்' என்று கூறுவதன் மூலம், இராமன் தற்பொழுது காட்டில் துறவியாக இருந்தாலும், நாட்டை ஆளும் உரிமையுடைய மன்னர் அவரே என்பதைத்தான் உணர்ந்துள்ளமையைக் குகனுக்கு உணர்த்துவது நயமாக உள்ளது) கேட்ட குகன் பரதனின் உள்ளத் தூய்மையை உணர்ந்த உவகையில் அவன் பாதத்தில் மீண்டும் ஒருமுறை வீழ்ந்து வணங்குகிறான். பின்பு பரதனை நோக்கி, "தாயின் சொற்படி தந்தை தந்த அரசை, ஏற்பது தீய செயல் என்றெண்ணி, உதறிவிட்டுக் கவலை தோய்ந்த முகத்துடன் அண்ணனை அழைத்துப்போகக் கானகம் வந்துள்ளாய். ஏ! புகழினோய்! ஆயிரம் இராமர்கள் உனக்கு ஒப்பாக மாட்டார்கள்.

*தாய்உரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்*
*தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்*
*போயினை என்ற போழ்து புகழினோய்!*
*தன்மை கண்டால்*
*ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!*[1]
(குகப்பட. 35)

நீ உனது ஒப்பற்ற செயலின் மூலம், உனது குல முன்னோர்களின் புகழையெல்லாம் உனக்கே உரிமையாக்கிக் கொண்டாய்" என்றிவ்வாறு பலவும் கூறிப் பரதனைப் புகழ்ந்தான்.

---

[1] கேழ் - ஒப்பு அம்மா - அசை.

இராமன் புற்படுக்கையில் படுத்திருந்ததை அறிந்து
பரதன் வருந்துதல்

பரதன் அண்ணன் இருக்குந் தென்திசை நோக்கித் தொழுது, குகனைப் பார்த்து, "எனது தமையனார் இங்கு எவ்விடத்தில் தங்கியிருந்தார்?" என்று வினவினான். குகன் பரதனை அழைத்துச் சென்று, இராமன் புற்படுக்கையில் உறைந்த இடத்தைக் காட்டவே, பரதன் மனம்பதைத்து, மண்ணில் புரண்டு கண்ணீர் வடித்தான். அண்ணன் கிழங்கும் காயும் அருந்துவதற்கும், புல்லில் துயில்வதற்கும் தான் காரணமாக அமைந்ததை எண்ணி வருந்தி, இன்னும் தான் துறவாமல் இருப்பதற்காகத் தன்னை நொந்து கொள்ளுகிறான் இலக்குவன் துயின்ற இடம் யாதென வினவிய பரதனுக்குக் குகன், "இலக்குவன் துயிலவில்லை. அவன் இராமனும் பிராட்டியும் துயிலும் போது, அவர்களுக்கு நேர்ந்த துன்பத்தை எண்ணித் தன் கண்ணில் நீர்வார, ஆற்றாமையால் பெருமூச்சு விட்டுக்கொண்டு, வில்லைத் தாங்கிய கையுடன், இரவு முழுதும் கண் இமைக்காமல் காவல்புரிந்தான்" என்று கூறினான்.

*அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும்*
*அவளும் துஞ்ச*
*வில்லை ஊன்றிய கையோடும் வெய்து*
*உயிர்ப்போடும் வீரன்*
*கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்! கண்கள்*
*நீர் சொரியக் கங்குல்*
*எல்லை காண்பளவும் நின்றான் இமைப்பிலன்*
*நயனம் என்றான்.*[1]

(குகப்பட. 42)

பரதன், குகனிடம் "இராமனுக்குத் தம்பியராகப் பிறந்தவர்களுள் நான் அவன் எல்லையற்ற துன்பத்தை அடை

---

[1] கல்லை ஆண்டு - கல்லை அடிப்படுத்தி; வென்று. தோளாய் - பரதனை விளி.

வதற்குக் காரணமாக இருந்தேன். இலக்குவன் அத்துன்பமனைத்தையும் போக்கினான்'' என்று அவனைப் புகழ்ந்தான். பரதன் அன்றைய இரவை, இராமன் துயின்ற இடத்தில் கழித்துவிட்டு, மறுநாள் காலையில், தம்மைக் கங்கையின் மறுகரை சேர்க்குமாறு குகனை வேண்டினான்.

பரதன் தாய்மார்களைக் குகனுக்கு அறிவித்தல்

குகனும் அவ்வாறே பல நாவாய்களைக் கொண்டு வந்து எல்லோரையும் அக்கரையில் சேர்த்தான். கடைசி நாவாயில் பரதன், சத்துருக்னன், தாய்மார் மூவர், சுமந்திரர் இவர்கள் ஏறியவுடன் குகன் அதனைச் செலுத்தினான். நாவாய் செல்லும்போது, குகன் கோசலையை யார்? என்று வினவ, பரதன், ''இவர் என் தந்தையின் முதல் தேவி; இராமனை ஈன்றவர்; அவனால் தாம் அடைதற்குரிய பாக்கியத்தை நான் பிறந்ததால் துறந்தவர்'' என்றுரைத்தான். உடனே குகன் கோசலையை வணங்கினான். அதன்பின் கோசலை, குகனை யார்? என்று வினவுகிறாள். பரதன் ''இவன் இராமனுக்கு இனிய துணைவன்; எனக்கும், இலக்குவனுக்கும், சத்துருக்னனுக்கும் மூத்தவன்; பெயர் குகன்'' என்று கூறினான்.

பரதன், குகன் ஆகிய இருவரின் வருத்த மிகுதியைக் கண்டு, கோசலை அவர்களுக்கு ஆறுதல் கூறிவிட்டுப் பின் ''இராம லட்சுமணர்கள் காட்டிற்கு வந்தது ஒருவகையில் நலமாகவே அமைந்தது. குகனுடன் நீங்கள் நால்வரும் சேர்ந்து ஐவர்களாய் உலகத்தை நெடுங்காலம் ஆளுங்கள்', என்று வாழ்த்தினாள். இதன்பின் குகன் சுமித்திரையை யார்? என்று வினவுகிறான். பரதன், 'இவள் சத்தியத்தை உலகில் நிலை நிறுத்துவதற்காக உயிர்துறந்த தசரத மன்னரின் இளையதேவி. இராமனுக்கு உடன்பிறந்தவனாகி அவனை விட்டுப் பிரியாத இலக்குவனின் அன்னை'' என்றான். இறுதியாகக் குகன் கைகேயியை ''இவள் யார்'' என வினவுவதாக உள்ள பாடல், 'தசரதர் மயானம் செல்லுதல், பரதன் துன்பக்கடலுள் ஆழ்தல், இராமன்

கானகம் செல்லுதல் ஆகிய செயல்களைத் தன் மனத்துள் எண்ணித் திட்டமிட்டுச் செய்த கொடியவளை (கைகேயியை)ப் பார்த்து, குகன் யார்? என்று வினவப், பரதன் பதிலிறுத்தான் என்னும் முறையில் அமைந்துள்ளது. (இங்குக் குறிப்பிட்ட கைகேயியின் கொடிய செயல்களைக் கம்பர் கவிக்கூற்றாகக் கூறுவதைவிட இக்கருத்துக்களையே குகன் கேட்ட கேள்விக்குப் பரதன் கூறும் விடையாக, அடுத்த பாடலில் வரும் கருத்துடன் சேர்த்துக் கூறியிருந்தால், கைகேயியை வசை கூறுவதாகக் கற்பவர்களுக்கு எழும் எண்ணத்தைத் தவிர்த்திருக்கலாம் என்று கருதத் தோன்றுகிறது. பரதன், கைகேயியைக் குறித்து "இவள் துன்பங்களையெல்லாம் உண்டுபண்ணியவள்; பழியை வளர்த்தவள்; இவளுடைய பாழான குடலில்தான் நான் நெடுங்காலம் இருந்தேன். உலகம் துன்பத்துள் ஆழ்ந்திருந்த வேளையில் இவள் மட்டும் முகத்தில் துன்பக்குறி எதுவுமின்றி இருந்தாள். இவளே என்னைப் பெற்றவள்" என்றான். குகன் கைகேயியையும் வணங்குகிறான். இதற்குள் நாவாய் மறுகரை சேர்கிறது. எல்லோரும் கரையில் இறங்கி, அங்கிருந்து தாய்மார்கள் பல்லக்கில் செல்ல, பரதன் காலால் நடந்து பல காவதம் சென்றான். குகனும் அவனைப் பின்தொடர்ந்தான்.

## பரத்துவாச முனிவரைச் சந்தித்தல்

வழியில் அவர்கள் பரத்துவாச முனிவரைச் சந்திக்கிறார்கள். முனிவர் பரதனிடம் நாட்டை ஆளாமல் சடைதரித்துக் காட்டிற்கு வரக் காரணம் யாதென்று வினவினார். இக்கேள்வி பரதனுக்கு வருத்தத்தையும், கோபத்தையும் உண்டுபண்ணியது. அவன் முனிவரைப் பார்த்து, "என்னை நாட்டை ஏன் ஆளவில்லை என்று கேட்பது உமக்குத் தக்கதன்று. இராமனுக்குரிய நாட்டை நான் முறை பிறழ்ந்து ஆளமாட்டேன். அவன் ஆட்சியை ஏற்காவிடில் நானும் அவனுடன் கானகத்திற்கே செல்வேன்" என்றான். இதைக் கேட்டதும் முனிவரின் மனம்

குளிர்ந்தது. அவர் பரதனின் சேனைகள் அமுதுண்ணு மாறு, தம் தெய்விக ஆற்றலால் சொர்க்கத்தையே அங்கு வரவழைத்து, எல்லோர்க்கும் விருந்தளித்தார். அவற்றை உண்ட படை வீரர்களும், மற்றுள்ளோரும் தம்மை மறந்த இன்பத்துள் ஆழ்ந்தனர். ஆனால் பரதன் காய், கனி, கிழங்குகளை மட்டுமே அயின்று இரவில் வெறுந்தரையில் துயின்றான். மறுநாள் பொழுது விடிந்ததும், எல்லோரும் பயணத்தைத் தொடர்ந்தனர். வழியில் எதிர்ப்பட்ட ஒரு பாலைவனத்தைக் கடந்து, சித்திரகூடத்தைக் குறுகி னார்கள்.

### பரதன் போர் புரிய வருவதாக எண்ணி, இலக்குவன் போர்க்கோலம் பூணுதல்

சேனைகள் சற்றுத் தொலையில் வரும்போதே அவற் றின் ஆரவாரமும், நிலத்திலிருந்து கிளம்பி மேலெழுந்த புழுதிப்படலமும், சித்திரகூடத்தில் உறையும் இலக்கு வனின் கவனத்தை ஈர்த்தன. உடனே அவன் ஒரு குன் றில் ஏறிப் பார்த்தபோது, கடல் போன்ற சேனை தன்னை நோக்கி வருவதாக உணர்ந்தான். உடனே இராமனிடம், விரைந்து சென்று, பரதனே அண்ணனை மதிக்காமல், பெருஞ்சேனையுடன் போர் புரிய வந்துள் ளான் என்று கூறினான். தான் கூறுவது உண்மைச் செய்தியே என்று இராமனிடம் வலியுறுத்திப் பேசினான். அப்பொழுது எழுந்த கோபத்தில் இலக்குவன் பூமியில் குதித்தான். பரதனோடு போர் செய்வதற்காகப் போர்க் கோலம் பூண்டான். கவசத்தை அணிந்து, வீரக்கழலைக் காலிற் செறித்து, வில் அம்பு வாள் முதலிய ஆயுதங் களைத் தரித்துக்கொண்டு இராமன் முன்வந்து அவன் பாதத்தைத் தொட்டு வணங்கினான். இராமனோடு போர் செய்ய வந்துள்ளமையால் இருமையும் இழந்துவிட்ட பர தனையும், அவன் படைகளையும் தான் தனித்துநின்று கொன்று, முப்புரம் எரித்த சிவபெருமானைப் போல் விளங்கப் போவதாக வீரமொழி புகன்றான். இரத்த

ஆறுகள் தேர், யானை, குதிரை இவற்றை இழுத்துச் செல்வதையும், பூதமும், பேயும், கவந்தமும் போர்க்களத்தில் குதித்தாடுவதையும், பரதன் சத்துருக்னன் இவர்கள் மார்பில் தன் அம்பு துளைத்த பெரும்புழையுள் பறவைகள் பறந்து செல்வதையும், தசரதர் கைகேயியின்மீது வைத்த காதலால் பரதனுக்கு அளித்த நாட்டை அவன் ஆளாமல் நரகத்தை ஆளப்போவதையும், இராமன் காட்டிற்குச் சென்ற வேளையில் கோசலை வருந்தி அழுததைக் கண்டு மகிழ்ந்த கைகேயி இனி புத்திர சோகத்தால் தான் அழப்போவதையும் காணுமாறு இராமனுக்குக் கூறினான்.

பரதன் தன்னை அழைத்துப் போக வருவதாக
இராமன் கூறுதல்

இச்சொற்களைக் கேட்ட இராமன், இலக்குவனின் கோபம் தணியும்படி ஆறுதல்மொழி கூறுகிறான். "தம்பி! நீ பதினான்கு உலகங்களையும், கலக்கி நிலைகுலையச் செய்ய எண்ணினால் அதை யாராலும் தடுக்க இயலாது", என்று அவனது ஆற்றலைப் பாராட்டிவிட்டுப் பின்பு அறிவுரை வழங்குகிறான். "நமது குலத்தில் பிறந்த எண்ணற்ற அரசர்களுள் அறத்திநின்று நீங்கியவர் எவரேனும் உண்டா? பரதனின் செயல்கள் வேதங்களால் எடுத்துக்காட்டாகக் கூறத்தக்கனவாம். அவன் தகுதியற்ற செயல்களை ஒருபொழுதும் செய்யான். நீ என் மீது வைத்த நேயத்தால் பரதனின் நேர்மையை உணரவில்லை. பரதன் என்பால் வைத்த அன்பினால் நாட்டையும், சேனைகளையும் என்னிடம் அரிப்பதற்காக வருகிறான் என்று எண்ணுவதன்றி, போர் செய்ய வருகிறான் என்று எண்ணுதலும், அதனை வாயாற் கூறுதலும் அறிவுடைமையாகுமா? தருமதேவதையும், நேர்மைக்கு உரையாணியும் போன்ற பரதனை நீ பிழையாக நினைக்கலாமா? அவன் என்னைப் பார்ப்பதற்காகவே வருகிறான். இவ்வுண்மையை நீ சிறிது நேரத்தில் காண்பாய்" என்றான்

### இராமனைக் காணவரும் பரதனின் தோற்றம்

இச்சமயத்தில் பரதன் தன்னுடன் வந்த சேனைகளை அகற்றி நிறுத்திவிட்டு, சத்துருக்னனும், தானுமாக அண்ணனைக் காண ஆவலோடு வருகிறான். கம்பரின் பாடல் பரதனின் கோலத்தைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

*தொழுதுஉயர் கையினன் துவண்ட மேனியன்*
*அழுதுஅழி கண்ணினன் அவலம் ஈதுஎன*
*எழுதிய படிவம் ஒத்து எய்துவான்.*

(திருவடி சூட்டு. 49)

துன்பமே உருவெடுத்த தோற்றம், துவண்ட மேனி, அழுது பொலிவிழந்த கண், மேலே தூக்கிக் குவித்த கை இவற்றையுடைய பரதனைத் தூரத்தில் வரும்போதே இராமன் கண்டு, தன் அருகில் நிற்கும் இலக்குவனிடம் மெல்லிய குரலில், ''பரதனின் போர்க் கோலத்தை நன்றாகப் பார்'' என்று கூறினான். இலக்குவன், தன் பிழையை உணர்ந்து நாணினான். அவன் முகம் பொலி விழந்தது. பரதனைப் பழித்துக் கூறிய சொல்லும், உணர்வும் அகன்றன; வில் நழுவி விழக் கண்ணீர் பெருக்கி நின்றான்.

### இராமன் பரதனைத் தழுவுதல்

பரதன் இராமனை நோக்கி வருகிறான். கணவனைப் பிரிந்து வருந்திய இராஜ்ய லெட்சுமி அனுப்பிய தூதன் போன்று பரதன் இராமனிடம் வந்ததாகக் கம்பர் பாடுவது நயம் பயப்பதாகும். பரதன் இராமனைப் பார்த்து அழுது கொண்டே,

*அறம்தனை நினைந்திலை, அருளை நீத்தனை*
*துறந்தனை முறைமையை.* (திருவடி சூட்டு. 53)

என்று சொல்லிய வண்ணம், இறந்த தந்தையைக் கண்டவன் போல, இராமன் மலரடியில் வந்து வீழ்ந்தான். இராமன் பரதனை எடுத்து, தன் கண்ணீர்ப் பெருக்கால்

அவன் மார்பு நனையும்படி அவனைத் தழுவினான். இராமன் பரதனைத் தழுவியதை, கருணையென்னும் சிறந்த பண்பு, நீதி என்னும் பண்பினைத் தழுவியதாகக் கம்பர் சிறப்பிக்கிறார்.

தசரதர் இறந்ததை அறிந்து இராமன் உணர்விழத்தல்

இராமன் பரதனிடம் தந்தையாரைக் குறித்து,

*மல்உயர் தோளினான் வலியனோ?*

(திருவடி சூட்டு. 56)

என்று வினவினான். பரதன், ''ஐய, உமது பிரிவாகிய பிணியாலும், என் அன்னையின் வரம் என்னும் காலனாலும் தந்தையார் சத்தியத்தை உலகில் நிறுத்திவிட்டு, மேலுலகம் சென்று விட்டார்'' என்று கூறினான். இச்சொல் புண்ணில் அயில் நுழைந்தாற் போல இராமன் காதுகளில் நுழைந்ததும், மூர்ச்சையுற்று மண்ணில் வீழ்ந்தான். சற்று உணர்வு வந்ததும், தந்தையை நினைத்துப் பலவாறு புலம்பினான். ''அறத்தின் தாயே! இகல் வேந்தர் ஏறே! வாய்மைக்கு இனி யாருளர்? வேள்வி இயற்றி என்னைப் பெற்றது, என்னால் உயிர் நீங்குவதற்குத் தானோ? உலகை ஆள்வதற்கு நான் இயைந்தது உம் உயிர்க்குக் கூற்றாக அமைவதற்காகவா? சம்பரனைக் கொன்று இந்திரனுக்கு ஆட்சி அளித்த வேந்தே! அரசாட்சியை எனக்குத் தந்துவிட்டுக் காட்டில் சென்று தவம் செய்யும் விதம் இதுவா? நீர் அளித்த ஆட்சியை ஏற்று, அதனால் உமது மரணத்திற்கே காரணமாக இருந்த நான் இனி யார் முகத்தை நோக்கி அரசாள்வேன்? நான் கானகம் அடைந்ததைத் தரியாது, நீர் உயிர்விட்டீர். ஆனால் நீர் மரணம் அடைந்த பின்பும் நான் உயிருடன் வாழ்கிறேன். வண்மை, மானம், திண்மை, செங்கோன்மை, உண்மை ஆகிய இந்நற்பண்புகள் இனி உலகில் இல்லாதவாறு உடன்கொண்டு போய்விட்டீரே!'' என்று கூறிச் சோர்கின்றான். தம்பியர்கள் சென்று அவனைத் தாங்கினர்.

### வசிட்டர் இராமனைத் தேற்றுதல்

அப்பொழுது வசிட்டர் அங்குத் தோன்றி இராமனுக்குத் தேறுதல் மொழி கூறுகிறார். ''உன் தந்தை அறுபதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து பின்னர் மடிந்திருக்கிறார். அவர் மரணத்துக்காக வருந்தலாமா? பஞ்சபூதங்களுமே அழிவனவாக இருக்க, உயிர் அழிவது புதுமையோ? உத்தம மைந்தனாகிய உன்னைப் பெற்ற காரணத்தால் உன் தந்தை விஷ்ணு லோகத்திற்குச் சென்றுள்ளார். நீ தந்தைக்கு ஆற்றும் உதவி இதனின் மேல் உண்டோ? உயிர் வாழ்க்கை, விளக்குப் போன்றது. அவ்விளக்கின் நெய் - புண்ணியம்; திரி - காலம்; சுடர் - விதி; நெய்யும் திரியும் தீர்ந்தால் விளக்கு அவிவது இயற்கையே. நீர்க் குமிழி போன்ற யாக்கைக்காக அழுதல் பேதைமை''. வசிட்டர் இவ்வாறு கூறி இராமனைத் தேற்றி, அவனைக் கங்கைக்கு அழைத்துச் சென்று, நீராடச்செய்து, சாத்திர முறைப்படி சடங்குகளையும் செய்விக்கிறார்.

### தசரதர் இறந்த செய்தி கேட்டுச் சீதை வருந்துதல்

சடங்குகளை நிறைவேற்றிவிட்டு இராமன் பர்ண சாலைக்கு வந்த வேளையில், முன்பு பரதனால் சற்றுத் தொலையில் நிறுத்தப்பட்ட அந்தணர், அரசர், அமைச்சர், படைகள், தாய்மார் எல்லோரும் இராமனின் பர்ண சாலையின் பக்கமாக வருகிறார்கள் இராமனுடன் பர்ண சாலைக்குச் சென்ற பரதன் அங்குப் பிராட்டியைக் கண்டு, துக்கம் தாங்காமல் முகத்தில் அடித்துக் கொண்டு அவள் பாதத்தில் வீழ்ந்து அழுகிறான். இராமன் பரதனைத் தூக்கி எடுத்து, தசரதர் இறந்த செய்தியைச் சீதைக்கு அறிவிக்கிறான். கேட்ட சீதை நடுங்கி மண்ணில் வீழ்ந்து கதறி அழுகிறாள். முனிபத்தினிகள் சீதையைக் கங்கைக்கு இட்டுச் சென்று நீராட்டுகிறார்கள். இப்போது சுமந்திரர் தாய்மார்கள் மூவரையும் அழைத்துக்கொண்டு சான்றோர்கள் உடன்வர இராமனிடம் வருகிறார். தாய்மார்கள் இராமனைக் கட்டிக்கொண்டு அழுகிறார்கள். பின்னர்

வசிட்டர் இராமனுக்குக் கூறும் அறிவுரை

இதுகாறும் இராமனுக்கும், பரதனுக்குமிடையே நிகழ்ந்த உரையாடலைச் செவிமடுத்த வசிட்டர் இராமனைப் பார்த்து, "திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து உண்டான பிரமன் உலகைப் படைத்தபோது தோன்றிய சூரியகுல வேந்தர்கள் இது வரையிலும் முறை தவறியதில்லை. குரவர்கள் ஐவர்களுள் தாய் தந்தையரை விடவும், கல்வி கற்பித்த ஆசிரியனே மேலானவன் என்பார்கள். நான் உனக்கு எல்லாக் கலைகளையும் கற்பித்தவன். எனவே, என் சொல்லைத் தட்டாது நாட்டுக்கு வந்து அரசை ஏற்று ஆள்வாயாக" என்று கூறினார். இராமன் வசிட்டரை வணங்கி "பிரம்மாவின் புதல்வரே! ஒரு செயலைச் செய்வேன் என்று ஏற்றுக் கொண்ட பின் அச்செயல் சான்றோர், குரவர் போன்ற எவராலேனும் தடுக்கத் தக்கதோ? தாய் பணிக்க, தந்தை ஏவிய செயலை மேற்கொள்ளாதவன் புலையன் என இகழத்தக்கவன் ஆவன். அந்நிலைக்கு ஆளாவதை விட நாயாய்த் திரிவது நல்லதன்றோ? பெரியோய்! கட்டளையிட்ட தாய் தந்தையரின் சொல்லை நிறைவேற்றுவதாகக் கூறி, நான் அதை முதலில் தலைமேற்கொண்ட பின், நீர் இப்பொழுது அதற்கு மாறாகக் கட்டளை இட்டுள்ளீர், நான் இனிச் செய்வது யாதென நீரே அருள்வீராக!" என்று வேண்டினான். (இராமன் வசிட்டரை, 'பிரம்மாவின் புதல்வரே! என அழைப்பதற்குப் பயன்படுத்திய சொற்கள் 'மலருளான் சிறுவ!' என்பதாகும். வசிட்டர் கூறிய வாதம் முற்றறிவினதன்று என்ற கருத்தை இராமன் அவரைக் குறிக்கப் பயன்படுத்திய 'சிறுவன்' என்ற சொல் குறிப்பால் உணர்த்துவதாகச் சொல்நயம் காட்டுவர்.) வசிட்டர் ஒன்றும் கூற இயலாமல் வாளா இருந்தார். உடனே பரதன் "அப்படியானால் நாட்டை யாரேனும் ஆள்க! நான் இராமனுடன் காட்டிற்குச் செல்லுதல் உண்மை" என்றான்.

பரதன் இராமனின் பாதுகை பெற்று மீளுதல்

பூமியில் நடந்த இந்நிகழ்ச்சிகளை யெல்லாம் வானுலகிலிருந்து அறிந்து கொண்டிருந்த தேவர்கள், பரதன் இராமனை நாட்டிற்குக் கொண்டு போய்விட்டால், அரக்கரை அழித்தலாகிய தமது இச்சை நிறைவேறாது என்றெண்ணி, ''இராமன் தந்தை சொல்லைக் காத்துப் பதினான்கு ஆண்டுகள் கானில் வாழ்வான்; அக்காலம் முழுவதும் நாட்டை ஆள்வது பரதனின் கடமை'' என்று அசரீரியாக மொழிந்தனர். அத்தெய்வ வாக்கை ஏற்று, பரதன் இராமனிடம், ''பதினான்கு ஆண்டுகளும், கழிந்தவுடன் அயோத்திக்கு வந்து ஆட்சியை ஏற்காவிடில், நான் எரியில் வீழ்ந்து மாள்வேன். இது உண்மை'' என்றான். இராமன் அதற்கு இணங்கினான். பரதன் இராமனிடம், அவனது பாதுகையை அருளுமாறு வேண்ட இராமனும் அதனை ஈந்தான். பரதன் பாதுகையைத் தலையில் தாங்கியவண்ணம் இராமனை வணங்கிவிட்டு நாடு திரும்பினான். அவனுடன் சுற்றத்தார், சான்றோர், தவத்தோர், சேனாவீரர்கள், வசிட்டர், பரத்துவாசர்' நகர மாந்தர், குகன் எல்லோரும் சென்றார்கள்.

## 12. கைகேயியும் பரதனும் களங்கம் அகலப் பெறுதல்

### சூர்ப்பணகை இராமனைக் காணுதல்

இராமன், பரதனையும், அவனுடன் வந்த அனைவரையும் அயோத்திக்கு அனுப்பிவிட்டு, அதன்பின் தான் சித்திரகூடத்தில் தங்கியிருந்தால், நகர மாந்தர்கள் தன் மீதுள்ள அன்பினால் அடிக்கடி வந்து, தனது அமைதியைக் குலைக்கக் கூடும் என்றெண்ணி, அங்கிருந்து மேலும் தென்திசை நோக்கி நகர்வானாயினான். காட்டில் பல இடங்களில் தங்கி, தான் கழிக்கவேண்டிய வனவாசத்தின் பெரும்பகுதியையும் கழித்துவிட்டு, பின்னர் அகத்திய முனிவருடைய அறிவுரைப்படி, பஞ்சவடியென்னும் இயற்கை வளமும் வனப்பும் மிக்க இடத்திற்குச் சென்று, அங்கு இலக்குவன் அமைத்த பர்ணசாலையில் மனைவியோடும், தம்பியோடும் தங்கியிருந்தான். அங்கிருக்கும் போதுதான் பஞ்சவடியின் அருகிலுள்ள ஜனஸ்தானத்தில் வாழ்ந்து வந்த இராவணன் தங்கையாகிய சூர்ப்பணகை இராமனை ஒருநாள் தற்செயலாகக் கண்டு, அவன் அழகில் மயங்கி, தன்னை மணஞ்செய்யுமாறு அவனை வேண்டுகிறாள். இராமன் மறுக்கவே, சூர்ப்பணகை அவன் தன்னை மணப்பதற்குச் சீதையே தடையாக இருப்பதாக எண்ணி, அவளைத் தூக்கிச் செல்ல முயல்கிறாள். சீதையைக் காவல் புரிந்துகொண்டிருந்த இலக்குவன் சூர்ப்பணகையின் மூக்கு, காது, முதலிய உறுப்புகளைக் கொய்கிறான். சூர்ப்பணகை தன் சிற்றன்னையின் மகனாகிய கரனிடம் சென்று முறையிடுகிறாள். அவன், தூஷணன், திரிசிரன் ஆகிய துணைவர்களோடும், பெருஞ்சேனையோடும், இராமனுடன் போர் புரிய வருகிறான். இராமன் இலக்குவனைச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டு, தனியாக நின்று, அவர்கள் அனைவரையும் போரில் கொல்கிறான்.

### இராவணன் சீதையைக் கவர்ந்து இலங்கையில் சிறை வைத்தல்

சூர்ப்பணகை உடனே இலங்கைக்குச் சென்று, தன் தமையன் இராவணனிடம், இராமனால் தனக்கு நேர்ந்த அவமானத்தைக் கூறுகிறாள். இராவணன் அவளிடம் மானபங்கம் செய்யப்படுவதற்கு அவள் இழைத்த குற்றம் யாதென வினவுகிறான். சூர்ப்பணகை சீதையின் அழகை அவனிடம் வருணித்து, அவளை இராவணனுக்கு மனைவியாக்க எண்ணி, அவளைத் தூக்கி வர முயன்றபோது இராமனின் தம்பி இலக்குவன் தன்னை மானபங்கம் செய்துவிட்டதாகக் கூறினாள் சீதையின் அழகைச் சூர்ப்பணகையின் வாயிலாகக் கேட்ட இராவணன் அவள் மீது கொண்ட தணிப்பரும் காதலால், அவளை வஞ்சத்தால் கவர்ந்துவரத் துணிந்து, தன் மாமன் மாரீசனைப் பொன்மானாக உருவெடுத்துச் சீதை முன் செல்லும்படி ஏவுகிறான். மானைக் கண்ட சீதை அதைப் பிடித்துத் தருமாறு இராமனை வேண்ட, அவன் அதன் பின்னால் செல்கிறான். இராமன் அதை மாயமான் என்று உணர்ந்து, அதன் மீது அம்பு எய்தபோது அது, இராமனின் குரலில் 'சீதே! இலக்குமணா!' என்று அச்சக்குரல் எழுப்பிக் கொண்டு கீழே வீழ்ந்து மடிந்தது. மானின் குரல் கேட்ட சீதை உண்மையில் இராமன் ஆபத்துக்குள்ளாகி இருக்கிறான் என்றெண்ணி, இலக்குவனை வற்புறுத்தி, இராமனுக்குத் துணையாக அனுப்புகிறாள். சீதை தனித்திருக்கும் வேளையில் இராவணன் துறவி வேடத்தில் வந்து அவளை இலங்கைக்கு எடுத்துச் சென்று, அசோக வனத்தில் சிறைவைக்கிறான்.

### இராமன் இராவணனைக் கொன்று சீதையை மீட்டல்

மானின் பின்சென்ற இராமனும் இலக்குவனும் மீண்டு வந்தபோது சீதையைக் காணாமல் மிகவருந்தி, சடாயுவால், இராவணன் அவளைச் சிறைப்பிடித்துச் சென்ற செய்தியை அறிகிறார்கள். சீதையை மீட்கும் வழிகளைக்

குறித்துச் சிந்தித்த வண்ணம் அவர்கள் தென்திசை நோக்கிக் கிஷ்கிந்தைக்கு வந்தபோது, அனுமன், சுக்கிரீவன் இவர்களோடு நட்புச் செய்கிறார்கள். சுக்கிரீவன் வேண்டியபடி இராமன் அவன் அண்ணன் வாலியைக் கொன்று, சுக்கிரீவனைக் கிஷ்கிந்தைக்கு அரசனாக்குகிறான். சுக்கிரீவன் சீதையைத் தேடுவதற்காகத் தனது வானரவீரர்களை நாற்றிசையும் அனுப்புகிறான். அவர்களுள் தென்திசைக்குச் சென்ற அனுமன், இலங்கையில் சீதை சிறைவைக்கப்பட்டிருப்பதை அறிந்து வந்து கூறினான். இராமன் வானரப் படைகளின் துணையால் கடலில் அணைகட்டி இலங்கை சென்று, அங்கு இராவணனின் தம்பி விபீஷணனுடன் நட்புச் செய்து கொண்டு, இராவணனுடன் போர் தொடுக்கிறான். போரில் இராவணனின் தம்பி கும்பகர்ணனும், அதிகாயன், இந்திரசித்து முதலிய அவனது வீர மைந்தர்களும், அரக்கர் படைகள் அனைவரும் மடிகிறார்கள். இறுதியில் இராவணனும் இராமன் வாளியால் மரணம் அடைகிறான். இராமன் சீதையை அரக்கன் வைத்த சிறையிலிருந்து மீட்கிறான். பின்னர் அவன் அரக்கர் காவலில் சிறையிருந்தது பற்றி உலகோர் கூறும் அபவாதத்தைப் போக்குவதற்காக இராமன் அவளை நெருப்பில் மூழ்கச் செய்கிறான். கற்பின் கனலியாகிய சீதை அச்சோதனையில் வெற்றிபெற்று வெளிவந்தபோது இராமன் அவளை அன்புடன் அணைத்துக் கொள்கிறான்.

தசரதர் உலகுக்கு எழுந்தருளல்

இங்கு இவ்வாறு நிகழும்போது விண்ணுலகில் சிவபெருமான் தசரதரை உலகில் சென்று, இராமனைக் கண்டு, முன்பு அவனைப் பிரிந்ததால் உண்டான துன்பம் அகலுமாறு, அவனுடன் உரையாடி மகிழும்படி கூறுகிறார். தசரதர் அதன்படி பூமிக்கு வந்து இராமன் முன் தோன்றியதும், அவன் தந்தையின் பாதத்தில் வீழ்ந்து வணங்கினான் தசரதர் அவனைத் தழுவி யெடுத்து, ''நீ எனக்கு மகனாகப் பிறந்தமையால், நான் வானுலகில் பிரமனுக்கு ஒப்பான உயர்ந்த நிலையைப்

பெற்றிருக்கிறேன்'' என்று கூறி அவனைப் பாராட்டி மகிழ்ந்தார். சீதை அவரை வணங்கியபோது அவளிடம், இராமன் தீப்புகப் பணித்தது குறித்து வருந்தாதிருக்குமாறும், அச் சோதனை மூலம், சுடச்சுட ஒளிரும் பொன் போல் அவள் கற்பின் திண்மையை உலகம் அறிந்து போற்றுவதற்கு இடனாயிற்றென்றும் ஆறுதல் மொழிந்தார். இலக்குவனைத் தழுவி, இந்திரசித்தைவென்றமையால் அவன் வானுயர் புகழ் பெற்றுள்ளமையைப் பாராட்டினார்.

இராமன் தசரதரிடம் வேண்டும் வரம்

தசரதர் பின்னர் இராமனிடம் அன்புமீதூர ''உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்'' என்று கூறினார். இராமன்,

*தீயள் என்று நீ துறந்த என்தெய்வமும் மகனும்*
*தாயும் தம்பியுமாம் வரம் தருகெனத் தாழ்ந்தான்.*[1]
(மீட்சிப்பட. 129)

''நீர் கைகேயியைத் தீயவள் என்று எண்ணி, அவள் மீதும், அவள் மகன் பரதன் மீதும் கொண்ட வெறுப்பால் இருவரையும் அன்று உறவொழிந்தமையைக் கைவிட்டு, மீண்டும் அவர்களை மனைவியாகவும், மகனாவும் அங்கீகரித்து, அதன் மூலம் அவர்கள் முறையே என் தாயாகவும், தம்பியாகவும் அமையும் வரத்தை அருள்க'' என்று வேண்டினான். தசரதரும் அவ்வரத்தை அளிக்கவே இராமன், அதைப்பெற்று, இதுகாறும் கைகேயி மீதும், பரதன் மீதும் படிந்திருந்த களங்கத்தைப் போக்கி, அவர்களைத் தூய்மையுடைவர்களாகச் செய்கிறான் தசரதர் பின்னர் வானுலகிற்குச் சென்றுவிடுகிறார் இராமன் அங்கு வந்த தேவர்களிடம் வரம் பெற்று, அவ்வரத்தால் போரில் மடிந்த வானர வீரர்களை உயிர்பெற்றெழச் செய்கிறான்.

[1] என்தெய்வம் - கைகேயி மகன் - பரதன்,

## இராமன் அயோத்திக்கு மீளுதல்

இதன்பின் இராமன் சீதையுடனும், இலக்குவனுடனும் வீடணனுக்குரிய புஷ்பக விமானத்தில் ஏறி, அயோத்திக்குப் புறப்படுகிறான். தன்னுடன் அயோத்திக்கு வர விரும்பிய வீடணன் உள்ளிட்ட அரக்கர்களையும், சுக்கிரீவன், அனுமன், அங்கதன் முதலிய வானரர்களையும் மனிதவடிவம் எடுக்கச்செய்து, தன்னுடன் அவ்விமானத்திலேயே அழைத்துச் செல்கிறான். வழியில் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தில் இறங்கி, எல்லோரும் முனிவரை வழிபடுகிறார்கள். முனிவர் அளித்த விருந்தை உண்டு அங்கிருக்கும் வேளையில், இராமன் அனுமனைப் பரதனிடம் அனுப்புகிறான். அனுமன் வழியில் குகனைச் சந்தித்து, இராமன் பரத்துவாசர் ஆசிரமத்தில் தங்கியிருக்கும் செய்தியை அவனுக்கு அறிவித்துவிட்டுப் பரதனிடம் வருகிறான். இராமன் குறித்த காலத்தில் வரவில்லையே என்ற வருத்தத்தில், பரதன் நெருப்பை வளர்த்து அதில் பாய்ந்து, உயிர்விடப் போகும் தறுவாயில் அனுமன் அங்குத் தோன்றி, பரதனைத் தடுத்து, தீயையும் அவித்து இராமன் வந்துகொண்டிருக்கும் செய்தியை அறிவிக்கிறான். குகன் உடனே தன் படைகளுடன் பரத்துவாசரின் ஆசிரமத்துக்குப் புறப்பட்டுச் சென்று, அங்கு இராமனைக் கண்டு வணங்கினான்.

## இராமனது முடிசூட்டு விழா

பரதன் அண்ணனை வரவேற்பதற்காக, நகர மாந்தர்களுடன் கங்கைக் கரையை அடைகிறான். இராமன் பரத்துவாசரிடமிருந்து விடைபெற்றுத் திரும்பும்போது கங்கைக் கரையில், பரதனையும் நகர மாந்தர்களையும் சந்திக்கிறான். பின்னர் எல்லோரும் விமானத்தில் ஏறி நந்தியம்பதிக்கு வந்து சேருகிறார்கள். இராமன் அங்குத் தன் துறவுக் கோலத்தைக் களைந்துவிட்டுத், தேரூர்ந்து அயோத்தி வந்தடைகிறான். அங்கு ஒரு நன்னாளில் இராமனுக்கு முடிசூட்டு விழா நடைபெறுகிறது. அந்நிகழ்ச்சியைக் கம்பர்,

*அரிஅணை அனுமன் தாங்க அங்கதன்*
*உடைவாள் ஏந்தப்*
*பரதன் வெண்குடைகவிக்க இருவரும் கவரிவீச*
*விரைசெறி கமலத்தாள்சேர் வெண்ணெய்மன்*
*சடையன் தங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே*
*புனைந்தான் மௌலி.*[1]
(திருமுடிசூட்டு. 32)

என்று பாடுகிறார்.

---

[1] அரியணை - சிம்மாசனம். இருவரும் - இலக்குவனும் சத்துருக்னனும். விரை - வாசனை. கமலத்தாள் - இலக்குமி. வெண்ணெய் - திருவெண்ணெய் நல்லூர். சடையன் - கம்பரை ஆதரித்த சடையப்ப வள்ளல். மௌலி - கிரீடம்.

## 13. மந்தரையும் கைகேயியும் காவியத்தில் ஆற்றும் பங்கு

### மூவகைக் காவிய பாத்திரங்கள்

இராமகாதையில் இடம்பெறும் பாத்திரங்களுள் சிலர் கதைநிகழ்ச்சிக்கு முக்கியமானவர்களாகவும், சிலர் சாதாரணமானவர்களாகவும், வேறு சிலர் இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் இருப்பவர்களாகவும் உள்ளனர். இராமன், சீதை, இலக்குவன், அனுமான், இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து, வீடணன் போன்றோர் முதல்தரப் பாத்திரங்களாகக் கருதப்படத் தக்கவர்கள். தசரதர், வசிட்டர், விசுவாமித்திரர், சுமந்திரர், பரதன், மந்தரை, கைகேயி, குகன், சூர்ப்பணகை, அங்கதன் போன்றோர்களை இரண்டாம் தரப் பாத்திரங்களாகக் கருதலாம். இனி, கோசலை, சுமித்திரை, சத்துருக்னன், தாரை, மண்டோதரி, திரிசடை, சடாயு, மாரீசன், கரன், பரத்துவாசர், அகத்தியர் முதலியோர் மூன்றாம்தர நிலையில் உள்ளவர்களாக எண்ணத்தக்கவர்கள். இப்பாகுபாடு முடிந்த முடிபன்று; மாறுபாட்டிற்கிடமுண்டு.

### விசுவாமித்திரர் இராமனையும் சீதையையும் இணைத்து வைத்தல்

இவர்களுள் இராமனும், சீதையும் காவியத்தின் முக்கிய நோக்கமாகிய இராவணவதத்தின் பொருட்டுத் திருமாலும், பூமகளும் எடுத்துவந்த அவதாரமூர்த்தங்களாவர். ஏனையோர் அவ் அவதார நோக்கம் கைகூடுவதற்குச் சிறிதும் பெரிதுமாக உதவுகிற பாத்திரங்களாவர். விசுவாமித்திரர் அயோத்தியில் அவதரித்த இராமனையும், மிதிலையில் அவதரித்த சீதையையும் சுயம்வரத்தின் மூலம் இணைத்து வைக்கிறார். திருமணத்தைத் தொடர்ந்து அதன் அடுத்த நிகழ்ச்சியாக, இராமன் சீதையுடன் அரக்கர்கள் வாழ்கிற காட்டிற்குச் செல்வது இன்றியமையாததாகும் அதற்கான முயற்சியும், அறுபதினாயிரம் வருடம்

உலகை ஆண்டு அலுத்த தசரதர், முன்னோர் மரபின்படி தம் மூத்த புதல்வன் இராமனுக்கு முடிசூட்டி விட்டு, வானப்பிரஸ்த வாழ்க்கையை மேற்கொள்ள விரும்புவதி லிருந்து ஆரம்பமாகிறது. இராமன் தந்தையின் விருப் பத்தை மறுக்க இயலாமல், அரசை ஏற்பதற்கு இணங் கவே, சோதிடர் நல்லநாள் என்று கணித்துக் கூறிய மறுநாளிலேயே, முடிசூட்டு விழா நடைபெறுவதற்கான ஏற்பாடுகள், வசிட்டர், சுமந்திரர் இவர்களின் மேற்பார் வையில் மிக மும்முரமாக நடைபெறுகின்றன.

இராமனின் அவதார நோக்கத்தைக் கைகேயி நிறைவேற்றுதல்

முடிசூட்டு விழாத் திட்டமிட்டபடி நடைபெற்றுவிட் டால், இராமன் நாட்டை ஆண்டுகொண்டு அயோத்தியி லேயே இருந்துவிட நேர்ந்து, அதனால் ஜனஸ்தானத்தில் வாழும் கரன், தூஷணன், திரிசிரன், அவர்கள்பாலுள்ள 60 லட்சம் படைவீரர்கள், இலங்கையில் கொடுங்கோ லாட்சிபுரியும் இராவணன், அவன் தம்பி கும்பகர்ணன், மக்கள் இந்திரசித்து, அதிகாயன் முதலியோர், இராவ ணனது ஆணைக்கு உட்பட்டு ஆங்காங்கே வாழ்கிற ஆயிரம் வெள்ளம் அரக்கர்கள், அவனது பலகோடி அள வான மூலப்படைகள் — இவை அனைத்தையும் கொல்வ தான அவனது அவதார நோக்கம் நிறைவேறாமல் போய்விடும். இராவணனால் இன்னலுறும் தேவர்களோ அவனது வதம் எப்பொழுது நடைபெறும் என்று அந் நாளை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தவம், சிவபக்தி ஆற்றல், வீரம், நீடிய ஆயுள், தெய்விகப் படைக்கலங்களையுடைமை முதலிய தகுதிகளைப் பெற்ற இராவணனை, ஒழுக்கத்தைப் பேணாது, பெண்பாலாரிடம் தவறிழைக்கும் அவனது பலவீனத்தை ஏதுவாக வைத்தே அழிக்க வேண்டும் என்பது தெய்வசங்கற்பமாதலின், இராமன் அரசைத் துறந்து சீதையுடன் கானகம் செல்வது முக்கிய தேவையாக அமைந்துள்ளது. முடிசூடி அரசாள் வதற்கு ஆயத்தமாக இருக்கும் இராமனை அதைத்

தவிர்த்து, மனைவியுடன் கானகத்திற்கு அனுப்புகிற ஈவிரக்கமற்ற செயலைச் செய்வதற்கு முதனூலாசிரியராகிய வான்மீகி முனிவர் தேர்ந்துகொண்ட பாத்திரமே கைகேயி. வான்மீகருக்குப் பின்னர் வந்த கம்பர், துளசிதாசர் போன்ற வழிநூலாசிரியர்களும் கதையமைப்பில் அவரையே பின்பற்றுவாராயினர்.

கைகேயியைக் கொண்டு அச்செயலைச் செய்வித்தலும் எளிதன்று ஏனெனில், கைகேயி இயல்பாகவே நற்பண்புகளையுடைய ஓர் உயர்ந்த பாத்திரமாவள். தசரதரின் பட்டத்தரசியர் மூவருள்ளும் கைகேயியே அவரது அன்பை மிகுதியாகப் பெற்றிருந்தாள். அதற்குக் காரணம்: அவள் அழகில் சிறந்திருந்தமை ஒன்று. மற்றொன்று: அவள் தசரதரைப்போல வீரப்பண்பு மிக்கவளாக இருந்தது· இயல்பிலேயே பெருவீரரான மன்னர், வீரமிக்க கைகேயியை விரும்பியதில் வியப்பில்லை யன்றோ? (தசரதர் நிகழ்த்திய போர்களில் அவர் இந்திரன் பொருட்டு, சம்பரன் என்ற அசுரனுடன் நிகழ்த்திய போர் முக்கியமானதாகும். அப்போருக்குச் செல்லும்போது தசரதர் கைகேயியையும் தம்முடன் அழைத்துச் செல்கிறார். போரின் தொடக்கத்தில் தசரதர் காயமேற்று, மூர்ச்சையுற்றுத் தேரில் சாய்கிறார்; சாரதியும் படுகாயமடைந்து வீழ்கிறான். அந்த ஆபத்தான வேளையில் கைகேயி தானே சாரதியாக அமைந்து, குதிரைகளின் வார் பிடித்துத் தேரை வேறிடத்திற்கு ஓட்டிச் சென்று மன்னரைக் காப்பாற்றுகிறாள். அசுரர்கள் அங்கும் சென்று போர் தொடுக்க நின்றபோது, கைகேயி மன்னரைப் பாதுகாவலான மற்றோரிடத்திற்குக் கொண்டுபோய், சைத்தியோபசாரம் செய்து மூர்ச்சை தெளிவிக்கிறாள். பின்னர் நடந்த போரில் தசரதர் அசுரர்களை அழித்து, வெற்றிமாலை சூடி, இந்திரனை மீண்டும் பதவியில் அமர்த்துகிறார். கைகேயி போரில் இருமுறை செய்த உதவியைப் பாராட்டி, மன்னர் அவளுக்கு இரு வரங்களை அளிக்கிறார். இப்போர் நிகழ்ச்சியைக் கம்பர் தமது நூலில்

தனியாகப் பாடவில்லை; வான்மீகி அயோத்தியா காண்டம் சருக்கம் - 9ல் விரிவாகக் கூறுகிறார்.)

சம்பராசுர யுத்தத்தில் கைகேயி தசரதருக்குச் செய்த உதவி, பிரமாண்ட புராணத்தின் ஒரு பகுதியான அத்யாத்ம ராமாயணத்தில் வேறு வகையாகக் கூறப்படுகிறது. போர் நடந்துகொண்டிருக்கும் வேளையில், தசரதர் ஏறிச்சென்ற தேரின் அச்சுத் தண்டு கழன்று, தேர் மறிந்து விழக்கூடிய நிலையை அடைந்ததாகவும், அதை யறிந்த கைகேயி தயங்காமல் தன் கையையே அச்சுத் தண்டாகச் செலுத்தி, மன்னர் பகைவனை வெல்வது வரைக்கும் அங்ஙனமே வைத்திருந்து உதவி புரிந்தாள் என்றும், அவள் காலத்தால் செய்த நன்றியைப் பாராட்டி மன்னர் அவளுக்கு இரண்டு வரங்களை அளித்தார் என்றும் சொல்லப்பட்டுள்ளன.

கைகேயி தெய்வக் கற்பினள்

வீரத்தில் சிறந்த கைகேயி வேறுபல உத்தம குணங்களுக்கு உறைவிடமாகவும் விளங்கினாள். கம்பர் அவளைத் 'தெய்வக் கற்பினாள்' (மந்தரை சூழ். 44) என்று போற்றுகிறார் தசரதர் தனக்குக் கணவராக அமைந்ததில் அவள் பெருமை அடைகிறாள். மன்னரது அன்பைத் தான் பெற்றிருப்பதில் அவள் நம்பிக்கை கொண்டிருந்தாள். அவ் அன்பைத் தான் பெற்றிருக்கும் காலமட்டும் தனது வாழ்வு மற்றெவருடைய வாழ்வைவிடவும் சிறப்பில் குறைந்துவிடப் போவதில்லை என்று உறுதியாக எண்ணினாள். சக்களத்திமார்களிடமும், அவர்கள் புதல்வர்களிடமும் அவள் அன்பாகவே நடந்துகொள்கிறாள். மக்கள் நால்வருள்ளும் தன் புதல்வன் என்றும், சக்களத்தி புதல்வர் என்றும் வேற்றுமை பாராட்டாமல், அனைவரையும் தான் பெற்ற மைந்தர்களாகவே நேசிக்கிறாள். அம்மக்கள் செவ்விய நடத்தையுடையவராகவும், அறத்திலிருந்து திறம்பாதவராகவும் இருப்பதில் அவள் பெருமை

கொள்ளுகிறாள். அவ்வாறு பெருமையடைவதற்கு அவ ளுக்கு அறத்திலிருந்த உறுதியான பற்றே காரணமாக வேண்டுமன்றோ?

கைகேயி இராமனிடம் பேரன்பு வைத்தல்

கைகேயி தன் மகன் பரதனது நற்குணங்களையும் அறியாமல் இல்லை. 'பன்னரும் பெரும் புகழ்ப் பரதன், என்று அவள் அவனைக் குறிப்பிடுகிறாள் ஆயினும், அவள் இராமனிடமுள்ள தெய்விகச் சிறப்புக்களை உணர்ந்து, பரதனைவிடவும், அவன்பால் அதிக அன்பு வைக்கிறாள். இராமனை, 'புவிக்கெலாம் வேதமே யனையவன்' என்று அவள் குறிப்பிடுவதிலிருந்து இது புலனாகிறது. வேதம் எவ்வாறு ஒழுக்க நெறியை உணர்த்தி மக்களை நல்வழிப்படுத்துகிறதோ அதைப் போன்று, இராமனும் உலகில் நன்னெறியை நிலை நிறுத்தத் தோன்றியவன் என்று பெருமையோடு பேசு கிறாள். சிறந்த மைந்தனைப் பெற்ற தனக்கு எவ்விதத் தீங்கும் வராதென்று சொல்லும்போது அவள் பரதனைக் கூறாமல் இராமனையே குறிப்பிடுகிறாள். இராமனைப் பெற்றது கோசலையே யாயினும் அவனை வளர்த்தது கைகேயியே என்று (கைகேசி சூழ். 97) நாட்டு மக்கள் கூறும் அளவிற்கு அவள் இராமன்பால் வைத்த அன்பு உலகறிந்த செய்தியாக இருந்தது.

மரபுமுறையைப் பேணுவதில் உறுதி

கைகேயி தான் பிறந்த கேகய குலத்தின் சிறப்பை யும், புகுந்த சூரிய குலத்தின் உயர்வையும் பேணியே நடந்து வந்திருக்கிறாள். குலமரபிற்கேற்ற ஒழுக்கத் திலும், முன்னோர்கள் பேணி வந்த முறைமையிலும் பற்றுடையவளாகவே காணப்படுகிறாள். நடுநிலைமை, சன்மார்க்கம், தவம் முதலிய நெறிகளிலிருந்து மாறுபட் டாலும் வரன்முறையிலிருந்து பிறழ்தல் கூடாது என்பது அவளது கொள்கையாகும். அக்கொள்கையைக் கடைப்

பிடித்தலே புகழுக்குரிய வழியென்றும் உலகில் பிறந்தும் இறந்தும் போய்ப் பெறுவது புகழேயென்றும் அவள் தெரிந்திருந்தாள். (மந்தரை சூழ். 66)

அழுக்காறில்லாத உள்ளம்

கைகேயி வீரமுடையவளாதலால் பொறாமை முதலிய தீய உணர்ச்சிகள் அவள் உள்ளத்தில் எழுவதற்கு இட மில்லை. அரண்மனையில் நிலவிய இன்பச் சூழலில் கைகேயிக்கு எவர் மீதும் அழுக்காறு கொள்வதற்கான ஏதுவே இருந்ததில்லை யென்று சிலர் எண்ணக்கூடும். ஆனால் உண்மை அங்ஙனம் அன்று; சிற்சில ஏதுக்கள் இருக்கத்தான் செய்தன தசரதர் தமது புதல்வர்கள் நால்வரினும் இராமனையே கண்ணும் ஆவியுமாகப் போற்றுகிறார். அயோத்தி மக்களும் இராமனிடமே அதிக அன்பு காட்டுகிறார்கள், விசுவாமித்திர முனிவர் தசரத ரிடம் தமது வேள்வியை நிறைவேற்றுவதற்குத் துணை வேண்டியதும் இராமனைத்தான். அதன் மூலமாக அரிய மந்திர உபதேசங்களும், தெய்விகப் படைக்கலங்களும் இராமனுக்குக் கிடைக்கின்றன. இவை யாவும் சாதாரணப் பெண்களின் உள்ளத்தில் பொறாமைத் தீயை மூட்டப் போதியனவே. ஆனால், இரும்பைக் கறையான் அரிக் குமா? என்றபடி கைகேயியின் அறவுணர்வு வாய்ந்த உள்ளத்தில் இவை எவ்வித மாறுதலையும் உண்டுபண்ண வில்லை.

இராமன் கைகேயியிடம் வைத்த அன்பு

இராமனது தகுதிகளையும், அவனுக்கு வரவிருக்கும் பெருவாழ்வையும் கைகேயி உணராமல் இல்லை. ஆனால் இராமனைத் தனது புதல்வனாகப் பாராட்டி வந்தமை யால், அவற்றால் அவள் மனம் களிப்புற்றதே யன்றிப் பொறாமை கொள்ளவில்லை இராமனும் கைகேயியைத் தன் சொந்தத் தாயினும் மேலாகவே மதித்து வந்திருக் கிறான். மிதிலையில் இராமனுக்கும், சீதைக்கும் திருமணம்

நடந்து முடிந்தவுடன் மணமக்கள் இருவரும் கைகேயி யைத்தான் முதலில் வணங்குகிறார்கள். அதன் பின்பே கோசலையையும், சுமித்திரையையும் வணங்கச் செல்கின் றனர். இச்சிறு செய்தியையும் கம்பர் கூறுவதன் நோக்கம் கைகேயிக்கும் இராமனுக்கும் இடையே இருந்து வந்த அன்பின் ஆழத்தையும், தசரதரின் தேவியர்களிடையிலும், அவர்கள் புதல்வர்களிடையிலுமிருந்த களங்கமற்ற அன் பையும், ஒற்றுமையையும் புலப்படுத்துவதற்கேயாம்

கைகேயியின் பண்பு நலன்கள்

கைகேயியின் தூய உள்ளமும், அவள் இராமன் மீது வைத்த பேரன்பும் முடிசூட்டு விழாவின் தொடக்கத்தில் நடந்த சில செய்திகளிலிருந்து மேலும் துலக்கம் எய்து கின்றன. தசரதர் இராமனது முடிசூட்டு விழா பற்றிக் கைகேயியைக் கலந்து ஆலோசிக்கவோ, தாமாக எடுத்த முடிவை, விழாவிற்குச் சில தினங்களுக்கு முன்பாகவேனும் அவளிடம் அறிவிக்கவோ இல்லை. விழாவின் தலைநாளில் நள்ளிரவுக்குப் பின், கைகேயி அச்செய்தியை முன்பே மந்தரை வாயிலாக அறிந்ததற்குப் பிறகு, அவளிடம் கூற வருகிறார். மேலும், மன்னர் முடிசூட்டு நிகழ்ச்சி யைக் கைகேயியின் தந்தை கேகயருக்கு அறிவிக்கவோ, கேகய நாட்டிற்குத் தாம் அனுப்பி வைத்த பரதனை வர வழைத்து அவனும் பங்கு கொள்ளும்படி விழாவை நடத் தவோ, எண்ணவில்லை. கைகேயியும் அவளைச் சார்ந் தவர்களும் அறிதற்கில்லாதபடி, திட்டமிட்டு விழாவை மந்தணமாக நடத்துகிறார் என்ற உணர்வு ஏனையோர்க்கு உண்டாகும்படி செயல்படுகிறார். தசரதரின் இச்செயல்கள் கைகேயியின் கண்டனத்துக்கு உரியனவே. ஆனால் கைகேயியோ, தசரதரின் இத் தவறான போக்கிற்காக அவரைக் குறைபட்டுக் கொள்ளவில்லை. இராமனுக்கு முடிசூட்டப் போவதை அரசர் அறிவிக்காமற் போனாலும், மந்தரையின் வாயிலாக அந்நற்செய்தியைக் கேட்க நேர்ந்தபோது கைகேயி பெருமகிழ்ச்சி அடைகிறாள்.

மந்தரை அச்செய்தியைக் கூறியதற்காக அவளுக்கு ஒரு விலையுயர்ந்த அரதன மாலையைப் பரிசளிக்கிறாள். கைகேயியின் இச்செயல், அவளிடமிருந்த பிறர் குற்றம் காணாமை, பிழை பொறுக்கும் பெருந்தகைமை, இராமன் மீது வைத்த பேரன்பு ஆகிய நற்பண்புகளைத் துலக்கிக் காட்டுகிறது.

### அறத்தில் உறுதி

கைகேயி அளித்த மாலையை மந்தரை அவள் முகத்துக்கு நேரே தரை குழிய எறிந்தபோது, அச்செயலைப் பொறுத்துக் கொண்டு அவளுக்கு அறிவுரை கூறுவது கைகேயி ஒருத்திக்கே இயல்வதாகும். வேறொருவராயின் அக்கணமே மந்தரையை வெகுண்டு நோக்கி, கடிந்து பேசி, அங்கிருந்து வெருட்டியிருப்பார் என்பதில் ஐயமில்லை. கைகேயியின் பொறுமைக்கு இதுவுமோர் சான்றாகும். மந்தரை கைகேயியின் உள்ளத்தில் இராமன் மீது பொறாமையையும், பகைமையையும் தூண்டி, பரதனுக்கு முடிசூடுதலும், இராமனைக் காட்டிற்கு அனுப்புதலுமாகிய மரபு மீறிய செயல்களைச் செய்யுமாறு வற்புறுத்திய போது, கைகேயி சினம் மிகுந்து, மந்தரையின் நாக்கை அறுக்க வேண்டுமென்றும், தான் தனது பொறுமையினால் அதைச் செய்யாது விட்டதாகவும் கூறி, அவளை 'அடங்குதி' என்று அதட்டுகிறாள். அறத்தில் இத்துணை உறுதியுடைய கைகேயிக்கு ஒப்பான, பிற பாத்திரங்களை இராமாயணம் முழுவதும் தேட முயன்றால், தசரதர், இராமன், வசிட்டர், பரதன் ஆகிய நால்வரை மட்டுமே காணமுடியும்.

### பரதன் அறத்தின் நிலையம்

இவர்களில் தசரதர் அறத்தைக் கடைப்பிடிப்பதில் ஆர்வமுடையவரேனும் அதன் நிமித்தமாக இராமன் கானகம் செல்வது அவருக்கு உடன்பாடில்லை வரங்களைத் தருவதாகக் கைகேயிக்குக் கூறிவிட்டுப் பின்னர் அவள்

தான் வேண்டும் வரங்கள் இன்ன என்பதை அறிவித்த போது மன்னர் தயங்குகிறார்; உறுதி குலைகிறார். வரத்தைக் கொடுக்காதிருந்தால் கைகேயி உயிரை விட்டு விடுவாள் என்பதை உணர்ந்த பின்னரே 'ஈந்தேன் வரம்' என்று கூறி, உயிர் சோர்கிறார். இராமன் கானகம் செல்லாவிட்டால் தாம் கைகேயிக்கு அளித்த வரம் பொய்யாகிப் போகுமே என்பதை அவர் எண்ணவில்லை. தசரதருக்கு அறத்திலிருந்த கொள்கைப் பிடிப்பை விடவும், இராமன் அறத்தில் கொண்ட ஆர்வமும் உறுதியுமே தசரதரைச் சத்தியவந்தராகச் செய்தன என்று கூறினால் அது பொய்யாகாது. இராமனும் உலகில் அறத்தை நிலை நிறுத்தத் தோன்றினவனாயினும், வாலியை மறைந்திருந்து கொன்ற காரணத்தால் அறம் திறம்பிய குற்றத்திற்கும், அதனாலுண்டான மாயாப் பழிக்கும் ஆளாகியுள்ளான். வசிட்ட முனிவரும் இராமனைக் காட்டிற்குச் செல்ல வேண்டாமென்று ஒரு முறையன்று, பல முறை வற்புறுத்திக் கூறும்போது அறத்தைக் கைநெகிழ விடுகிறார். பரதன் ஒருவன் மட்டுமே அறத்தின் துளங்காத நிலையமாக, மேருமலை போல் உயர்ந்து காட்சியளிக்கிறான்.

### கைகேயியைத் தீயபாத்திரமாகப் படைக்கும் தேவை

அறவுணர்வு நிரம்பிய கைகேயியை, அவள் இதுகாறும் கடைப்பிடித்து வந்த உன்னத ஒழுக்க நிலையிலிருந்து, கீழ்நோக்கி வீழ்ச்சியுறச் செய்து, அவளைக் கொண்டு இராமனைக் காட்டுக்கு அனுப்புவதாகிய உலகம் பழிக்கும் கொடிய செயலை, கதை நிகழ்ச்சியைக் கருத்திற்கொண்டு, செய்விக்க வேண்டிய ஓர் இன்றியமையாமை வான்மீகி முனிவரை முதலாகவுடைய காவிய கர்த்தர்களுக்கு ஏற்பட்டுள்ளது. அதன் பொருட்டு அவர்கள் கைகேயிக்கு இயல்பாகவுள்ள அன்பு, அறம், பொறுமை, நேர்மை போன்ற நற்பண்புகளை அகற்றிவிட்டு, அழுக்காறு இரக்கமின்மை, பிடிவாதம் முதலிய பண்புகளை அவள் மீது சுமத்தி, அவளை ஒரு தீய பாத்திரமாக உருமாற்றிப்

படைத்துள்ளனர். மூலக் கதையைப் பலவிடங்களில் மாற்றித் தமது நூலுக்கு வனப்பும், சிறப்பும் அளித்த கம்பரும், கைகேயி விஷயத்தில் மூலக்கதையைப் பின் பற்றுவதையன்றி அதில் மாற்றம் எதுவும் செய்ய இயலாத வராக உள்ளார். கதை நிகழ்ச்சிக்கு இராமன் கானகம் செல்வதே முக்கியமானது என்பதையும், அச்செயலில் கைகேயியை ஈடுபட வைப்பதற்கு ஒரு காரணம் என்ற மட்டில் அமைந்ததே பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற கருத்து என்பதையும் நாம் எண்ணுதல் வேண்டும்.

காவியகர்த்தர்கள் இராமனைக் காட்டிற்கு அனுப்பும் பணிக்குக் கைகேயியைத் தேர்ந்துகொண்டதற்கு அவளிட மிருந்த தனித் தகுதிகளே காரணமாகும். அவற்றைக் குறித்துச் சிந்திப்போம். முடிசூட இருக்கும் இராமன் முடிதுறந்து கானகம் செல்ல வேண்டுமானால் அதற்குரிய ஆணை தசரதச் சக்கரவர்த்தியிட மிருந்தே வரவேண்டும். இம்மிகப் பெரிய ஆணையை வேறு யாராலும் பிறப்பிக்க முடியாது. ஆனால், இராமனிடம் தன் உயிரையே வைத்திருக்கும் மன்னர் எக்காரணம் பற்றியும் தாமாக அவனைக் காட்டிற்கு அனுப்ப மாட்டார். இதனால் ஒரு கட்டாயத்திற்கு அவரை உள்ளாக்கி, அதிலிருந்து தப்ப முடியாத நிலையில் அவர் வாயிலிருந்து அவ் ஆணையைப் பிறப்பிக்க வேண்டியுள்ளது. அதற்கு ஏதுவாக அமைந் தனவே தசரதர் கைகேயிக்கு முன்பு அளித்த இருவரங்கள்.

மன்னரிடமிருந்து முன்பு வரம் பெற்றிருப்பவள் கைகேயி மட்டுமே யாவள். ஆதலால் இச்செயலை நிறை வேற்றுவதற்கு அவளையே கருவியாகத் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளது. மேலும், தசரதர் மற்றிரு தேவியரை விடவும் கைகேயியிடமே அதிக அன்பு வைக்கிறார். அவள் வேண்டுகோளை உடனே நிறைவேற்றி அவளைத் திருப்திப் படுத்துவதில் எப்பொழுதும் ஆர்வம் கொண்டுள் ளார். அவள் தான் பெறவிருக்கும் வரம் இன்னதெனக் கூறுமுன்பே, அளிப்பதாக அவரிடமிருந்து வாக்குறுதி

பெறுவதும் அவளுக்கு மட்டுமே இயல்வதாகும் இக் காரணங்களால் காவியக் கவிஞர்கள் இராமனைக் காட்டிற்கு அனுப்பும் செயலில் கைகேயியைப் பயன்படுத்துகிறார்கள்'

### மந்தரை கைகேயியின் பழிச்சுமையைக் குறைத்தல்

ஆனால். அதிலும் ஒரு கஷ்டப்பாடு உளது. கைகேயி இராமனிடம் பேரன்பும், அறத்தில் உறுதியான பற்றும் உடையவள். எனவே, இராமனைக் காட்டிற்கு அனுப்புமாறு அவளைக் கொண்டு மன்னரிடம் கேட்க வைப்பது எளிதன்று. அதைச் செய்வதற்கு முதலில் அவளது உயர்ந்த செப்பமுடைய உள்ளத்தைக் கோட்டமுடையதாகச் செய்வது தேவையாகிறது. அதைச் செய்வதற்காக முதனூலாசிரியராகிய வான்மீகியால் படைத்து உருவாக்கப்பட்டு, வழி நூலாசிரியர்களாகிய கம்பர், துளசிதாசர் முதலிய பிறமொழிக் காவியக் கலைஞர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட பாத்திரமே மந்தரை. மந்தரையைக் கைகேயியின் துணையாளாகப் பயன்படுத்தி, அவள் சூழ்ச்சியாலேயே கைகேயியின் உயர்ந்த உள்ளம் சிதைவுற்று, இராமன் அரசையிழந்து கானகம் செல்ல நேர்ந்ததாகக் கதையமைத்து, கைகேயிக்கு வரவிருந்த பழியில் பெரும்பகுதியையும் மந்தரைமீது சுமத்தி, கைகேயியின் பழிச்சுமையைக் குறைத்துள்ளார்கள்.

மந்தரை இராமனுக்கு எதிரான செயல்களில் ஈடுபடுவதற்கு இராமன் குழந்தைப் பருவத்தில் விளையாட்டாக அவள் கூன் முதுகில் மண் உண்டையால் அடித்த செய்தி காரணமாகக் கூறப்படுகிறது. அந்நிகழ்ச்சி நடந்து, பல வருடங்களாகியும் மந்தரை அதை மறவாமல் இராமனைப் பழிவாங்கும் சிந்தையுடன் இருந்தாள் என்றும், இராமன் முடிசூடப் போகும் செய்தியை அறிந்ததும், அத்தருணத்தை அவள் பயன்படுத்திக்கொண்டாள் என்றும் கம்பர் கூறுகிறார்.

### மந்தரையைப் படைத்த கம்பரின் மேதை

ஆனால், மந்தரை கைகேயியின் உள்ளத்தைத் திரிக்கும் நோக்குடன் அவளுடன் நிகழ்த்திய நீண்ட உரையாடலிலிருந்து, பழிவாங்கும் சிந்தனை அவளுக்கு இருந்ததாக அறியக் கூடவில்லை. பரதன் முடிசூடுவதன் அவசியத்தை மையமாக வைத்து, அதற்கு மாறாக இராமன் முடிசூடுவதானால் பரதனுக்கும், கைகேயிக்கும், அவள் சுற்றத்தார்க்கும், கேகயனது ஆட்சிக்கும் வரவிருக்கும் தீமைகளை, விளக்கிச் சொல்லி, மகன் மீதுள்ள பற்றுணர்வையும் தூண்டியே கைகேயியின் நேர்மையான உள்ளத்தைக் கலைத்து விடுகிறாள். பழிவாங்கும் எண்ணத்தை வெளிக்காட்டாதபடி மறைத்து அவள் நடந்து கொண்டது, அவளது அறிவாற்றலை விளக்கும் சான்றாகவே கருதப்படும். மந்தரையைக் கொண்டு கைகேயியின் உள்ளத்தைத் திரிக்கும் முயற்சியில் கம்பர் தமது பெரும் புலமையையும், கற்பனா சக்தியையும், கவித்துவ ஆற்றலையும் அள்ளிச் சொரிகிறார். பெண்களின் மனஇயல்பை உணர்ந்த உளநூலறிவையும், தருக்க முறையையும் கம்பர் திறம்படக் கையாளுகிறார். கவிதாதேவியே அவ்வேளையில் கம்பர் மீது ஆவேசமுற்றுக் குதிகொண்டு நிற்கிறாள் என்று சிலர் கூறுவது பொருத்தமேயாம். மந்தரையின் பேச்சு வன்மையால் திரிந்த கைகேயியின் மனம் அதன்பின் அறத்தைக் கடைப்பிடிப்பதில் நெகிழ்ச்சியடைந்து, தன் மகன் பரதனை அரசனாக்கும் முயற்சியில் முனைந்து நிற்கிறது.

இவ்வேளையில் பரதன் மட்டும் அயோத்தியில் இருந்திருந்தால், கைகேயியின் தீய எண்ணத்தை முளையிலேயே கிள்ளி அழித்திருப்பான் ஆனால் பரதன் சில தினங்களுக்கு முன்பே கேகய நாட்டிற்குச் சென்று விடுவதால் அவன் இல்லாத வேளையில் மந்தரை வகுத்த சூழ்ச்சிக்குக் கைகேயி வயப்பட்டு, அவள் ஏவியபடி மன்னரை வற்புறுத்தித் தன் இச்சையை நிறைவேற்றிக் கொள்ளுகிறாள்.

கைகேயிக்கு இரு வரங்களும் பயன்படுதல்

கைகேயிக்குத் தன் மகன் பரதன் அரசனாக வர வேண்டும் என்பதொன்றே நோக்கமாக இருந்தால், அதை அவள் மன்னரிடம் பெற்ற இரு வரங்களில் ஒன்றால் நிறைவேற்றி யிருக்கலாம் மன்னரும் கைகேயியின் பிடிவாத குணத்தை மாற்ற முடியாது என்பதை உணர்ந்த போது, அவளிடம் 'மண்ணே கொள் நீ. மற்றைய தொன்றும் மற' என்று கூறி, பரதனுக்கு முடிசூட்டுவதற்குச் சம்மதித்துவிட்டு, இராமன் கானகம் செல்வதை மட்டுமே வற்புறுத்தாதிருக்குமாறு வேண்டுகிறார். கைகேயி அதற்கு இணங்கியிருந்தால் இராமன் தனக்குரிய ஆட்சியை இழக்கக் கூடுமேயன்றிக் கானகம் செல்லும் தேவை எழுந்திராது. அப்போது இராமன் எடுத்து வந்த அவதார நோக்கம் நிறைவேறாமல் போய்விடும். எனவே, இராமன் கானகம் செல்லுதலாகிய இன்றியமையாத செயலை மன்னரைக்கொண்டு நிறைவேற்றுவதற்குக் கைகேயிக்கு ஒரு காரணம் வேண்டுமல்லவா? அதுவே, நாட்டு மக்கள் இராமன் மீது வைத்த பற்றினால், பரதனுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்து அவனது ஆட்சிக்கு ஆபத்தை உண்டுபண்ணி விடுவார்களோ என்று அவள் உள்ளத்தில் எழுந்த அச்சம். அவ் ஆபத்தை வருமுன் காப்பதற்காவே இராமனை மக்களின் கண்ணிற் படாமல் பதினான்கு வருடம் காட்டிற்கு அனுப்புமாறு மன்னரிடம் வேண்டுகிறாள். கைகேயி முன்பு அவரிடமிருந்து பெற்ற இரண்டாவது வரம் இப்பொழுது பயன் படுகிறது. மந்தரையே கைகேயிக்கு மன்னர் முன்பு அளித்த இரு வரங்களையும் நினைப்பூட்டி அவற்றைக் கேட்டு பரதனுக்கு முடிசூட்டுதலும், இராமனைக் காட்டிற்கு அனுப்புதலுமாகிய இரு செயல்களையும் நிறைவேற்றிக்கொள்ளுமாறு தூண்டுகிறாள்.

செஞ்சோற்றுக் கடன்

மந்தரை நகரமாந்தர்கள் நகர் அலங்காரம் செய்வதைக்கண்டு அவர்களை உசாவி, தசரசர் இராமனுக்கு

முடிசூட்டப் போகும் செய்தியை அறிந்தபோது, அச் செயல் அவர் கைகேயியின் திருமணத்தின்போது கைகேயி வயிற்றில் பிறக்கும் மகனுக்கு அரசைத் தருவதாகக் கேகயனுக்கு அளித்த உறுதிமொழிக்கு முரணாக இருப் பதை உணர்கிறாள் அச் செய்தியைக் கைகேயிக்கு அறிவித்து, அவளைக் கொண்டு அரசரின் செயலைத் தடுக்கச் செய்வது, அவள் சோற்றைத் தின்ற தனது கடன் என்பதை உணர்கிறாள். உடனே கைகேயி இருக்கும் இடத்திற்கு விரைந்து வந்து, உறங்குபவளை எழுப்பி, அவளுக்கு வரவிருக்கும் பெருங்கேட்டை, மன அதிர்ச்சி உண்டாகும்படி கூறுகிறாள். ஆனால் கைகேயியோ நிதானமாக, மந்தரையின் கருத்துக்களை மறுத்துத் தனக்கு ஆபத்து எதுவும் வரப்போவதில்லை என்று உறுதிபடக் கூறுகிறாள்.

அதன் மேலும், இராமன் முடிசூடப்போகும் நற்செய் தியைத் தனக்கு அறிவித்த மந்தரைக்கு மகிழ்ச்சி மீதூர ஓர் அரதன மாலையைப் பரிசளிக்கிறாள். மந்தரையல்லாமல் வேறொரு பெண்ணாக இருந்தால், கைகேயி அளித்த விலை மதிப்புடைய அரதன மாலையை மிக்க களிப்புடன் பெற்றுக்கொண்டு, தான் கூற எண்ணிய செய்தியைக் கைகேயி விரும்பவில்லை என்பதைத் தெரிந்ததும், அத னைக் கூறுதலைக் கைவிட்டிருப்பாள் ஆனால், மந்த ரைக்கோ அரதன மாலை பெரிதன்று. கைகேயிக்கும், பரதனுக்கும் அவர்கள் நன்மையை முன்னிட்டுத் தான் ஆற்ற வேண்டிய கடப்பாட்டையே பெரிதாக எண்ணு கிறாள். கேகய மன்னன் கைகேயியின் நலத்தைப் பேணும் நோக்குடன் தன்னை அவளுடன் அயோத்திக்கு அனுப்பி வைத்ததும் அவள் நினைவுக்கு வருகிறது. தான் கூறும் அறிவுரைகள் கைகேயிக்கு நன்மை பயக்கும் என்பதை உணராமல் அவள் தன்னைச் சினந்து, தனது நாக்கை அறுக்க வேண்டுமென்று கூறியபோதும், மந்தரை அஞ்சாமல் அவளுக்கு அறிவுரைகளைத் தொடர்ந்து கூறித் தனது கடமையை ஆற்றுவதில் உறுதியாக இருக் கிறாள். மந்தரையின் கடமையுணர்ச்சியையும், அதனால்

உந்தப்பட்டு அவள் செயல்படுவதையும் எவராலேனும் குறைகூற முடியுமா?

கடமையாற்றி உயர்ந்தவர்கள்

மகாபலிச் சக்கரவர்த்தி தன்பால் மூவடி மண்ணை இரந்த வாமனருக்கு அதனைத் தன் கொடையுள்ளத்தால் கொடுக்க முற்பட்டபோது, அதனால் அவனுக்கு வரவிருக்கும் கேட்டையுணர்ந்த, அவனது குருவாகிய சுக்கிராச்சாரியார் அவனைத் தடுக்க முயன்றதையும், அவன் கேளாதபோது, வண்டுருவாய் நீர்வார்க்கும் கமண்டலத்தின் மூக்குத் துளையை அடைத்து, அவனுக்கு நன்மை செய்ய முயன்று, தமது கடமையை ஆற்றியதையும் அறிபவர்கள், மந்தரையின் கடமை உணர்வை போற்றவே செய்வர்; தூற்றமாட்டார்கள்.

கும்பகர்ணனின் கடமை உணர்வு

இந்நூலில் வரும் கும்பகர்ணன் வரலாறு இவ்வுண்மையை மேலும் விளக்குகிறது. இராவணன் சீதையைக் கவர்ந்து சிறை வைத்த செயலைக் கும்பகர்ணன் அறிந்தபோது, 'அது அறனன்று' என்பதை அண்ணனுக்கு உணர்த்தி, அதனால் தன் குலத்திற்கு வரவிருக்கும் கேட்டினையும் விளக்கிச் சொல்லி, சீதையை விட்டிடுமாறு பரிந்து வேண்டுகிறான். இராவணன் அவ்வறிவுரையைக் கேளாமையால் இராம இராவணப் போர் மூளுகிறது. இராவணன் உறங்குகின்ற கும்பகர்ணனை எழுப்பிப் போருக்குச் செல்லுமாறு தூண்டுகிறான். கும்பகர்ணன் தான் இறந்த பிறகாவது சீதையை இராமனிடம் அளித்து, உய்ந்து போகுமாறு அண்ணனை வேண்டிவிட்டுப் போருக்குச் செல்லுகிறான். அவனை விடணன் போர்க்களத்தில் சந்தித்து, இராமன் தனக்களித்த இலங்கையரசை அவனுக்குக் கொடுப்பதாகக் கூறி, அவனை இராமன் பக்கம் வந்து சேருமாறு அன்புடன் அழைக்கிறான். ஆனால் கும்பகர்ணனோ இதுகாறும் தன்னை ஆதரித்து வந்த அண்ணன் இராவணனுக்குத் தான்

கொண்ட கடப்பாட்டை நிறைவேற்றுவதையே, தம்பி (வீடணன்) அளிக்கும் அரசை விடவும் பெரிதாக மதித்துப் போர் புரிந்து வீர மரணம் அடைகிறான். அறத்திற்குத் துணை நின்று, அதன் பரிசாக இலங்கையாட்சியைப் பெற்ற வீடணனை விடவும், கடமையை ஆற்றி உயிர் துறந்த கும்பகர்ணனின் தியாக உணர்வையே உலகம் போற்றுகிறது. கடமையாற்றுபவர்கள் எப்பொழுதும் பாராட்டுக் குரியராவரே யன்றி ஒருபொழுதும் குறைகூறப் பெறார். கொலையாளிக்குத் தூக்குத்தண்டனை வழங்கிய நீதிபதியையும், அதை நிறைவேற்றிய கடைநிலை ஊழியரையும் தமது கடமையை நிறைவேற்றியதற்காக குறை கூறுவார் உண்டா?

மந்தரையைக் குறைகூறுவதில் பொருளில்லை

கடமையை ஆற்றியதில் சுக்கிராச்சாரி, கும்பகர்ணன் இவர்களைப்போல மந்தரையும் பாராட்டுக்குரியவளே. ஆனால் அவ்விருவர்களையும் போலப் பாராட்டப்படும் பேறு மந்தரைக்கு அமையாதது அவளது துர்ப்பாக்கியமே யாகும். அவள் பாராட்டப்படாதது மட்டுமன்றி, 'இராமன் தனக்குரிய நாட்டை இழந்து, சீதையுடனும் இலக்குவனுடனும் காட்டிற்குச் சென்று பல துன்பங்களை அனுபவிப்பதற்கு அவள் காரணமாக இருந்தாள்' என்று மக்கள் அவள்மீது வெறுப்பும் கொள்ளுகிறார்கள். இராமன் கானகம் சென்றதற்காக மந்தரையைக் குறை கூறுவதிலும் பொருளில்லை. மந்தரையின் செல்வாக்கு, கைகேயியின் எல்லைக்குள் மட்டுமே நிகழக் கூடும். அதற்கு அப்பால் செல்லும் ஆற்றல் அவள் சொற்களுக்கில்லை. கைகேயி மட்டும் மந்தரையின் சொற்களுக்கு அறவே செவிசாய்க்காமல் இருந்துவிட்டால், மந்தரையால் யார்க்கும் எந்தத் தீங்கும் விளைந்திராது எனவே, இராமன் உற்ற துன்பங்களுக்கு மந்தரையைக் காரணமாக கூறுவதைவிட அவள் சொற்களை ஏற்று இராமனைக் காட்டிற்கனுப்பிய கைகேயியைக் கூறுவதே சாலும் 'எய்தாரை நோவாமல் அம்பை நோவதால் பயன் யாது?' என்ற பழஞ்சொல்லையும் கருதுக.

மந்தரை கைகேயி செயல்களால் உலகுக்கு நலமே விளைந்தது

மற்றோர் செய்தியையும் நாம் எண்ணுதல் வேண்டும். மந்தரையும், கைகேயியும் இராமனுக்கு எதிராகச் செயல் பட்ட காரணத்தால்தானே அவன் சீதையுடனும், இலக் குவனுடனும் கானகம் சென்று, சீதையை இராவணன் கவர்ந்து சென்றதை வியாஜமாகக்கொண்டு, இராவணன் முதலான கொடிய அரக்கர்களைப் போரில் கொன்று உலகுக்கு நலம் புரிய முடிந்தது. திருவள்ளுவர் கூறிய,

*பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த*
*நன்மை பயக்கும் எனின்.* (292)

என்னும் குறட்பாவின் கருத்து சொல்லுக்கு மட்டுமன்றிச் செயலுக்கும் பொருந்துமன்றோ? குற்றமுடையது என்று கருதப்படும் செயலும் சிறந்த நன்மையைப் பயக்குமா யின் குற்றத்தின் நீங்கிப் புனிதமான செயலாக எண் ணப்படுவது முறைதானே?

*தின்மைச் செயலும் சிறப்பினதாம் சீரிய*
*நன்மை பயக்கும் எனின்.*

முன்பு வள்ளுவர் சொல்லுக்குக் கூறிய கருத்தை இப் புதியதோர் குறளின் வாயிலாகச் செயலுக்கும் அமைத்து கொள்வோம் மந்தரையும் கைகேயியும் இராமனுக்கு எதி ராக, அவன் நாட்டை இழந்து காட்டிற்குச் செல்லுமாறு சூழ்ந்த செயலும், பழித்தற்குரியது போல் தோன்றினும், அச்செயல் இராமன் அரக்கர்களைக் கொன்று, மக்களுக் கும் தேவர்களுக்கும் நன்மையை உண்டு பண்ணுவதற் குக் காரணமாக அமைந்தமையால், பயன் நோக்கிப் புண்ணியச் செயலாகப் போற்றப்படத் தக்கதன்றோ?

தசரதர் இராமன் மீது வைத்த பாசவுணர்வு காரண மாக, கேகயருக்கு அளித்த உறுதிமொழியை மீறி, அத னால் அறத்தைக் கைவிட ஆயத்தமாக இருந்த வேளை யில், அவரை அதைச் செய்யாதபடி தடுத்து, அவர் புகழை அழியாதபடி காத்த பெருமை மந்தரைக்கும் கைகேயிக்கும் உண்டு. உண்மையில் அவ்விருவர்க்கும் மன்னவர் நன்றிக்கடன் பட்டவராவர்.

## 14. மந்தரையும் கைகேயியும் மாசுற்றவரா?

### தசரதரின் அவசரச் செயல் ஐயப்பாட்டிற் குரியது

மந்தரை, கைகேயி ஆகிய இவர்கள் செய்திகள் இங்ஙனமாக, இனி மன்னர் செயல்பட்ட முறை பற்றியும் சிந்திப்போம். தசரதர் பரதனையும் சத்துருக்னனையும் கேகய நாட்டிற்கு அனுப்பிவிட்டு, அதன்பின் இராமனது முடிசூட்டு விழாவை நடத்த எண்ணுகிறார். அவர் திடீரென அம் முடிவுக்கு வந்ததற்குக் கூறப்படும் காரணம் விந்தையாக வுள்ளது. அவர் ஒரு நாள் கண்ணாடியைப் பார்த்தபோது தமக்கு நரை தோன்றியிருப்பதைப் பார்த்தாராம். உடனே, தமது மறுமைக் காவனவற்றைச் செய்ய நிச்சயித்து, ஆட்சிப் பொறுப்பை இராமனிடம் அளித்து விட்டு, வானப்பிரஸ்த வாழ்க்கையை மேற்கொள்ளத் துணிகிறார். மன்னர் தமது கருத்தை வசிட்டர் சுமந்திரர்களிடம் சொல்லி, அவர்கள் உடன்பாட்டை அறிவதும், இராமனை அழைத்து அச் செய்தியைக் கூறி அவன் ஒப்புதலைப் பெறுவதும், அரசர்களுக்கு அழைப்பு அனுப்பி அவர்களை வரவழைத்து அவர்களது சம்மதத்தைப் பெறுவதும், சோதிடரை அழைத்து அவர் கூறிய மறுநாளிலேயே முடிசூட்டு விழாவை நடத்தத் துணிவதும், உடனே வசிட்டர், சுமந்திரர் மேற்பார்வையில், விழாவிற்குரிய ஏற்பாடுகளைச் செய்வதும், நகர மக்களுக்கு அச் செய்தியை அறிவித்து, அவர்களைக் கொண்டு நகரை அலங்கரிப்பதும் ஆகிய செயல்களனைத்தும் ஓரிரு நாள்களில் நடைபெறுகின்றன. நெருங்கிய உறவினர்களான கேகயருக்கும், ஜனகருக்கும் அழைப்பு அனுப்பி அறிவித்து, கேகய நாட்டிற்குச் சென்றிருக்கும் பரத சத்துருக்னர்களையும் வரவழைத்து, விழாவை நடத்த வேண்டுமென்று தசரதர் எண்ணவில்லை. அரசியல் முதன்மை வாய்ந்த இராம பட்டாபிஷேக விழாவை நடத்துவதில் இவ்வளவு விரைவு எதற்கு? இராமன் முடிசூடப் போவதைக் கேகயரும் பரதனும் அறிந்து விடக்கூடாது என்பது தசரதரின்

என்னமா? முன்பு பரதனது திருமணச் செய்தியையும், இப்பொழுது இராமனது முடிசூட்டு விழாச் செய்தியையும் கேகயருக்கு அறிவிக்காமல் இருப்பதிலிருந்து, அவரது தொடர்பையே முறித்துவிட வேண்டுமென்று தசரதர் எண்ணுவது போல் தோன்றுகிற தன்றோ? அதற்குக் காரணம் எதுவாக இருக்கும்? இதைக் குறித்துச் சிந்திக்கும்போது, தசரதர் கைகேயியை மணம் செய்த காலத்தில் அவளுக்குப் பிறக்கும் மைந்தனுக்கு ஆட்சியை அளிப்பதாகக் கேகயரிடம் கூறிய வாய்மொழி அவர் நினைவில் பசுமையாக இருக்கிறது என்றும், இராமனது முடிசூட்டு விழாச் செய்தியைக் கேகயருக்கு அறிவித்தால், தசரதர் முன்பு அளித்த வாக்கின்படி கோசல நாட்டரசு தம் மகள் கைகேயியின் மகன் பரதனுக்கே உரிமைப் பட்டது என்று கூறிக் கேகயர் இராமனது முடிசூட்டு விழாவுக்குத் தடைவிளைத்து விடக்கூடாதே என்று தசரதர் அஞ்சுகிறார் என்றும், கருத இடமுண்டன்றோ? கேகயருக்கு அளித்த வாக்கை நிறைவேற்ற வேண்டும் என்ற அறவுணர்வை, இராமனுக்கு முடிசூட்டி அவனை அரசனாக்க வேண்டுமென்ற புத்திரபாசம் வென்றுவிட, தசரதர் கேகயருக்கு அறிவிக்காமலே முடிசூட்டு விழாவை நடத்த எண்ணுகிறார். முடிசூட்டி இராமனை அரசனாக்கி விட்டுத் தாம் தவம் செய்யக் கானகம் சென்றுவிட்டால் பின்னர் பிரச்சினை எழாது என்று தசரதர் கருதினார் போலும்!

தசரதர் இராமனுக்கு முடிசூட்டப் போகும் செய்தியை அவன் மாமனாரான ஜனகருக்கும் அறிவிக்கவில்லையே என்ற வாதம், கேகயருக்கு அவர் அறிவிக்காமல் இருந்ததற்குத் தக்க சமாதானம் ஆகாது. 'கேகயருக்கு மட்டும் அறிவிக்காமல் இருந்துவிட்டார்' என்ற குற்றம் தம்மைச் சாராமல் இருப்பதற்காகவே முன்னெச்சரிக்கையுடன் ஜனகருக்கு அறிவித்தலைத் தவிர்த்தார் என்று எதிர் வாதம் எழக்கூடும். அதுபோலவே, முடிசூட்டு விழாச் செய்தியை வேண்டுமென்றே கைகேயியிடம் முன்னதாக

அறிவிக்காத குற்றத்தை மறைப்பதற்காகவே கோசலை, சுமித்திரை என்போரிடமும் கூறாதிருந்து விடுகிறார் எனக் கருத இடமுண்டு.

தசரதர் கேகயருக்கு அளித்த வரத்தைப் பிறரும் அறிவர்

தசரதர், கைகேயியை மணம் புரிந்த வேளையில், அவள் வயிற்றில் பிறக்கும் மைந்தனுக்கு அரசைக் கொடுப்பதாக அவள் தந்தை கேகயருக்கு அளித்த வாக்குறுதியை இராமனும், நாட்டிலுள்ள மக்களில் சிலரும் அறிந்திருந்தார்கள் என்பதற்குரிய குறிப்புகளைக் கம்பர் தமது நூலில் தந்துள்ளார். அவற்றைக் காண்போம்:

1. இராமன் அரசிழந்து கானகம் செல்வதற்குக் கைகேயி காரணமாக இருந்தாள் என்று அவள்மீது சினம் கொண்டு, போருக்கு ஆயத்தமாக நின்ற இலக்குவனை இராமன் சாந்தப்படுத்தும்போது அவனிடம்,

*பின்குற்றம் மன்னும் பயக்கும் அரசுஎன்றல் பேணேன்*
*முன்கொற்ற மன்னன் 'முடிகொள்க'*
*எனக்கொள்ள மூண்டது*
*என்குற்றம் அன்றோ?*[1] (நகர்நீங்கு. 133)

என்று கூறுகிறான். மன்னர் 'அரசை ஏற்றுக் கொள்' என்று கூறியபோது, அதனை ஏற்பதானால் பின்னால் பல குற்றங்கள் உண்டாகும் என்பதை எண்ணாமல், ஏற்க முன் வந்தது தான் செய்த குற்றம் என்பதை இராமன் உடன்படுகிறான். சாதாரண நிலையில் தசரதர் ஆண்ட அரசை மூத்த மகனாகிய இராமன் ஏற்பதில் எந்தக் குற்றமும் வருவதற்கில்லை. ஆனால் இங்கு இராமன் அரசை ஏற்றால் குற்றம் வரும் என்று கூறுவதன் காரணம், அவ்அரசு கைகேயியின் திருமணக் காலத்தில் தசரதர் கேகயருக்கு அளித்த வாக்கின்படி தசரதருக்குப் பின் பரதனுக்கு உரிமையாகியுள்ளதேயாம். பரதனுக்கு

[1] மன்னும் - மிகுதியாக. பேணேன் - எண்ணித் தவிர்க்காமல். மூண்டது - முன்வந்தது.

உரிமைப்பட்டிருக்கும் நாட்டைத் தந்தை அளித்தார் என்று ஏற்றது தான் செய்த குற்றம் என்பதை இராமன் இப் பொழுது உணர்கிறான். இராமன், தசரதர் அளித்த அரசை ஏற்க முன்வந்தது, கைகேயி முடிசூட்டு விழாவின் தலைநாளிரவில் தசரதரிடம் வரம் கேட்பதற்கு முன்பு நடந்த நிகழ்ச்சியாதலால், இராமன் இங்குக் கருதியது தசரதர் கேகயருக்கு அளித்த வாக்கின்படி பரதனுக்கு உரிமையான அரசேயாம் என்பது துணியப்படும்.

2. மேலும், இராமன் இலக்குவனிடம், முன்பு கூறிய காரணத்தால் மட்டுமன்றி, சம்பராசுர யுத்தத்தின்போது மன்னர் கைகேயிக்கு அளித்த வரத்தாலும் அரசு பரத னுக்கு உரிமையாகியுள்ளதையும் கூறுகிறான்.

> ... *வரம் பெற்றவள்தான் இவ்வையம்*
> *சரதம் உடையாள்; அவள் என்தனித் தாதை செப்பப்*
> *பரதன் பெறுவான்.*[1] (நகர் நீங்கு. 138)

சிற்றன்னை தந்தையிடம் முன்பு வரம் பெற்றதையும், அவள் அதை இப்பொழுது கேட்டு, அரசைப் பெற்றுள் ளதையும், அதனால் அரசு அவளுக்கே மெய்யாக உரிமை யாகியுள்ளதையும், அதை அவளிடமிருந்து பரதன் பெறு வான் என்பதையும் இராமன் இலக்குவனுக்கு விளக்கிக் கூறி அவனை அமைதிப்படுத்துகிறான்.

3. கேகய நாட்டிலிருந்து திரும்பி வந்த பரதன், அரசை ஏற்குமாறு வசிட்டர் கூறிய சொல்லை மறுத்து அண்ணனை அழைத்துவரக் காட்டிற்குச் சென்று, அண் ணனைக் கண்டு, நாட்டிற்கு வந்து முடிசூடி அரசாளும் படி அவனைப் பரிந்து வேண்டுகிறான். ஆனால் பிதிர் வாக்கியத்தைப் பரிபாலிப்பதில் உறுதியுடைய இராமன் பதினான்கு ஆண்டுகளும் பரதனே நாட்டை ஆள

---

[1] வையம் - கோசல நாடு. சரதம் - மெய்யாக. தாதை செப்ப வரம் பெற்றவள் (கைகேயி) இவ்வையம் சரதம் உடையாள்; (அவள் அளிக்கப்) பரதன் பெறுவான்.

வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்குக் கூறிய காரணங்களுள் முக்கியமானது, தசரதர் கேயருக்கு அளித்த வாக்கின்படி அரசு பரதனைச் சார்ந்துள்ளது என்பதாகும்.

*வரனில் உந்தை சொல் மரபினால் உடைத்*
*தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்*
*உரனின் நீ பிறந்து உரிமை யாதலால்*
*அரசு நின்னதே ஆள்க என்னவே.*[1]

(திருவடி சூட்டு. 11)

**இராமன் பரதனிடம், ''உந்தை சொல் மரபினால், நீ பிறந்து உரிமையாதலால், தரணி நின்னதே, ஆள்க'' என்று கூறுவதன் மூலம், தசரதர் கேகயருக்கு அளித்த வாக்கின்படி கைகேயிக்கு மகனாகப் பிறந்த பரதனுக்கே அரசு உரிமையாகியுள்ளதையும், எனவே அவனே அதை ஆள வேண்டும் என்பதையும், அதுவே தந்தையை அறத்தைப் பேணியவராகச் செய்யும் வழி என்பதையும் தெளிவுபடுத்துகிறான்.**

4. அயோத்தி வாசிகளும் தசரதர் முன்பு கேகயனுக்கு அளித்த வாக்கின்படி அரசு கைகேயிக்கு உரிமையாகியுள்ளதை அறிந்திருந்தார்கள் என்பதற்குச் சான்று தருவோம். முடிசூட்டு விழாவன்று காலையில் கைகேயியின் அழைப்பின் பேரில், அவளைக் காணத் தேரிலேறிச் செல்லும் இராமனைக் கண்ட மக்கள்,

*கேகயன் மடந்தை கிளர்ஞாலம் இவன்ஆள*
*ஈகையின் உவந்தனள்.* (கைகேசி சூழ். 97)

என்று கூறுகிறார்கள். கைகேயி தனது ஈகைக் குணத்தால் நாட்டை இராமன் ஆளும்படி உவந்து அளித்தாள் என்று மக்கள் கூறுவதிலிருந்து 1. நாடு கைகேயிக்கே

---

[1] வரனில் - கேகயனுக்கு அளித்த வரமாகிற. உந்தை சொல் - தசரதர் அளித்த உறுதிமொழி. தரணி - கோசல நாடு. இயைந்த - அமைந்த. உரனின் - (ஆளும் உரிமையால் பெற்ற) வலிமையுடன்.

உரிமைப்பட்டது. 2. எனவே இராமனுக்கு அதில் உரிமை இல்லை. 3. கைகேயி தனக்குரிய அரசைத் தனது ஈகைக் குணத்தால் இராமன் ஆளும்படி அளித்துள்ளாள். 4. அதனாலே இராமனது முடிசூட்டு விழா இன்று நடைபெறப் போகிறது என்னும் செய்திகள் விளக்கம் பெறுகின்றன.

நாடு இராமனுக்கு உரிமையாகாமல் கைகேயிக்கு உரிமைப்பட்டிருப்பதாக மக்கள் கூறுவதிலிருந்து, தசரதர் அவளை மணம்புரிந்த காலத்தில் அவள் வயிற்றில் பிறக்கும் மகனுக்கு நாடு உரிமையாம் என்று கேகயருக்கு வாக்களித்ததை அவர்கள் அறிந்திருந்தார்கள் என்பது உய்த்துணரப் படுமன்றோ? மக்கள் கூறும் இச்செய்தி, முடிசூட்டு விழாவின் தலைநாள் நள்ளிரவில் கைகேயி மன்னரிடம் வரங்கேட்டு, அதனால் நாட்டைப் பரதனுக்கு உரிமையாக்கிக் கொண்டதை அவர்கள் அறிவதற்கு முன்பு கூறியது என்பதையும் நாம் நினைதல் வேண்டும்.

தசரதர் கைகேயியை மணம் செய்த காலத்தில் கேகயருக்கு வாக்களித்த நிகழ்ச்சியைக் கம்பர் தமது நூலில் தனியாகப் பாடாமல் மேலே விளக்கிய சில குறிப்புக்கள் வாயிலாகவே புலப்படுத்துகிறார். ஆனால் வான்மீகி முனிவர் அயோத்தியா காண்டம் 107ஆவது சருக்கத்தில் அந்நிகழ்ச்சியைத் தெளிவாகப் பாடுகிறார்.

### இராமன் அரசை ஏற்க மறுக்காத காரணம்

இராமன் இச்செய்தியைச் சுமந்திரரிடமிருந்து அறிந்தான் என்று வான்மீகி கூறுகிறார். அவ்வாறானால் தசரதர் அரசை இராமனுக்கு அளித்தபோது, இராமன் ஏன் மறுத்துரைக்காமல் ஏற்க முன்வந்தான் என்ற கேள்வி எழுமன்றோ? அதற்குப் பின்வருமாறு அமைதி கூறலாம். 1. கேகயர் தசரதரிடம், அவர் முன்பு தமக்கு அளித்த வாக்கை நிறைவேற்றும்படி கூறவில்லை. 2 கேகயர் இராமனிடமும் அன்புடையவர். எனவே,

இராமன் அரசாள்வதை அவர் விரும்பக்கூடும். 3. திருமணக் காலத்தில் மணமக்களின் பெற்றோர்கள் ஒருவருக்கொருவர் செய்து கொள்ளும் உடன்படிக்கை, பின்னர் அவர்களைக் கட்டுப்படுத்தாது என்பது அறநூற் கொள்கை.[1] 4 பரதன் இராமனிடம் வைத்த அன்பால், முன்னோர் மரபின்படி மூத்தவன் ஆள்வதையே விரும்புவான்; நாடு தனக்கு உரிமையாகி இருந்தாலும், தான் அரசனாக வருவதை ஒருபொழுதும் விரும்பமாட்டான். இக்கருத்து இராமன் கானகம் சென்றபின், அரசன் இல்லாதிருந்த நாட்டை ஆளுமாறு வசிட்டர் வற்புறுத்திக் கூறியும், பரதன் மறுத்து இராமனை அழைத்து வரக் காட்டிற்குச் சென்றதிலிருந்து நிரூபணமாகிறது.

தசரதரின் செயலறவு

மற்றோர் முக்கிய செய்தியும் நம் சிந்தனைக்குரியது. தசரதர் இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற தமது எண்ணத்தைத் துணிவோடு, திறம்பட நிறைவேற்ற முயலவில்லை என்றே எண்ண வேண்டியிருக்கிறது. மன்னர் இராமனுக்கு முடிசூட்டும் செய்தியை வசிட்டர், சுமந்திரர், அரசர்கள் முதலியவர்களுடன் ஆலோசித்து, அவர்களது இசைவைப் பெற்று, அதன்பின் இராமனிடம் கூறி, அவனும் அதற்கு இணங்கிய வுடனேயே அவர் அரசை இராமனுக்கு அளித்துவிட்ட நிலையில் உள்ளார். விழா நடைபெற வேண்டியதொன்றே எஞ்சியுள்ளது. அதுவும் பொழுது விடிந்தால் நிறைவேறி விடும்.

இந்த நிலையில், கைகேயி, மன்னரிடம் தான் கேட்கப்போகும் வரங்களைத் தருவதாக வாக்குறுதி பெற்றுக் கொண்டு, பரதனுக்கு முடிசூட்ட வேண்டுமென்று கூறிய

[1] விவாக காலத்திலும், ரதி சமயத்திலும், உயிரை இழக்கும் தருணத்திலும், மித்திரனைக் காப்பாற்றவும், பொய் சொல்லலாம்; அதனால் பாபமில்லை என்பது ஒரு நியாயம். (வான்மீகி ராமா. சரு. 107)

போது, அவர் உடனே அவளிடம் 'அரசை இராமனுக்குத் தருவதாக முன்பே வாக்களித்து விட்டேன்; அவனும் ஏற்றுக் கொண்டு விட்டான்; அதை மீறுவது அறனன்று; எனவே நான் அதை உனக்குக் கொடுக்கும் நிலையில் இல்லை. வேறு ஏதேனும் வரத்தைக் கேள்' என்று சொல்லியிருக்க வேண்டும். அப்படிச் சொல்வதில் பிழை ஏதும் இல்லை. அப்பொழுது அவர் இராமனுக்கு அளித்த வாக்கை நிறைவேற்றி, அறத்தைப் பரிபாலித்த புகழுக்கும் உரியவராவர். தசரதர் கைகேயியிடம் இக்கருத்தை உறுதிபடக் கூறியிருந்தால், இராமனைக் காட்டிற்கு அனுப்புவதாகிய இரண்டாவது வரத்தைக் கேட்கும் தேவை அவளுக்கு எழுந்திராது. ஒருவேளை அதையும் அவள் கேட்டு விட்டால், மூத்த மகனைத் தந்தையிடமிருந்து பிரிக்கக்கூடாது என்று ஸ்மிருதி கூறுவதை எடுத்துக்கூறி அதையும் மறுத்திருக்கலாம். இந்த நியாயத்தை இலக்குவன் சுமந்திரரிடம் கூறித் தசரதரின் செயலைக் கண்டிப்பதாக வான்மீகி தமது நூலில் அயோத்தியா காண்டம் 58 ஆம் சருக்கத்தில் பாடுகிறார்.

கைகேயி தன் உள்ளத்தை மந்தரை அரும்பாடுபட்டுக் கலைப்பது வரைக்கும், இராமன் மீது அன்பும், அறத்தில் பற்றும் உடையவளாகவே இருக்கிறாள். தன்னை மணஞ் செய்த காலத்தில், மன்னர் தன் தந்தைக்களித்த வாக் குறுதியையோ, சம்பராசுர யுத்தத்தில் அவர் தனக்களித்த வரங்களையோ கைகேயி தன் நினைவில் வைத்திருக்க வில்லை. மந்தரை அவற்றை எடுத்துக்கூறிய பிறகே அவற்றை அவள் நினைவு கூர்கிறாள்.

### கம்பரின் பெண்பாத்திரப் படைப்பு

இத்தகைய நல்லியல்புகள் வாய்ந்த கைகேயியை, வான்மீகியைப் பின்பற்றிக் கம்பரும் ஒரு தீய பாத்திரமாக வேறுபடுத்திக் காட்ட வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகி யுள்ளார். இது கம்பரது இயல்புக்கும், ஏனைய பாத்தி ரங்களைப் படைத்துள்ள மரபுக்கும் முற்றிலும் மாறுபட்ட

தாகும். பெண் பாத்திரங்கள் யாவராயினும், முதனூலில் களங்கமுடையவராகக் காணப்படின், அவர்களிடமுள்ள களங்கத்தைப் போக்கி, ஒளிமிக்க கற்பரசிகளாகப் புதிதாகப் படைப்பது கம்பரின் இயல்பாகும் இவ்வுண்மை பின்வரும் சான்றுகளால் விளக்கமெய்தும்.

1) கௌதமரின் பத்தினியாகிய அகலிகையை, முதனூலாசிரியராகிய வான்மீகி இந்திரனுடன் கூடி, மனமறியத் தவறிழைத்த தீய பாத்திரமாகப் படைத்ததற்கு மாறாகக் கம்பர் அவளை நெஞ்சினாற் பிழைப்பிலாதவளாகவும், உணர்விழந்த நிலையில் காமுகனாகிய இந்திரனால் கற்பழிக்கப்பட்ட தீவினையாட்டியாகவும் உருவாக்கி, அவள் மீது படிந்த களங்கத்தைப் போக்கியுள்ளார்.

2) வாலியின் மனைவி தாரை, கணவன் இறந்தபின், சுக்ரீவனுடன் கூடி வாழ்ந்ததாக வான்மீகி முனிவர் படைத்த வரலாற்றைக் கம்பர் மாற்றி, அவளைப் புடம் போட்ட பொன்னாக, இராமனும் தாயென மதித்துப் போற்றும் உயர்ந்த பாத்திரமாக உருவாக்கி விந்தை புரிந்துள்ளார்.

3) இராவணனின் பட்டத்தரசியும், இந்திரசித்தை ஈன்ற அன்னையுமான சிறப்பிற்குரிய மண்டோதரி, இராவணன் மரணமடைந்தபின், தாபத (விதவை) நிலையில் வாழ்ந்ததாக வான்மீகியும், ஒழுக்கத்திற்குச் சிதைவு வரும்படி வாழ்ந்ததாக மற்றோர் செய்தியும்[1] கூறும் முறையைக் கம்பர் முற்றிலுமாக மாற்றி, கணவன் இறந்த அன்றே உயிர்துறந்து, அவனுடன் வானகம் புக்க தலைக் கற்பினளாக உருவாக்கிப் புதியதோர் வரலாற்றைப் படைத்து, அதனால் அவளுக்கு மட்டுமன்றி, பெண்ணுலகிற்கே பெருமை அளித்துள்ளார்.

---

[1] துளசிதாசரின் இராம சரிதமானசம் பக்கம் 47

— அடிக்குறிப்பு.

இவ்வாறு தாம் படைக்கும் பாத்திரங்களின் வாயிலாக அறவுணர்வையும், நல்லொழுக்கத்தையும் வற்புறுத்தி, உலகுக்கு நன்மை செய்வதையே குறிக்கோளாகவுடைய கம்பர், இராவண வதத்தை முன்னிட்டு, இராமனைக் கானகத்திற்கு அனுப்ப வேண்டியதன் இன்றியமையாமையையும், அதைக் கைகேயியைக் கொண்டே நிறைவேற்ற வேண்டிய தேவையையும் உணர்ந்து, கைகேயியை மரபுநெறி பிறழ்ந்த கன்னெஞ்சப் பெண்பாலாகப் படைக்க நேர்ந்ததில் அவரது உள்ளம் மிக்க வேதனை அடைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

கைகேயியை நெறிபிறழச் செய்தவை

கைகேயியின் அறநெறியில் பயின்ற உள்ளத்தைத் திரிப்பதற்குக் கம்பர் சூழ்ச்சித் திறனும், பேச்சுவன்மையும் மிக்க மந்தரையைக் கருவியாகப் பயன்படுத்தினாலும், அவள் ஒருத்தியால் அச்செயல் கைகூடும் என்று அவர் எண்ணவில்லை. மந்தரையின் முயற்சிக்கு, தேவர்களது மாயை, அவர்கள் பெற்ற வரம், அந்தணர் இயற்றிய தவம், அரக்கர் புரிந்த பாவம், தேவர்களும் முனிவர்களும் செய்த நல்வினை—இவையாவும் இணைந்து துணையாக நின்று, கைகேயியை அவளுக்கு இயல்பாகவுள்ள நல்ல அருளைத் துறக்கும்படி செய்துவிட்டன என்று கூறுகிறார்.

*தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி*
*தூய சிந்தையும் திரிந்தது; சூழ்ச்சியின் இமையோர்*
*மாயையும் அவர்பெற்றுள வரமும் உண்மையாலும்*
*ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்.*

(மந்தரை சூழ். 77)

*அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்*
*துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடவாள்*
*இரக்கம் இன்மையால் அன்றோ இவ் உலகங்கள் இராமன்*
*பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றதுவே.*[1]

(ஷை 78)

[1] அல்லவர்-தேவர்களும் முனிவர்களும். துரக்க-செலுத்த. தூமொழி மடவாள் - கைகேயி. பரக்கும் - பரந்த.

மந்தரை கைகேயி இவர்கள் செயலைக் கம்பர் அதன் விளைவை நோக்கி மதிப்பிடுதல்

கம்பர் இங்குக் கைகேயியைக் குறிப்பதற்கு வழங்கும் சொற்களை நாம் சிந்தித்தல் வேண்டும். கைகேயியின் சிந்தையைத் 'தூயசிந்தை' யென்றும், மொழியைத் 'தூமொழி' என்றும் குறிப்பிடுவதால், மனம் மொழி இவற்றின் வழிப்பட்ட அவளது செயலும் தூயதாம் என்பதே கம்பரின் கருத்து என்பது தானே பெறப்படுமன்றோ? பொதுமக்கள் கணிப்பில் இராமன் அரசிழந்து கானகம் செல்வதற்கும், மன்னர் உயிர் துறப்பதற்கும் காரணமாக இருந்த குற்றத்திற்கு ஆளாக இருக்கும் கைகேயியைக் கம்பர் முக்கரணமும் தூய்மையுடையவளாகச் சித்திரிப்பதிலிருந்து, அவர் அவளுடைய செயலின் தன்மையை மேற்போக்காக எண்ணாமல், அதன் விளைவை நோக்கியே மதிப்பிடுகிறார் என்பதும், நாமும் அவ்வாறே அவளை மதிப்பிட வேண்டும் என்று நமக்குக் குறிப்பாக உணர்த்துகிறார் என்பதும் புலனாகின்றன.

கம்பர் கைகேயியின் மீது கொண்ட இரக்கவுணர்வு இவ்வடிகளில் எதிரொலித்தல் காணலாம். தேவர்களின் தவம், திருமாலின் வரம் ஆகிய தெய்விக சக்திகள், மாயையைத் துணையாகக் கொண்டு, பாவச் செயல்களைப் புரிந்த அரக்கர்களை அழிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, அதில் மானிடப் பெண்ணாகிய கைகேயியைக் கருவியாகப் பயன்படுத்தும்போது, கைகேயி பாவம்! தன் நினைவிழந்து, அவை தூண்டிய வழியில் செயல்படுவதையன்றி வேறு யாது செய்ய வல்லள்? இராமன் முடிதுறந்து கானகம் செல்வதற்கும், தசரதர் மரணம் அடைவதற்கும் அவர்கள்பால் அன்புடைய கைகேயி தன்னியல்பில் காரணமல்லள் என்பதும், எனவே, அவள் குறைகூறப்பெறாள் என்பதும், அவள் உள்ளத்தைத் திரித்து, அவளைக் கருவியாகப் பயன்படுத்தி, அச்செயல்களைப் புரிவித்த தெய்வசக்தியே காரணம் என்பதும் மேற்கூறிய கம்பர்

வாக்கிலிருந்து நாம் உய்த்துணரலாம். அரக்கர்களை அழித்தலாகிய நற்கருமத்தில் முனைந்து நின்ற தெய்வ சக்திகள் கைகேயியைத் துணையாகக் கொண்டதும் அவளுக்குப் பெருமை அளிக்குமன்றோ?

வான்மீகியில் கண்ட குறிப்பு

வான்மீகி ராமாயணம் சருக்கம் 64-ல் கூறப்படும் செய்தி இவ்விடத்திற்குப் பொருத்தமாக உள்ளது. அதையும் காண்போம். தசரதர் இராமனைப் பிரிந்த துக்கத்தைத் தாங்கமுடியாமல் கோசலையிடம் பிரலாபித்துக் கொண்டிருக்கிறார். அப்போது அவருக்கு, தமது இளமையில் வேட்டையாடச்சென்று, ஒரு முனிபுத்திரனை அறியாமல் கொன்றதும், முனிவரின் சாபத்திற்குத் தாம் ஆளானதுமாகிய செய்திகள் நினைவுக்கு வருகின்றன. இராமன் கானகம் சென்றது அச்சாபத்தின் பயனேயன்றி வேறன்று என்று அவர் துணிகிறார். அதனுடன் அவர் 'இதுவரையிலும் சாந்தமாகவும், இராமனிடத்தில் விசேஷ அன்பு வைத்தவளாயுமிருந்த கைகேயிக்கு அவனிடத்தில் பகையுணர்வு ஏன் தோன்ற வேண்டும்?' என்ற கருத்தையும் கூறுகிறார். இதிலிருந்து கைகேயி இராமனிடம் இதுகாறும் அன்புடையவளாகவே இருந்தாள் என்னும் உண்மை தசரதர் வாக்காலேயே அரண்செய்யப்படுவதோடு, அவள் தன் இயல்புக்கு மாறாகச் செயல்பட்டதற்குக் கம்பர் கூறிய தேவர்களின் மாயை முதலியவற்றுடன், தசரதர், முனிவரிடம் பெற்ற சாபமும் ஒரு காரணமாக அமைந்தது என்றும் தெரியலாம்.

கைகேயி உலக நன்மைக்காகப் பழி பூணுதல்

உலக நன்மையின் பொருட்டு, இராவணனை வதம் செய்வதற்காக இராமனைக் காட்டிற்கு அனுப்பும் செயலுக்குக் கைகேயியைக் கருவியாகப் பயன்படுத்தும் தேவை எழுந்துள்ளதையும், அத்தேவையை நிறைவேற்றியதன் நிமித்தமாகக் கைகேயி பாராட்டப்படுவதற்குப் பதிலாகப் பழிக்கு ஆளாக நேர்ந்துள்ளதையும் குறித்துக் கம்பருக்

கிருந்த வருத்தமும் மேற்கூறிய அடிகளிலிருந்து புலனா கின்றது. 'கைகேயி இரக்கமற்றவளாக மாறிய காரணத் தாலன்றோ இன்று இராமனது புகழ் உலகில் நிலைத்து நிற்கிறது?' என்று கம்பர் நம்மை வினவுவார் போன்று, இராமன் புகழுக்குக் கைகேயியே காரணம் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். இதுபற்றிச் சிந்திக்கும்போது, இராமன் புகழ் மட்டும் என்ன, தசரதர், பரதன், இலக்குவன், சீதை ஆகியோர் புகழும் கைகேயியின் காரணமாகவே நிலைத்து நிற்கிறது என்ற உண்மை நமக்குப் புலனாகும்.

கைகேயி தெய்வ மாயையிலிருந்து விடுபடுதல்

இராமனைக் கானகத்திற்கு அனுப்பி, அவன் சீதை யுடனும், இலக்குவனுடனும் சித்திரகூட மலையை அடைந்தபின், கைகேயி தெய்விக மாயையின் பிடியி லிருந்து விடுபட்டு விடுகிறாள். கேகய நாட்டிலிருந்து மீண்டு வந்த பரதன் அதற்குக் கருவியாக அமைகிறான். அவன் அயோத்தியில் நடந்த செய்திகளை அறிந்து, கைகேயிமீது கொண்ட வெஞ்சினத்தால் கடுஞ்சொற்களை வழங்கியபோது, அவள் மயக்கம் அகன்று விழித்துக் கொள்ளுகிறாள். தான் செய்த பிழையையும், அதனால் விளைந்த தீமையையும் உணரத் தொடங்கினாள். முன்பு நடந்த செயல்கள் யாவும் கனவில் நடந்த நிகழ்ச்சிகள் போல் அவளுக்குத் தோன்றுகின்றன. இப்பொழுது அவள் நிலைமை முற்றிலும் மாறிவிடுகிறது. இடையில் அகப்பட்டுக்கொண்ட மயக்க நிலையிலிருந்து கரையேறி முன்பிருந்த தெளிந்த நிலைக்கே திரும்பி விடுகிறாள்.

தெய்வம் ஏறப்பெற்ற ஒரு பெண், அதன் தூண்டுத லால் ஆவேசமுற்று ஆடி, அத்தெய்வம் விட்டு நீங்கியபின் முன்னைய சாந்த நிலைக்கு மீண்டு வந்தாற் போலக் கைகேயியும் இமையோர் மாயையின் வயப்பட்டுத் தன் னிலை மறந்து, இராமனை அரசை இழப்பித்துக் காட் டிற்கு அனுப்புவதான செயலை நிறைவேற்றியபின் தனது முன்னைய இயல்பு நிலைக்கே திரும்பிவிடுகிறாள்.

பரதன் இராமனை அழைத்துவரக் கானகத்திற்குப் புறப்பட்டபோது கைகேயியும், இராமனிடம் தான் செய்த பிழைக்கு வருத்தத்தைத் தெரிவிக்கச் செல்பவள் போலப் பரதனுடன் செல்கிறாள். கங்கையைக் கடக்கும்போது குகனுக்கு அவளை இன்னாள் என்று அறிவிக்குமுகமாகப் பரதன் பகர்ந்த வடுவுரையையும் பொறுமையோடு கேட்டுக் கொள்கிறாள்.

## கைகேயி பிற பாத்திரங்களுக்கு ஒளியூட்டும் சாணைக்கல்

மரகதம், மாணிக்கம் முதலிய இரத்தினங்கள் இயல் பிலே ஒளியுடையனவாயினும், சாணையிலிட்டு தீட்டும் போதுதான் அவை பன்மடங்கு ஒளியுடன் பிரகாசிக் கின்றன. அவை அங்ஙனம் ஒளி வீசுவதற்குச் சாணைக் கல் மிக வன்மையுடையதாக இருக்கவேண்டும் அன்றோ? சாணைக்குத் திண்மையில்லாது போனால் இரத்தினங்கள் ஒளிபெறுமா றில்லை. இராமகாதையில் வரும் பாத்திரங் களில் இராமன், தசரதர், பரதன், இலக்குவன், சீதை, குகன் முதலியோர் ஒவ்வொருவரும் இயல்பிலே ஒவ்வொரு வகையில் ஒளியுடைய பாத்திரங்களே யாவர். ஆனால் இராமன் காட்டிற்குச் சென்ற காரணத்தால்தான் அவர்கள் முன்னிலும் அதிகமாக ஒளிபெற்று விளங்குகிறார்கள். அதற்குச் சாணைக் கல்லாகப் பயன்பட்டவள் கைகேயி. தந்தையின் வார்த்தையைக் காப்பாற்றுவதில் இராமனுக் கிருந்த உறுதியும், இராமனையின்றி உயிர்வாழ முடியாத படி தசரதர் அவனிடம் வைத்த பேரன்பும், பரதனது நீதி, நேர்மை, சகோதரவாஞ்சை, துறவுள்ளம் என்பன வும், இலக்குவனின் சகோதர பாசமும், தியாக வாழ்வும், சீதையின் கற்பும், துன்பத்தைப் பொறுக்கும் ஆற்றலும், கைகேயியாகிய சாணைக்கல்லின் உதவியாலேயே பன் மடங்கு ஒளி பெற்றுச் சுடர் விடுகின்றன என்பதை மறுப்பார் யார்?

தசரதர் கைகேயியோடும் பரதனோடும் உறவொழிதல்

ஒளியூட்டுவதன் பொருட்டுத் தேய்க்கப்படும் இரத்தினங்கள் சாணைக் கல்லைத் தாக்கி, அதனை நலியச் செய்வது இயற்கை. அதைப்போல, தசரதர், பரதன், இலக்குவன் ஆகியோர் கைகேயியைக் கடிந்தும், வைதும், வன்சொற் கூறியும் தாக்குகிறார்கள். புத்திர வாஞ்சை யால் துடிக்கும் தசரதர் கைகேயியைப் பார்த்து,

*பெண்ணோ தீயோ மாயாப் பேயோ கொடியாய்!*
(நகர் நீங்கு. 45)

*சுடுவெந் தீயோய்! நின்போல் தீயா ருளரோ?*
(ஷ 46)

*பாவி நீயே வெங்கான் படர்வாய் என்று என்உயிரை*
*ஏவினாயோ அவனும் ஏகினானோ என்றார்.*
(ஷ 47)

மேலும்,

*பண்டே எரிமுன் உன்னைப் பாவி! தேவியாகக்*
*கொண்டே னல்லேன்; வேறோர் கூற்றம்*
*தேடிக் கொண்டேன்.* (ஷ 48)

*பழிக்கு நாணாய் மாணாப் பாவி!* (ஷ 49)

என்கிறார். கைகேயியிடம் கொண்ட வெறுப்பு, பரதன் மீது அவரை ஐயுறவு கொள்ளச் செய்கிறது. கைகேயியின் சூழ்ச்சிக்கு அவனும் உடந்தையாக இருந்தானோ என்று எண்ணுகிறார். ஆற்றாமை விஞ்சிய நிலையில் தசரதர் வசிட்டரிடம்,

*. . . . இவள் என் தாரம் அல்லள் துறந்தேன்*
*மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும்*
*மகனென்று*
*உன்னேன் அவனும் ஆகான் உரிமைக்கு.*
(ஷ 50)

என்று கூறிவிடுகிறார்.

தசரதர் நாகாஸ்திரம் போன்று இக்கடுஞ் சொற்களைப் பிரயோகித்துவிட்டார். இதனால் கைகேயி மட்டுமன்று, அவளுடன் குற்றமற்ற பரதனும் கொடிய தண்டனைக்கு ஆளாகிறான்.

பரதனின் வசைமாரி

கேகய நாட்டிலிருந்து திரும்பிவந்த பரதன், தமையன் கானகம் செல்வதற்கும், தந்தை வானகம் புகுவதற்கும் கைகேயியே காரணமாக இருந்தாள் என்பதை அறிந்தபோது, நெருப்பை உண்டவன்போலத் துடிதுடித்து, அவள்மீது வசைமாரி பொழிகிறான். ''கணவன் உயிர் குடித்த கூற்றமே! மைந்தனைக் காட்டிற்கனுப்பிய பாதகி! உன்னை இக்கணமே இயமபுரிக்கு அனுப்பியிருப்பேன். பெண் கொலைக்கு அஞ்சேன். இராமன் கோபிப்பானே என்று அச்செயல் தவிர்ந்தேன்.

*நீ இனும் இருந்தனை எற்றுகின்றிலேன்*
*ஆய் அவன் முனியும் என்று அஞ்சினேன்.*
(பள்ளிபடை. 72)

*மாயீர் மாயா வன்பழி தந்தீர் .. தாயீரே நீர்?*
(ஷை 76)

*... உன்பாவிக் கும்பி வயிற்றின் இடைவைகித்*
*தோன்றும் தீராப் பாதகம்* (ஷை 86)

என்னைச் சார்ந்துள்ளது.

*உயிர் துறந்தாயாகில் தூயையும் ஆதி*[1] (ஷை 87)

என்றெல்லாம் பழிப்புரை பகர்கிறான். பரதன் கைகேயியைப் பழிக்கும் தோறும் அவனது உள்ளத் தூய்மையும், இராமனிடம் வைத்த சகோதர வாஞ்சையும், அறவுணர்வும் வீறு பெற்று விளங்குகின்றன.

---

[1] ஆய் அவன் - தாய் போன்ற இராமன். தாயீரே நீர் - நீர் எனக்குத் தாய் அல்லை. கும்பிவயிறு - நரகம் போன்ற வயிறு. எற்றுகின்றிலேன் - தாக்கி அழிக்கவில்லை

### இலக்குவனின் வன்சொல்

இலக்குவன் தன் மூத்த தமையனான இராமன் ஆள்வதற்குரிய அரசை, கைகேயி வஞ்சனையால் தன் மகன் பரதனுக்கு உரிமையாக்கிக் கொண்டாள் என்பதை அறிந்தபோது சினங்கொண்டு அவளை,

*வேற்றுக் கொடியாள்* (நகர் நீங்கு. 124)

என்றும்,

*மெய்யைச் சிதைவித்து முறை நீத்த நெஞ்சம்*
*மையிற்கரியாள்.* (ஷை. 127)

என்றும்,

*சிங்கக் குருளைக்கு இடும் தீஞ்சுவை ஊனை நாயின்*
*வெங்கண் சிறுகுட்டனை ஊட்ட விரும்பினாளே.*
(ஷை 117)

என்றும் கூறிக் காய்கிறான்.

இலக்குவனின் இப்பேச்சிலிருந்து அவன் இராமனிடம் வைத்த மிக்க அன்பு துலக்க மெய்துகிறது.

### நகர மாந்தரின் பழிப்புரை

நகர மாந்தர்களும் கையேயியைப் பின்வருமாறு பழித்துக் கூறுகிறார்கள்.

*பெண்கொடு வினைசெயப் பெற்ற நாட்டினில்*
*கண்கொடு பிறத்தலும் கடையென் றார்சிலர்.*
(ஷை 190)

இராமன் மீது அவர்கள் கொண்ட அன்பும், அவன் கானகம் செல்ல நேர்ந்ததில் அவர்களுக் குண்டான வருத்தமும் அவர்கள் கூற்றுக்களி லிருந்து வெளிப்படுகின்றன. கைகேயியைப் போலவே, மந்தரையும் தாக்குதலுக்கு உள்ளாகிறாள். கைகேயிக்குத் துற்புத்தி புகட்டி அவளைக் கெடுத்தவள் மந்தரையே என்பதை அறிந்த சத்துருக்னன் அவளை முனிந்து தாக்கச் செல்கிறான். அவள் அஞ்சி ஓடி, கைகேயியிடம் சென்று மறைகிறாள். இதைக் கண்ட பரதன், ''மந்தரைக்கு ஏதேனும் தீங்கு செய்தால் இராமன் நம்மைக் கோபிப்பான்'' என்று சொல்லி, தம்பியைச் சமாதானப்படுத்துகிறான்.

கைகேயியும் பரதனும் களங்கம் அகலப் பெறுதல்

தசரதர் கைகேயியைத் தம் தாரமல்லள் என்றும், பரதனைத் தம் உரிமைக்கு ஆகான் என்றும் உறவு ஒழிந்து கூறியது அவர்களுக்கு ஒரு களங்கமாகவே அமைந்து விட்டது. இராமன் தன் தாயன்பாலும், சகோதர பாசத்தாலும் அக்களங்கத்தைப் போக்கி அவர்களை முன்போல உற்ற உறவினர்களாகச் செய்து கொள்ள விரும்புகிறான். அதற்குரிய சந்தர்ப்பத்தையும் காவியக் கவிஞர்கள் உருவாக்கியுள்ளனர். இராவண வதம் முடிந்தபின் இராமனை வாழ்த்துவதற்காக விண்ணுலகிலிருந்து இவ்வுலகிற்கு எழுந்தருளிய தசரதரை இராமன், சீதை, இலக்குவன் ஆகியோர் வணங்குகின்றனர். மன்னர், அம்மூவரும் உலக நன்மையின் பொருட்டு ஆற்றிய தியாகத்தைப் பாராட்டி விட்டு, இராமனைத் தன்பால் வரம் கேட்குமாறு கூறுகிறார். இராமன் உடனே,

*தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்*
*தாயும் தம்பியும் ஆம் வரம் தருக.*

(யுத்த. மீட்சி. 129)

என்று தந்தையை வேண்டினான். இராமன் வரம் கேட்கும் முறையே மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. தன்னைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கிய கைகேயியை, தனக்குப் பெரியதோர் பேற்றினை அளித்த உத்தமியாகவே மதித்து அவளை, “என் தெய்வம்” என்று வாய் நிரம்பிய சொற்களால் கூறிப் பெருமைப் படுத்துகிறான். மன்னர் முன்பு கைகேயியையும், பரதனையும் உறவு ஒழிந்தமையால் அவர்களுக்கு உண்டான களங்கத்தை, அவர் தனக்கு அளித்த வரத்தைக் கேட்டு, அவரைக்கொண்டே போக்கித் தூய்மை உடையவர்களாகச் செய்துவிடுகிறான். வரம் கேட்கும்போது கைகேயியையும், பரதனையும் மன்னரின் மனைவியும், மகனும் என்று குறிப்பிடாமல், என் ‘அன்னையும் தம்பியும் ஆம் வரம் தருக’ என்று வினவுவது இராமனது பண்பட்ட உள்ளத்திற்குச் சான்றாகிறது

## கைகேயியின்மீது படிந்த கறை உலகப் புகழ்ச்சிக் குரியது

கைகேயி அரசகுலத்தில் பிறந்து, அதைப் போன்ற அரசகுலத்தில் உலகம் போற்றும் பேரரசர் ஒருவர்க்கு மனைவியாக அமைந்தவள். அழகு, அன்பு, கருணை, கற்பு, பொறுமை, அறவுணர்வு, வீரம், முதலிய பண்புகளுக்கு அவள் உறைவிடமாகத் திகழ்ந்தாள். மேலும், போர்க்களத்தில் கணவன் உயிரைக் காத்த அசாதாரணமான வீர மங்கையும் ஆவள். இவை யாவும் அவள் வரலாற்றின் முற்பகுதிச் செய்திகள்.

இத்தகைய உயர்ந்த பண்புகளையுடைய கைகேயி, நடுவே ஒரு கறை தன்மீது சுமத்தப்படுவதற்கு ஆளாகியுள்ளாள். அதில் அவளுக்கும் மந்தரைக்கும் சம பங்கு உண்டு. தேவர்கள் செய்த தவமும், திருமால் அளித்த வரமும் கைகூடுவதன் பொருட்டு, இராமனைக் காட்டிற்கு அனுப்பும் செயலைச் செய்து தீரவேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகி, அதனால் கைகேயி தன் புகழில் கறை படிந்து, பெருமை இழந்து நிற்கிறாள்.

நடுநிலையுடைய சிந்தனையாளர்கள், கைகேயியின் மீது படிந்த கறை, உலக நன்மையின் பொருட்டு அவள் புரிந்த செயலின் விளைவாகத் தோன்றியதாதலின், அதனைச் சிவபெருமான் மிடற்றிலுள்ள கறைக்கு ஒப்பாகக் கருதுவர். இறைவன் மிடற்றில் விளங்கும் கறை 'மறை நவில் அந்தணரால் நுவலப்படுதல்' (புறநானூறு 1) போலவே, கைகேயி மந்தரை இவர்கள்மீது படிந்த கறையும் உலகோர் புகழ்ச்சிக்கு உரியதாகும்.

இவ்வுண்மையை உணர்ந்து அவர்கள்மீது கொண்டுள்ள பிழையான கருத்தை அகற்றி, அவர்களுக்கு நீதி வழங்குவதே அவர்கள் உலக நன்மையின் பொருட்டுப் புரிந்த பேருதவிக்கு நாம் செய்யும் கைம்மாறாகும்.

---

# 15. ஒப்பாய்வு — முற்பகுதி

## (இராமன் கானகம் செல்வதுவரை)

### இந்திய மொழிகளில் இராமாயணங்கள்

கம்பர் பாடிய இராமாவதாரம், வான்மீகி ராமாயணத்தைப் பின்பற்றி இயற்றப்பட்டதாயினும், கம்பர் அரிய புலமையும், கற்பனை வளமும் மிக்க பெருங்கவிஞராதலால், அவர் முதனூலின் அமைப்பை முற்றிலுமாகத் தழுவித் தமது நூலை இயற்ற மாட்டாதவராய், கதையமைப்பு, நிகழ்ச்சிகளைச்சித்திரித்தல், பாத்திரப் படைப்பு, வர்ணனைகள் முதலியவற்றில் பல மாறுதல்களைப் புகுத்தி, தமது தனிப்பண்பும், கலை வண்ணமும் புலப்படும் வகையில் ஒரு புதிய படைப்பையே உருவாக்கித் தமிழுலகிற்கு உதவியுள்ளார். கம்பரைப் போலவே பிற இந்திய மொழிகளிலுமுள்ள வான்மீகியின் வழிநூலாசிரியர்களும் தமது படைப்புக்களில் பல மாறுதல்களைச் செய்து, தமது புலமையை வெளிப்படுத்தியுள்ளமையை அந்நூல்களைக் கற்றார் அறிவர். இம் மாறுதல்களால் அவர்கள் நூல்களுக்கு ஏற்பட்டுள்ள சிறப்புக்களையும், காவிய இன்பம், கவிதை நயங்களையும் ஒப்பு நோக்கிச் சிந்திப்பது, அறிவு வளர்ச்சிக்கும், கலை நுகர்ச்சிக்கும் தூண்டுதலாகவும், இன்பப் பொழுதுபோக்காகவும் அமையும் என்பதில் ஐயமில்லை.

### ஒப்பாய்வுக்கு எடுத்துக்கொண்ட இராமாயணங்கள்

இந்திய மொழிகள் அனைத்திலுமுள்ள இராமாயணங்களைப் பன்மொழி வல்லுநர்கள் ஒரு குழுவினராக இருந்து, பல கோணங்களில் ஆராய்வது பயனுடைய முயற்சியாகும். இங்குக் கம்பரும், வான்மீகரும் இயற்றிய நூல்களுடன், ஏனைய இந்திய மொழிகளின் பிரதிநிதித்துவ முறையில் துளசிதாசர் இந்தி மொழியில் இயற்றிய, புகழ்மிக்க 'இராம சரித மானசம்' என்ற நூலும் ஒப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. அவற்றிலும்

அயோத்தியா காண்டம் ஒன்றில் வரும் செய்திகள் மட்டுமே இப்பொழுதைய நமது சிந்தனைக்கு உரியன. அவற்றையும் முற்ற விளக்கப்புகின் அதுவே ஒரு தனி நூலாக விரியக்கூடுமாதலின் முக்கிய செய்திகள் மட்டுமே இங்கு ஒப்பு நோக்கப்படுகின்றன.

கம்பர் அயோத்தியா காண்டத்தில் கூறும் செய்திகளை இந்நூலின் முந்தின அதிகாரங்களிலிருந்து நாம் தெரிந்து கொள்வதைப்போல, வான்மீகியும், துளசிதாசரும் அச்செய்திகளைக் கூறும் முறையை இந்நூலிலிருந்து அறிதற்கு வாய்ப்பில்லையாதலால், ஒப்பாய்வின் தேவைக்கேற்ப அவ்விரு நூல்களிலுமுள்ள செய்திகள் சற்று விரிவாக இவ்வதிகாரத்தில் கூறப்படுகின்றன.

வான்மீகியின் புலமை வளம்

வான்மீகி ராமாயணத்தின் பெருமையையும், இராம நாமத்தின் மகிமையையும் பற்றிய செய்தி ஒன்று வழங்குகிறது. வான்மீகி முனிவர் மக்கள் உய்யும் பொருட்டுத் தாம் பாடிய இராமனது வரலாற்றை நூறுகோடி சுலோகங்களாகப் பாடினார். அதன் சிறப்பை உணர்ந்த மூவுலகத்தவரும் அந்நூலைத் தமக்கு அளிக்குமாறு வான்மீகியை வேண்டினார்கள் முனிவர் அந்நூலை மூன்றாகப் பகுத்து, ஒவ்வோர் உலகுக்கும் ஒவ்வொரு பங்கை அளித்தபோது, 32 அசைகளையுடைய ஒரு சுலோகம் எஞ்சியது. அதையும் அவர் பத்து அசைகள் வீதம் பகிர்ந்தளித்த பின்னர் மிஞ்சிய இரண்டு அசைகளே ரா-ம என்பன. அவற்றை அவர் மூவுலகத்தாருக்கும் பொதுவாக உரிமையாகும்படி அளித்தார் என்பது அச்செய்தியாகும்.

வான்மீகி ராமாயணம் ஆழ்ந்தகன்ற கடல் போன்றது; வான்மீகியின் பெரும் புலமையை அந்நூலில் தொட்ட தொட்ட இடந்தோறும் உணரலாம். எந்தச் செய்தியையும் விரிவாகப் பாடுவது அவரது இயல்பாகும்.

சீதை தன்னையும் கானகத்திற்கு அழைத்துச் செல்லுமாறு இராமனிடம் வேண்டிக்கொள்ளும் செய்தியைக் கம்பர் ஒன்பது பாடல்களில் பாடியிருக்க வான்மீகி அதனை நான்கு சருக்கங்களில் பாடுகிறார். கம்பரது அயோத்தியா காண்டத்தில் இடம்பெறும் முனிவர்கள், வசிட்டரும் பரத்வாசருமேயாக, வான்மீகியோ, வசிட்டர், வாமதேவர், விசுவாமித்திரர், கௌதமர், மார்க்கண்டேயர் மௌத் கல்யர், காசியபர், காத்தியாயனர், ஜாபாலி ஆகியோரையும், தம்மையும் கதையோடு தொடர்புபடுத்திப் பாடுகிறார். பரதன் கனாக்கண்டது, கைகேயியின் அன்னையின் பிடிவாத குணத்திற்காகக் கேகயவரசர் அவளை நாட்டைவிட்டுத் துரத்தியது போன்ற கம்பர் கூறாத பல செய்திகளை வான்மீகி விளக்கிப் பாடுகிறார் பரதனை அழைத்து வருமாறு வசிட்டர் கேகய நாட்டிற்கு அனுப்பிய தூதுவர் நால்வரின் பெயர்கள், தசரதரின் ஈமத்தில் அடுக்கிய விறகின் வகைகள் போன்ற நுணுக்கமான செய்திகளையும் வான்மீகி விடாமல் கூறுகிறார். அவரது இராமாயணத்தைக் கற்பவர்கள் அவரது அறிவின் பரப்பைக் கண்டு வியவாமல் இரார்.

கம்பரின் காவிய நயம்

கம்பரின் சிறப்பு, காவிய நயங்கள் பலவும் அமைந்து வரப் பாடுவதில் அடங்கியுள்ளது. குகன் - பரதன் சந்திப்பை அவர் நாடகப் பாங்கில் கற்பவர்கள் வியக்கும் படி மிக அற்புதமாகப் பாடியுள்ளார். கானகத்தில் சென்ற இராமனும் சீதையும் அங்கு இயற்கைத் தாவரங்களையும் விலங்குகளையும் கண்டு, அவற்றைத் தம்முள் ஒவ்வொருவர் உறுப்போடும் உவமித்து மகிழும் இன்பச் செய்தியை வர்ணிக்கும் பாடல்கள் கற்பவர் நெஞ்சை விட்டகல்வதில்லை.

துளசிதாசரின் பக்திச்சுவை

துளசிதாசர் பாடல்களில் பக்திச்சுவை நிரம்பியுள்ளதை அவர் நூலைக் கற்றார் அறிவர். ஆன்மிகத்தில்

வசிட்ட முனிவருக்கு நிகராக, மிகவுயர்ந்த நிலையிலிருக்கும் பரத்துவாசமுனிவர் இராமனைச் சந்தித்தபோது, அவர் இராமன் முன்னிலையில் தாம் கடவுளின் முன் இருப்பதாக உணர்வதாகவும், தாம் இதுகாறும் செய்த தவம் இப்பொழுதுதான் பயன் விளைத்ததாகவும் கூறித் தமக்கு அருள் செய்யும்படி இராமனை வேண்டுவதாகத் துளசிதாசர் பாடுவதில் அவர் இராமனிடம் வைக்கும் கரைகாணாத பக்தி எதிரொலிப்பதைக் காணலாம். அவரது பக்தி இராமனின் அளவாக நிற்கவில்லை. சிவன், பார்வதி, விநாயகர் போன்ற சைவக் கடவுளர்கள்மீது வைக்கும் பக்தியும் நூலில் இடம் பெறுகிறது. கானகத்திற்குப் புறப்பட்ட இராமன், தேரிலேறும்போது, சிவபெருமானை வழிபட்டதாகவும், பிரயாகையில் நீராடும்போது சிவபிரானையும், கணபதியையும் வணங்கியதாகவும் துளசிதாசர் பாடுவதிலிருந்து, கடவுள் வழிபாட்டில் அவரது பரந்த நோக்கம் துலக்கமெய்துகிறது.

இங்ஙனமாக, வான்மீகியில் புலமை வளமும், கம்பரில் காவியச் சிறப்பும், துளசிதாசரில் பக்திச் சுவையும் விஞ்சியிருப்பதாக அந்நூல்களைக் கற்ற அறிஞர்கள் வியந்து போற்றுகிறார்கள். இனி, மூன்று நூல்களிலும் காணப்படும் முக்கிய செய்திகளை ஒப்பாய்வு நோக்கில் காண்போம்.

1 தசரதர் கேகயருக்கு அளித்த உறுதிமொழி

வான்மீகி: தசரதர் கைகேயியை மணம் வேட்டு, அவள் தந்தை அசுவபதியை அணுகியபோது, அவர் தம் மகள் வயிற்றில் பிறக்கும் மைந்தனுக்கு அரசை அளிக்க வேண்டும் என்றோர் நிபந்தனையைக் கூற, தசரதர் அதற்குச் சம்மதித்துக் கைகேயியை மணம்புரிகிறார். இச்செய்தி வான்மீகி ராமாயணம் அயோத்தியா காண்டம், சருக்கம் 107-ல் கூறப்படுகிறது

கம்பர்: இச் செய்தி கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் கைகேசி சூழ்வினைப் படலம் செய்யுள் 97-லும்

நகர்நீங்கு படலம் செய்யுள் 133, 138-லும் திருவடி சூட்டு படலம் செய்யுள் 111-லும் குறிப்பாகக் கூறப்படுகிறது. இதன் விரிவை இந்நூல் 14-ஆம் அதிகாரத்தில் காணலாம்.

துளசிதாசர்: ராமசரிதமானசத்தில் இச்செய்தி கூறப் பட்டுள்ளதாகத் தெரியவில்லை.

2. தசரதர் இராமனுக்கு முடிசூட்ட எண்ணுதல்

வால்மீகி: தசரதர் தமது முதுமையையும், அண்மை யில் கண்ட அபசகுனங்களையும் எண்ணி, இராமனுக்கு முடிசூட்டிவிட்டு ஓய்வுபெற விரும்புகிறார். அதுபற்றி வசிட்டர், சுமந்திரர், அந்தணர், நகர மாந்தர்கள், பிற நாட்டரசர்கள் இவர்களுடன் ஆலோசிக்கிறார். இந் நிகழ்ச்சிக்கு அவர் அசுவபதியையும் ஜனகரையும் அழைக்கவில்லை. அவையோரிடம் இராமனது பண்பு களைக் கூறும்போது அவன் பல போர்களை வென்ற செய்தியைக் குறிப்பிடுகிறார்.

இராமன் புரிந்ததாகக் கூறப்படும் போர்நிகழ்ச்சிகள்

இராமன் தனியாகவும், இலக்குவனுடன் சேர்ந்தும் பல பகைவர்களை வென்று அவர்கள் நகரங்களைப் பிடித்ததாகவும், தண்டகாரண்யத்திலுள்ள வைஜயந்தி நகரை முற்றுகையிட்டு, அதை ஆண்டுவந்த சம்பரன் என்ற அசுரனைக் கொன்றதாகவும் வான்மீகி (சரு. 1. 2. 44) பாடுகிறார். இச்செய்தி பல கேள்விகளுக்கு இடமளிக்கிறது. அறவுணர்வுடைய இராமன் பிற அரசர் களின் மண்ணில் ஆசை வைத்துப் போர்புரியச் செல் வானா? இனி அவன் தற்காப்புக்காகப் போர் நிகழ்த்தி னான் எனலும் ஆகாது ஏனெனில், நிகரற்ற வலிமை யுடைய தசரதர் ஆளுகிற, 'யுத்தம் நிகழக்கூடாத இடம்' என்ற பொருளில் வழங்கும் அயோத்தியின்மீது தண் டெடுக்கத் துணிவார் எவரும் இரார். முன்பு இந்திரன் பொருட்டு, கைகேயி துணையுடன் தசரதர் போருக்குச்

சென்று வலியழித்த சம்பரனுக்கு, இராமன் கொன்றதாகக் கூறப்படும் சம்பரன் வேறானவனா? அல்லது சம்பரன் என்ற பெயருடைய அசுரர்கள் பலர் இருந்தார்களா? அல்லது தசரதர் சம்பரனை வென்று ஈட்டிய புகழ், அவர் மைந்தனாகிய இராமன் மீது ஏற்றிக் கூறப்படுகிறதா? இராமன் தான் புரிந்த கன்னிப் போரில் தாடகையை வதம் செய்ததை யடுத்து, அவனது திருமணமும், அதைத் தொடர்ந்து முடிசூட்டு விழாவிற்கான ஏற்பாடுகளும் நடைபெறுவதற்கிடையில் அவன் போர் புரியச் செல்வதற்கு வாய்ப்பேது? (கம்பரும் துளசிதாசரும் இச்செய்தியைப் பாடவில்லை)

கம்பர்: தசரதர் ஒருநாள் கண்ணாடியைப் பார்த்த போது காதினடியில் ஒரு முடி நரைத்திருப்பதைக் காண்கின்றார். அப்போது அவருக்கு இராமனுக்கு முடிசூட்டி விட்டு, வானப்பிரஸ்த வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது. (இச்செய்தியை வான்மீகி பாடவில்லை; துளசி பாடுகிறார்.) உடனே அமைச்சரவையைக் கூட்டி ஆலோசிக்கிறார். அவர்களது உடன்பாட்டைப் பெற்றதும், அதை இராமனுக்குக் கூறுகிறார். இராமன் இணங்கிய பின்னர், பிறநாட்டு அரசர்களை அழைத்து அச்செய்தியை அறிவிக்கிறார்.

துளசிதாசர்: அயல்நாட்டு வேந்தர்களை அழைத்து ஆலோசித்த செய்தியைத் துளசியும் பாடுகிறார்.

### 3. முடிசூட்டு விழாவிற்கு நாள் நிச்சயித்தல்

கம்பர்: தசரதர் சோதிடர்களை அழைத்து, முடிசூட்டு விழாவிற்கோர் நல்ல நாளைக் கணித்துச் சொல்லும்படி கூறுகிறார். அவர்கள் மறுநாளே சிறந்த நாள் என்று கூற, மன்னர் அந்நாளிலேயே விழாவை நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறார். (தசரதர் கணிதமாக்களை அழைத்து நாள் பார்த்த செய்தியை வான்மீகியும், துளசியும் பாடவில்லை.)

## 4. இராமனுக்கு முடிசூட்டப்போகும் செய்தியைத் தசரதர் அவனிடம் அறிவித்தல்

வான்மீகி: தசரதர் விழாவிற்கான எல்லா ஏற்பாடு களையும் செய்துவிட்டு, அச்செய்தியை இராமனுக்கு அறி விப்பதற்காக, சுமந்திரரை அனுப்பி, அவனை அழைத்து வரச்செய்து, அவனுக்குத் தாம் நாளையே முடிசூட்ட நிச்சயித்திருப்பதைக் கூறுகிறார். அவ்வேளையில் அரசர் கள் அறியவேண்டிய அரச நீதிகளையும் அவனுக்குத் தாமே உபதேசிக்கிறார். இதன்பின் இராமன் தந்தை யிடம் விடைபெற்றுத் தன் மாளிகையை அடைகிறான். சிறிது நேரத்தில் தசரதர் சுமந்திரரை அனுப்பி இராமனை மீண்டும் அழைத்துவரச் செய்கிறார். வந்த இராமனிடம் மன்னர் தமக்குத் தீய கனாக்களும், சகுனங்களும் நேர் வனவாகவும், அதனால் தமக்குத் தீங்குகளோ மரணமோ நிகழக்கூடுமென்றும் கூறுகிறார். பரதனைக் குறித்து, அவன் நல்லவனாயினும் சூழ்நிலையால் அவன் மனம் திரியக்கூடுமென்றும், எனவே கேகய நாட்டிலிருந்து பரதன் திரும்பி வருமுன், நாளையே பட்டாபிஷே கத்தை நடத்தப் போவதாகவும் சொல்லுகிறார். இராமன் மகிழ்ச்சியோடு அன்னையிடம் சென்று அச் செய்தியை அறிவிக்கிறான். அங்கிருந்த இலக்குவனிடம் அவனது நன்மைக்காகவே ஆட்சிப் பேறு தனக்கு வாய்த் துள்ளதாகக் கூறி, தனது மகிழ்ச்சியையும், தான் தம்பி யிடம் வைக்கும் அன்பையும் வெளிப்படுத்துகிறான்.

(தசரதர் பரதனைப் பற்றி இவ்வாறு கூறுவதற்கு அவன் திரும்பி வந்துவிட்டால், கைகேயியும் அவனும் சூழ்ச்சி செய்து, முன்பு தாம் கேகயருக்கு அளித்த வாக் குறுதியின்படி அரசைப் பரதனுக்கே அளிக்குமாறு தம்மை வற்புறுத்தி, அதனால் இராமனுக்கு முடிசூட்ட முடியாமல் போய்விடுமோ என்று அவர் மனம் சஞ்சலமடைவதே காரணமாக வேண்டுமன்றோ?)

(தசரதர் இராமனை இரண்டாம் முறையாக அழைத்து, பரதனைப்பற்றிக் குறையாகக் கூறிய செய்தியைக் கம்பரும் துளசியும் பாடவில்லை.)

தசரதர் வேண்டிக்கொண்டபடி, வசிட்டர் இராமனின் மாளிகைக்குச் சென்று, அவனையும், சீதையையும் அன்று உபவாசம் இருக்கும்படி கூறுகிறார்.

கம்பர்: அமைச்சரவையின் அங்கீகாரத்தைப் பெற்ற தசரதர் சுமந்திரரை அனுப்பி, இராமனை அழைத்து வரச்செய்து, அவனிடம் தமது முதுமையையும், தாம் நெடுங்காலம் ஆண்டு அலுத்ததையும் கூறி, இராமன் அரசையேற்றுத் தமக்கு ஆறுதல் அளிக்குமாறு பரிந்து வேண்டுகிறார். அரசாட்சியின் பொறுப்பை உணர்ந்த இராமன் அதை ஏற்பதில் மகிழ்ச்சி யடையவில்லை யாயினும், தந்தையின் சொல்லை நிறைவேற்றுவதைத் தனது கடனாக எண்ணி அதற்கு இணங்குகிறான்.

துளசிதாசர்: இராமனுக்கு முடிசூட்டப்போகும் செய்தியைத் தசரதர் அவனிடம் அறிவிக்கவில்லை. வசிட்ட முனிவர் வாயிலாக அவன் அதை அறிகிறான். அரசனாக வருவதில் இராமன் மகிழ்ச்சி அடைகிறான். ஆனால், அவ்வேளையில் பரதன் அயோத்தியில் இல்லையே என்ற வருத்தமும் அவனை வாட்டுகிறது.

5 அரசியல் ஞானத்தை இராமனுக்கு உபதேசித்தல்

அரசனாக முடிசூடப்போகும் இராமன் அறியவேண்டிய அரசியல் ஞானத்தை அவனுக்குத் தசரதர் அளித்ததாக வான்மீகியும், வசிட்டர் அளித்ததாகக் கம்பர், துளசி ஆகிய இருவரும் பாடுகிறார்கள்.

6. இராமன் முடிசூடப் போகும் செய்தியைக் கோசலை அறிதல்

வான்மீகி: தசரதர் இராமனுக்கு முடிசூடப் போகும் செய்தியை, இராமனின் நண்பர்கள் முதலில் தெரிந்து

கோசலையிடம் சென்று அறிவிக்கிறார்கள். கோசலை அவர்களுக்குப் பரிசு வழங்குகிறாள். சிறிது நேரத்தில் இராமனும் தந்தையிடமிருந்து விடை பெற்று அன்னையைக் காண வருகிறான். அவள் அப்போது மகா விஷ்ணுவை வழிபட்டுக் கொண்டிருக்கிறாள். அவளுடன் சுமித்திரையும், சீதையும், இலக்குவனும் இருக்கிறார்கள். கோசலை இராமனைச் சிரஞ்சீவியாக இருக்கும்படி வாழ்த்தி விட்டு, இராமன் ஆட்சியின்போது தனது (கோசலையின்) சுற்றத்தையும் சுமித்திரையின் சுற்றத்தையும் மகிழ்விக்கும்படி கூறுகிறாள். (கைகேயியின் சுற்றத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை.)

*கம்பர்:* மங்கையர் நால்வர் இராமன் முடிசூடப் போகும் செய்தியைக் கோசலைக்கு அறிவிக்கிறார்கள். இராமன் அரசனாக வருவதில் அவளுக்குண்டான மகிழ்ச்சியைத் தன் கணவர் அரசைத் துறக்க நேருமே என்பதால் எழுந்த துக்கம் அகற்றிவிடுகிறது. கோசலை செய்தி சொன்னவர்களுக்குப் பரிசும், அந்தணர்களுக்குத் தானமும் வழங்கிவிட்டு, சுமித்திரையுடன் திருமால் கோயிலுக்குச் சென்று, இராமனின் நலம் வேண்டிப் பிரார்த்திக்கிறாள். மாளிகைக்கு வந்தபின் நோன்பு நோற்கிறாள்.

*துளசிதாசர்:* கோசலை இராமன் முடிசூடப்போகும் செய்தியை அறிகிறாள். அறிவித்தது யார் என்பது கூறப்படவில்லை. அரண்மனைக்குள் மகிழ்ச்சி ஆரவாரம் நிகழ்கிறது கோசலை அந்தணர்களை அழைத்து வெகுமதி அளிக்கிறாள். பின்னர்த் தனது இஷ்ட தேவதையை வழிபடுகிறாள்.

### 7. தெய்விக சக்திகளின் தலையீடு

*வான்மீகி:* இராமன் கானகம் செல்வதற்கு மந்தரை, கைகேயி இவர்களைவிட, அறக்கடவுளும், ஈஸ்வரனுமே காரணமாவர் என்ற கருத்தை இராமனின் கூற்றாக வான்மீகி கூறுகிறார். (சரு. 22)

கம்பர்: தேவர்கள் இயற்றிய அறமும், அரக்கர்கள் செய்த பாவமும் கைகேயியின் மனம் திரிவதற்கும், இராமன் கானகம் செல்வதற்கும் காரணங்களாயின என்கிறார். (மந்தரை சூழ். 78)

துளசிதாசர்: தேவர்களின் வேண்டுகோளின்படி சாரதாதேவி (சரஸ்வதி) மந்தரையை அணுகி, அவள் உள்ளத்தைக் கலைத்து விடுகிறாள். உள்ளம் திரிந்த மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயி மனம் மாறுபட்டு, மன்னரிடம் இராமன் நாட்டை இழந்து காட்டிற்குச் செல்லும்படி வரம் பெற்று, அதை நிறைவேற்றி விடுகிறாள்.

3. மந்தரையைக் குறித்த செய்திகள்

வான்மீகி: மந்தரை தாய் தந்தை இன்னார் என்று அறியப்படாதவள்; கைகேயியுடன் நெடுங்காலத் தொடர்புடையவள்; கேகய நாட்டிலிருந்து வந்த வேலைக்காரி; முதுகு கூனாக அமைந்தவள்.

கம்பர்: மந்தரை தன் முதுகைப் போன்று உள்ளமும் கோடியவள். இராமன் குழந்தைப் பருவத்தில் விளையாட்டாக மண் உண்டையை அவள் முதுகில் அடித்ததை மறவாது வஞ்சம் தீர்க்கக் காத்திருப்பவள். கூரிய அறிவு, சூழ்ச்சித் திறன், சொல்வன்மை, செயலாற்றல், ஆகிய பண்புகள் அமையப் பெற்றவள். தனக்கென உறவினர் யாரும் இன்மையால் கைகேயியிடமும், பரதனிடமும் அளவிறந்த பற்று வைப்பவள். கைகேயியின் திருமணம் முதலாக அவளைக் குறித்த அனைத்துச் செய்திகளையும் அறிந்தவள்.

துளசிதாசர்: மந்தரை கைகேயியின் மாளிகையில் ஒரு வேலைக்காரி. ஒற்றைக் கண், முடம், கூன்முதுகு ஆகிய உடற்குறைகளோடு, மந்தபுத்தி, தீயசிந்தை, இழிபிறப்பு ஆகிய தகுதிக் குறைகளும் உடையவள். (கம்பரின் மந்தரைக்கு மாறான அமைப்பை இங்குக் காண்கின்றோம்.) கைகேயி அவளைத் 'துடுக்கான சிறுமி' என

அழைப்பதிலிருந்து, துளசி அவளை ஓர் இளம் பெண்ணாகவே காண்கின்றார் என்பது புலனாகிறது.

## 9. கைகேயி மந்தரைக்கு அரதன மாலையைப் பரிசளித்தல்

இராமன்மீது பேரன்பும், தூயவுள்ளமும் கொண்ட கைகேயி, இராமன் முடிசூடப்போகும் நற்செய்தியைத் தனக்கு அறிவித்த மந்தரைக்கு அரதன மாலையைப் பரிசளிக்கும் செய்தியை மூன்று காவியப் புலவர்களும் பாடுகின்றனர்

## 10. மந்தரை கைகேயியின் மனத்தைக் கலைத்தல்

வான்மிகி: மந்தரை, கைகேயிமீது வைத்த பேரன்பால் அவள் மகன் பரதனே அரசனாக வரவேண்டும் என்று விரும்பி, அதன் பொருட்டு இராமனுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறாள்.

இராமன், கோசலை, தசரதர் ஆகிய மூவர் மீதும், இல்லாத குறைகளை மந்தரை கைகேயிக்குக் கூறி, அவள் உள்ளத்தைக் கலைக்க முயல்கிறாள். நான்கு மக்களுக்கும் உரிமைப்பட்ட நாட்டைத் தசரதர் பரதனில்லாத வேளையில் இராமன் ஒருவனுக்கு அளிக்கப்போவதால் அவரை வஞ்சகர் என்று பழிக்கிறாள். பரதனை முன்னெச்சரிக்கையாகவே கேகய நாட்டிற்கு அனுப்பியதாகவும் கூறுகிறாள். இராமன் அரசனாக வரின் கைகேயியும், தானும் கோசலைக்கு அடிமையாக நேரும் என்று கூறுகிறாள். இராமன் தன் ஆட்சியைப் பலப்படுத்துவதற்காகப் பரதனை நாட்டைவிட்டுத் துரத்தவோ கொல்லவோ செய்வான் என்று சொல்லிக் கைகேயியின் உள்ளத்தில் பரதன் மீது இரக்கத்தையும், இராமன் மீது வெறுப்பையும் உண்டுபண்ணுகிறாள் இராமன் 100 வருடம் ஆட்சி புரிந்தபின் பரதனை ஆளச்செய்வான் என்று கைகேயி கூறிய கருத்தை மந்தரை மறுத்து, 'இராமனுக்குப் பின் அவன் மக்களே ஆள்வார்கள்; பரதன் அரசனாக வருவதற்கு வாய்ப்பே இல்லையென்று கூறிக் கைகேயியின்

உள்ளத்தில் ஓர் ஏமாற்ற உணர்வை உண்டுபண்ணு கிறாள்.

கம்பர்: இராமன் முடிசூட்டப் போவதை மந்தரை அறிந்ததும், அவளுக்கு முன்பு இராமன் குழந்தையாக இருந்தபோது, தன் கூன்முதுகில் உண்டை மண்ணை வில்லால் அடித்த செய்தி நினைவுக்கு வருகிறது. உடனே அவளது தீய உள்ளத்தில், இராமனை முடிசூடாதபடி தடுத்து, 14 வருடம் காட்டிற்கு அனுப்பிப் பழிவாங்கும் சூழ்ச்சி உருவாகிறது. இராமன் முடிசூடப் போகும் நற் செய்தியைத் தான் கூறக்கேட்டுத் தனக்கு முத்துமாலை யைப் பரிசளித்தவளும், பின்னர்த் தான் கூறிய தீய சொற்களைக் கேட்டு வெகுண்டு தன் நாக்கை அறுக்க வேண்டுமென்று கடிந்து கூறியவளுமான தூய உள்ளம் படைத்த கைகேயியை, மந்தரை தன் பேச்சு வன்மையால், அவள் உள்ளத்தில் மகன்மைப்பாசம், தன்மான உணர்வு, பிறந்த இடத்துப்பாசம் ஆகிய உணர்ச்சிகளைத் தூண்டி, அதனைத் திரித்துத் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறாள். (மந்தரையின் நாக்கை அறுக்க வேண்டு மென்று கைகேயி கூறியதை வான்மீகி பாடவில்லை. குழந்தை இராமன் கூனியை மண் உண்டையால் அடித்த செய்தியையும், அதனால் அவளுக்குப் பழிவாங்கும் சிந்தை இருந்ததையும் வான்மீகியோ துளசியோ பாடவில்லை.)

துளசிதாசர்: இராமன் முடிசூடப்போவதை அறிந்த தேவர்கள் அதைத் தடுத்து, அவனைக் காட்டிற்கு அனுப்புவதற்காக, சாரதாதேவி (சரஸ்வதி)யின் உதவியை நாடி அவளை அணுகுகிறார்கள். சாரதாதேவி மிக்க வருத்தத்தோடு அவர்கள் விருப்பத்திற்கு இணங்குகிறாள். அதன்படி அவள் மந்தரையின் அறிவில் தடுமாற்றத்தை உண்டுபண்ணுகிறாள் மனம் விகாரமுற்றிருக்கும் மந்தரை நகரை அலங்கரிக்கும் மக்களை உசாவி, இராமனுக்கு நாளை முடிசூட்டு விழா நடைபெறப்போவதை அறிகி றாள். அழுதுகொண்டே கைகேயியை அணுகி, விழா

ஏற்பாடுகள் 2 வாரங்களாக நடைபெற்றுக் கொண்டிருப் பதாக ஒரு பொய்யைச் சொல்லி, பரதன் இல்லாத வேளையில் மன்னர் விழாவை எடுப்பதால் அவரை வஞ் சகர், தீயர் என்றும், கோசலையைச் செருக்குமிக்கவள் என்றும் பழிக்கிறாள். கைகேயி அவளிடம், "சும்மா இரு. குடும்பத்தில் பகையை வளர்க்காதே. மீறி நடந்தால் உன் நாக்கை இழுத்துவிடுவேன். இராமன் மூத்த புதல்வன். சூரியகுல மரபுப்படி அவன் அரசாள்வதே முறை. இராமன் எனது உயிரினும் இனியன். இராமன் என்னிடம் விசேஷ அன்பு வைக்கிறான். எனக்கு ஒரு பிறவி இன்னும் வருவதானால், இராமன் எனக்கு மகனா கவும், சீதை மருகியாகவும் அமைய வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக்கிறேன்" என்று மனம்குளிரக் கூறித் தான் இராமனிடம் வைக்கும் அன்பைப் புலப் படுத்துகிறாள். கேட்ட மந்தரை கைகேயியிடம் அவள் இராமனைப் பற்றிப் பெருமையாகப் பேசியது பழங்கதை என்றும், நிலைமை மாறும்போது நண்பனும் பகைவனாக மாறி விடுவான் என்றும் கூறி, அதை அரண் செய்வதற் குத் தாமரையை மலர்விப்பவன் சூரியனேயானாலும், தண்ணீர் இல்லாதபோது அவனே அதைக் காய்ந்து கொல்வதை எடுத்துக் கூறுகிறாள். மனவுறுதியில்லாத வளும் மாயையின் வசப்பட்டிருப்பவளுமாகிய கைகேயி, இசை ஒலி கேட்ட பறவை அதில் மயங்கி விழுவதைப் போல மந்தரையின் சொல்லைக் கேட்டுத் தன் நிலை கெட்டு எளிதில் மந்தரைக்கு வசமாகிவிடுகிறாள்.

### 11. கைகேயி தசரதர் முன்பு தனக்களித்த வரத்தை வேண்டுதல்

வான்மீகி: தாம் இராமனுக்கு நாளை முடிசூட்டப் போவதை கைகேயிக்கு நேரில் அறிவிப்பதற்காக அவள் மாளிகைக்கு வந்த தசரதர், அவள் அந்தப்புரத்தில், நகைகளைக் கழற்றி எறிந்துவிட்டுத் தலைவிரி கோல மாக மண்ணிற் கிடப்பதைக் கண்டு அதிர்ச்சி அடை கிறார். விரைந்து சென்று அவளைத் தழுவி அவள்

மனத்துயர் யாதென்று வினவுகிறார். (வான்மீகி இவ்விடத்தில் தசரதரை மன்மத பாணத்தால் அடிபட்டு, காம விகாரத்துக்கு உட்பட்டிருப்பதாகக் கூறுவது, மன்னரது முதுமைக்கும், பக்குவநிலைக்கும் பொருத்தமாக அமையவில்லை.) கைகேயியின் விருப்பத்தை நிறைவேற்றுவதாக மன்னர் தமது புண்ணியத்தின் மீதும், இராமன் மீதும் ஆணையிடுகிறார். கைகேயி அதனாலும் திருப்திப் படாமல் தேவர்களையும், சந்திர சூரியர்களையும், பஞ்ச பூதங்களையும் அழைத்துச் சாட்சியாக வைத்துக்கொண்டு, முன்பு அவர் சம்பராசுர யுத்தத்தில் தனக்களித்த இரு வரங்களையும் அளிக்குமாறு வேண்டுகிறாள். அவற்றுள் ஒன்றால், இராமனுக்கு அபிஷேகம் செய்வதற்காகச் சேகரித்து வைத்த பொருள்களைக் கொண்டு பரதனை இளவரசனாக அபிஷேகம் செய்ய வேண்டுமென்றும், மற்றொன்றால் பரதன் நாட்டை மனநிம்மதியுடன் ஆள்வதற்காக, இராமன் மான்தோல், மரவுரி, சடை இவற்றைத் தரித்து நாட்டைவிட்டு உடனே காட்டிற்குச்சென்று 14 வருடங்கள் வசிக்கவேண்டும் என்றும் கூறுகிறாள் கேட்ட தசரதர் இடிவிழுந்தாற்போல உணர்விழந்து சாய்கிறார். உணர்வு வந்ததும் இராமனது உத்தம குணங்களையும், வீரச்செயல்களையும் குறிப்பிட்டு, அவன் கானகம் சென்றால் தம் உயிர் உடலில் நில்லாது என்கிறார். இராமன் மீது கருணை காட்டும்படியும், சொன்ன சொல் பிழைப்பதற்குத் தன்னை ஆளாக்கா திருக்கும்படியும் அவளிடம் இரந்து வேண்டுகிறார். ஆனால், கைகேயியோ சற்றும் மனமிரங்காமல் மன்னர் வரங்களைக் கொடாவிட்டால் உயிரை விட்டுவிடப் போவதாக அச்சுறுத்துகிறாள். மன்னர் இராமனைப் பிரியமாட்டாமலும், சத்தியத்தைக் கைவிட இயலாமலும் உயிர் ஊசலாடுகிறார்.

கம்பர்: தலைவிரிகோலமாய் மண்ணிற் கிடக்கும் கைகேயியைச் சமாதானப் படுத்துவதற்காகத் தசரதர் அவள் கேட்ட இருவரங்களையும் தருவதாக இராமன் மீது ஆணையிடுகிறார். அவள் வரங்கள் இன்னவெனக் கூறி

யதும், மன்னர் ஆற்றாது மண்ணில் சாய்கிறார். பின்பு அவர் பலவாறு வேண்டியும் அவள் மனம் இரங்காமல் உயிரை விட்டு விடுவதாகக் கூறியபோது மன்னர் 'தந்தேன் வரம்' என்று சொல்லித் தளர்கிறார்.

துளசிதாசர்: கோபத்தோடு மண்ணில் வீழ்ந்துகிடக்கும் கைகேயியை மன்னர் அணுகி, தொட்டுக்கொண்டே அவள் கோபமுற்றிருப்பதன் காரணத்தைக் கூறுமாறும், அவள் விருப்பத்தைத் தாம் நிறைவேற்றுவதாகவும் கூறுகிறார். உடனே அவள் புன்முறுவலுடன் எழுந்து முன்பு கழற்றியெறிந்த நகைகளை எடுத்தணிந்து கொண்டு, தான் பெற எண்ணிய இரு வரங்களையும் கூறுகிறாள். செவிமடுத்த மன்னர் மனம் பதைத்துக் கையைத் தலையில் வைத்துக்கொண்டு கதறி அழுகிறார். வரத்தை நிறைவேற்றாவிட்டால் மன்னர் கண்முன் உயிர் துறப்பதாகக் கைகேயி கூறியபோது, அவர் பெண் யானையால் இடித்துத் தள்ளப்பட்ட கற்பக மரம்போல் மண்ணில் சாய்கிறார். "என் தலையை வேண்டுமானாலும் தருகிறேன்; இராமனை மட்டும் என்னிடமிருந்து அகற்றி விடாதே" என்று இரக்கிறார். கைகேயி, "பெண்களைப் போன்று அழாதீர்: மனைவி, மக்கள், வீடு, செல்வம் யாவும் அறத்திற்குப் பிற்பட்டனவே" என்று கூறுகிறாள். தசரதர் துக்க மிகுதியால், "இராமா! இராமா!" என்று கதறிக்கொண்டு, சிறகற்ற பறவை போல் கீழே விழுந்து, "இரவு விடியாமற் போகாதா" என்று கூறி அங்கலாய்க்கிறார்.

12. கைகேயி தான்பெற்ற வரங்களை இராமனுக்குக் கூறுதல்

வான்மீகி: தசரதரை முடிசூட்டு விழாவிற்கு அழைத்துப்போகக் கைகேயியின் மாளிகைக்கு வந்த சுமந்திரர் அங்கே மன்னர் கட்டிலில் வீழ்ந்து கிடக்கும் நிலை கண்டு திடுக்கிடுகிறார். கைகேயி அவரிடம், மன்னர் இரவு முழுவதும் பட்டாபிஷேக நிகழ்ச்சி பற்றியே பேசிக்கொண்டிருந்து, சற்று முன்பு படுக்கச் சென்று, இப்பொழுது கண்ணயர்ந்து உறங்குகின்றார் என்று சொல்லி இராமனை அழைத்து வருமாறு ஏவுகிறாள். இராமனைக்

காணச் சென்ற சுமந்திரர், அவன் தன் மாளிகையில் சீதையுடன் நாராயணனைத் தியானித்துக்கொண்டிருப்பதைக் காண்கின்றார். சுமந்திரர் இராமனைக் கண்ட காட்சியை வான்மீகி, 'முனிவர் முக்தர்களாலும் நித்திய சூரிகளாலும் அனுபவிக்கப்படும் திவ்யஸேவையை சுமந்திரர் அனுபவித்தார்' என்று பாடுகிறார். இதன் மூலம் இராமனது பரம்பொருள் நிலையை வான்மீகி கற்பவர்களுக்கு உணர்த்துகிறார். சுமந்திரர் இராமனைக் கைகேயி அழைப்பதாகக் கூறியபோது, அவன் தந்தை தனக்கு இன்று முடிசூடப்போகிறார் என்ற மகிழ்ச்சியில் தன் கழுத்தில் கிடந்த முத்துமாலையைக் கழற்றிச் சீதையின் கழுத்தில் அணிந்துவிட்டு வெளிவந்து அங்கு நின்ற இலக்குவனுடன் தேரேறிச் சிற்றன்னையைக் காணவருகிறான்.

இராமனைக் கண்டதும், கைகேயி தான் கூறப்போகும் செய்தியை நிறைவேற்றுவதாக அவனிடமிருந்து உறுதிமொழி பெற்றுக்கொண்டு, தசரதர் தனக்களித்த, பரதன் நாடாள்வதும், இராமன் 14 வருடம் கானகம் செல்வதுமாகிய இரு வரங்களையும் கூறினாள் அதைக் கேட்டபோது இராமன் முகத்தில் வாட்டமோ, துக்கக் குறியோ தோன்றவில்லை. இராமனது இந்நிலையை வான்மீகி, 'இணையற்று விளங்கும் ஆனந்த சொரூபியான புருஷோத்தமனுக்குத் துக்கம் ஏது?' என்று குறிப்பிடுகிறார். கைகேயி இராமனை உடனே கானகம் செல்லுமாறும், அவன் சென்றாலன்றி மன்னர் நீராடார்; உணவுண்ணார் என்றும் கூறி, அவனை விரைவுபடுத்துகிறாள். தசரதர் 'இது என்ன அநியாயம்' என்று கூறி எழ முயன்றவர் மீண்டும் வீழ்ந்து உணர்விழக்கிறார். இராமன் அவரைத் தூக்கி எடுக்கிறான். இராமன் கைகேயியிடம் தன் அன்னையையும் சீதையையும் கண்டுவிட்டு, உடனே காட்டிற்குப் புறப்படுவதாகக் கூறி, அவளையும், தந்தையையும் வணங்கிவிட்டு வெளியேறுகிறான்.

---

நித்திய சூரிகள் - பரமபதத்தில் வாழும் சித்தர்கள்.
ஸேவை - தரிசனம்.

கம்பர்: சிற்றன்னை அழைத்ததாகச் சுமந்திரர் கூறியதைக் கேட்ட இராமன் உடனே அவளைக் காணத் தனியாக வருகிறான். மாளிகையில் கால் வைத்ததும் கைகேயி அவனிடம் பரதன் நாடாளவும், இராமன் காடாளவும் மன்னர் தனக்களித்த இருவரங்களையும் கூறுகிறாள். அதைக் கேட்டதும் இராமனது முகம் அன்றலர்ந்த தாமரையின் பொற்பையும் வென்று விட்டதாகக் கம்பர் பாடுகிறார். இராமன் கைகேயியிடம், 'மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ' என்று கூறி, மன்னரைச் சென்று காணாமலே, அவரைத் திசைநோக்கியும், கைகேயியை நேரிலும் வணங்கிவிட்டுப் புறப்படுகிறான். அதன் பின்னர் அவன் தசரதரைச் சந்திக்கவேயில்லை.

துளசிதாசர்: வழக்கம்போல் அரண்மனைக்கு வந்த சுமந்திரர் அங்குத் தசரதர் உணர்விழந்து தரையில் கிடப்பதைக் கண்டு உடல்நடுங்கி, அதுபற்றிக் கைகேயியிடம் கேட்பதற்கு அஞ்சி நிற்கிறார் கைகேயி தானே அவரிடம், ''மன்னர் இரவு முழுவதும் உறங்கவில்லை. 'இராமா! இராமா!' என்று பிரலாபிக்கிறார். உண்மையையும் உரைக்கின்றாரில்லை. நீர் போய் இராமனை விரைவில் அழைத்துவாரும்'' என்று கூறுகிறாள். செய்தியறிந்த இராமன் தனியாகத் தந்தையைக் காண வருகிறான். வந்தவன் ஒரு முதிய யானை ஒரு பெண் சிங்கத்தால் வீழ்த்தப்பட்டுக் கிடப்பதைப்போல் தந்தை மண்ணில் கிடப்பதைக்கண்டு துணுக்கம் அடைகிறான். கைகேயி அவனிடம், மன்னர் தனக்கு முன்பு வரமளித்ததையும், இப்பொழுது அதை நிறைவேற்றத் தயங்குவதையும் சொல்லி, மன்னர் சத்தியத்தை மீறாமல், அளித்த வரத்தை நிறைவேற்றும்படி அவருக்கு உணர்த்துமாறு கூறுகிறாள். சிற்றன்னை தன்னைக் கானகம் செல்லுமாறு கூறியதை அவள் தனக்கு அளித்த ஆசிர்வாதமாக இராமன் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்கிறான். காட்டிலிருந்து பிடித்துவந்து சங்கிலியால் பிணிக்கப்பட்ட

ஓர் இளயானையைக் கட்டவிழ்த்து விட்டால் அது எய்தும் மகிழ்ச்சியை இராமன் அடைகிறான். மன்னர் தம் மனத்திற்குள் இராமன் வனத்திற்குள் செல்லாதிருக்க வேண்டுமென்று சிவபெருமானைப் பிரார்த்திக்கிறார். இராமன் தந்தையிடம் தான் கானகம் செல்வதன் மூலம் அவர் சிற்றன்னைக்கு அளித்த வாக்கு நிறைவேற்றப்படுவதாகக் கூறி, அவரை வணங்கிவிட்டுச் செல்கிறான்.

**13 இராமன் கானகம் செல்வதைக் கோசலை அறிதல்**

வான்மீகி: இராமன் கோசலையிடம் சென்று, தந்தை பரதனை இளவரசனாகச் செய்யப் போகிறார் என்றும், தன்னை 14 வருடம் காட்டில் வாழும்படி கட்டளையிட்டிருக்கிறார் என்றும் கூறுகிறான். கேட்ட கோசலை மண்ணில் வீழ்ந்து அழுகிறாள். கைகேயியின் சூழ்ச்சியே இதற்குக் காரணம் என்பதை அவள் உணர்ந்து கொள்ளுகிறாள். இராமன் போய்விட்டால் அரண்மனையில் தனக்கு நேரும் இழிதகவை அவனிடம் கூறி வருந்துகிறாள். முதலில் இராமனுடன் தானும் கானகத்திற்கு வருவதாகக் கூறியவள், பின்னர் அவனிடம் தந்தை சொல்லுக்கு வைக்கும் மதிப்பைத் தனது சொல்லுக்கும் வைத்து, கானகம் செல்லாதிருக்குமாறு கூறுகிறாள். மீறிச் செல்வதானால் தான் பட்டினி கிடந்து உயிர்விடப் போவதாகவும் எச்சரிக்கிறாள். இராமன், கண்டு மகரிஷி பரசுராமன், யயாதி இவர்கள் வரலாறுகளைச் சான்று காட்டித் தான் தந்தையின் ஆணைப்படி கானகம் செல்வது தகுதியே என்பதையும், தன் பிரிவால் வருந்தும் தந்தையை ஆற்றி அவருக்குப் பணிவிடை செய்வது அன்னையின் கடமை என்பதையும் விளக்கிக் கூறி, அன்னையை அமைதிப்படுத்துகிறான். அவளும் இராமனை ஆசீர்வதித்து அனுப்புகிறாள். இராமன் கானகம் சென்றபின், புத்திர சோகம் அவளை வாட்டுகிறது. அந்நிலையில் அவள் மன்னரைப் பார்த்து, ''கைகேயியின் வயப்பட்டு, அவள் சொல்லைக் கேட்டு, துக்கத்தை அறியாத குழந்தையைக் காட்டிற்கு அனுப்பினீரே'' என்று அவரை நொந்து

கொள்ளுகிறாள். மன்னர் மனமுடைந்து, ''இந்த வார்த்தைகளைக் கேட்க நான் என்ன பாவம் செய்தேன் புத்திர சோகத்தால் தவிக்கும் என்னை இப்படிச் சொல்வது தகுமா?'' என்று ஈனக்குரலில் கேட்டு மூர்ச்சையடைகிறார், கோசலையின் சொற்கள் மன்னர்படும் அவலத்தைத் தணிப்பதற்கு மாறாக, அவரைக் கொடிய துன்பத்துள் ஆழ்த்துகின்றன.

கம்பர்: இராமன் கோசலையிடம் கைகேயியின் சூழ்ச்சி பற்றி எதுவும் குறிப்பிடாமல், தந்தையே தன்னைக் கானகத்திற்கு ஏவியதாகக் கூறுகிறான். கோசலை தன்னையும் அழைத்துச் செல்லுமாறு கூறியபோது, அவள் தந்தைக்கு ஆற்றவேண்டிய கடமையை எடுத்துக்கூறி, அவள் தன்னுடன் வருதலை மறுக்கிறான். பின்னர்க் கோசலை தசரதரைக் கண்டு அவர் நிலைமையை அறிந்து கொண்டபின், மகனின் பிரிவை ஆற்றி, அறத்தைப் பேணுமாறு அவருக்கு ஒரு நல்ல அமைச்சர் போல அறிவுரை கூறுகிறாள். அறத்தைப் பேணுவதில் மன்னர்க்குத் தளர்வு தோன்றிய வேளையில், அவர் அதினின்று வழுவி விடாதபடி காத்த பெருமை கோசலையைச் சாரும். மன்னரின் மனம் வருந்தும்படி அவள் ஒருபொழுதும் கடிந்து கூறியதில்லை.

துளசிதாசர்: இராமன் தன் அன்னையைக் காணச் சென்றபோது சுமந்திரரின் மகனும் அவனுடன் சென்றான் என்றும், அவனே நடந்த செய்திகளை அவளுக்குக் கூறினான் என்றும் துளசிதாசர் பாடுகிறார். (இங்குத் துளசி, வான்மீகியும் கம்பரும் கூறாத சுமந்திரரின் மகனாகிய ஒரு புதிய பாத்திரத்தைக் கதையில் புகுத்துகிறார்.) செய்தியறிந்த கோசலை சொல்லொணாத் துக்கத்தை அடைகிறாள். மகனின் பிரிவு ஒரு பக்கமும், மகன் தந்தைக்கு ஆற்ற வேண்டிய கடமையுணர்வு மற்றொரு பக்கமும் அவள் உள்ளத்தை அலைக்கக் கடைசியாக அவள், ''நீ செய்ய எண்ணியது சரியே; நீ கானகம்

செல்வது எனக்கு வருத்தம் அளிக்கவில்லை'' என்று கூறி, இராமன் பிதிர்வாக்கிய பரிபாலனம் செய்வதற்காகக் கானகம் செல்வதை உடன்படுகிறாள்.

14. தசரதர் கேகேயியையும், பரதனையும் உறவொழிதல்

வான்மீகி: கைகேயி சற்றேனும் மனமிரங்காமல் 'இராமன் கானகம் சென்றாலன்றி உயிர்தரியேன்' என்று கூறியதைக் கேட்ட மன்னர் அவளிடம், ''இந்தப் பொல்லாங்கை உனக்குப் போதித்தது யார்? நீ விரும்பினால் நாட்டை நான்கு மக்களுக்கும் சமமாகக் கொடுக்கிறேன். அல்லது பரதனுக்கே அபிஷேகம் செய்கிறேன். பரதன் அறவுணர்வுடையவன்; இராமன் கானகம் செல்வதை அனுமதிக்க மாட்டான். வயது சென்ற என் பக்கத்திலிருந்து இராமனை அகற்றிவிடாதே. இராமனை நான் வனத்திற்கு அனுப்பினால் பல தேசங்களிலிருந்து வந்திருக்கும் வேந்தர்கள் எனக்கு விவேகம் இல்லையென்று என்னைப் பழிக்கமாட்டார்களா? நானும் அப்பாவத்திற்காக இறந்தபின் நரகத்தை அடைவேன் அன்றோ!'' என்று கூறுகிறார். இதன் பின்னரும் கைகேயியின் நிலையில் மறுதல் எதுவும் தோன்றாமையால் தசரதர் மனமுடைந்து கைகேயியைப் பார்த்து, ''ஏ கொடியவளே! என் எதிரில் நில்லாதே! நீ எனக்கு மனைவி அல்லை. அங்கி சான்றாகக் கைப்பிடித்த உன்னையும், உனக்குப் பிறந்த மகனையும் இத்துடன் கைவிட்டேன். நீயும் உன் மகனும் எனக்கு உத்தரக்கிரியைகளைச் செய்ய வேண்டாம்'' என்று கூறுகிறார். மன்னர் இக்கருத்தையே மூன்று தருணங்களில் கூறுகிறார். (சருக்கம் 12, 14, 42.)

கம்பர்: வசிட்டர் கைகேயியிடம் இராமனுக்கு அரசும், மன்னர்க்கு உயிரும் உதவிப் புகழ் பெறுமாறு உபதேசிக்கிறார். ஆனால் கைகேயியோ அழுது விம்மி, அரசர் தாம் சொன்ன சொல்லைப் பிழைப்பாரானால் தான் உயிரை விட்டு விடுவதாக அச்சுறுத்துகிறாள். கேட்ட முனிவர் அவளைக் கடிந்து பேசுகிறார். இருவர் உரைகளையும் கேட்டுக்கொண்டிருந்த தசரதர் ஆற்றாமை மிக்கு, முனி

வர் முன்னிலையில், ''இவள் என் மனைவியல்லள்; மன்னனாக வரும் பரதன் என் மகனல்லன்; துறந்தேன். பரதன் என் அந்திமக் கடனை ஆற்ற வேண்டாம்'' என்று மனம் நொந்து மொழிகிறார். தசரதர் இவ்வாறு கைகேயியோடு உறவொழிந்த செய்தியைக் கம்பர் ஒருமுறை இவ் இடத்தில் மட்டுமே, கூறுகிறார்,

துளசிதாசர்: தசரதர் கைகேயியையும் பரதனையும் துறந்த செய்தியைத் துளசிதாசர் பாடவில்லை.

15, கைகேயியின் செயலைப் பலரும் கண்டித்தல்

வான்மீகி: இராமனைக் காட்டிற்கு அனுப்புவதில் கைகேயி கொண்ட பிடிவாதத்தை அவளுடைய நண்பர்களும், சித்தார்த்தர் (நகர மக்களுள் முதன்மையானவர்), சுமந்திரர், வசிட்டர், ஆகியோரும் வன்மையாகக் கண்டிக்கிறார்கள். சுமந்திரர் கைகேயியினுடைய தாயின் கெட்ட குணமே அவளிடம் இருப்பதாகக் கூறி, அவள் தாயையும் பழிக்கிறார்.[1] வசிட்டர் கைகேயியைத் துர்ப்

[1] கேகய மன்னர் ஒரு கந்தர்வனிடமிருந்து ஓர் அதிசயமான வரத்தைப் பெற்றிருந்தார். அவ்வரத்தின் மகிமையால் பிராணிகள் தமக்குள் பேசும் பேச்சை அறிந்து கொள்ளும் ஆற்றல் அவருக்கு அமைந்தது. ஒரு நாள் அவர் தம் மனைவியுடன் இருந்தபோது, சுவரில் ஊர்ந்து செல்லும் எறும்புகள் தமக்குள் பேசுவதைக் கேட்டுச் சிரித்தார். உடனே அரசி அவர் சிரித்ததன் காரணத்தைக் கூறுமாறு வற்புறுத்தினாள். மன்னர் அதை வெளிப்படுத்தினால் தம் தலை வெடித்துவிடும் என்று உண்மையைக் கூறினார். அவள் அதை நம்பாமல் சிரித்ததன் காரணத்தைச் சொல்லியே தீர வேண்டும் என்று பிடிவாதம் செய்தாள். செய்வது இன்னது என்று அறியாத மன்னர், வரமளித்த கந்தர்வனிடம் சென்று தன் நிலைமையைக் கூறினார். கந்தர்வன் 'என்ன நேரிலும் சொல்லக்கூடாது' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டான். மன்னர் மீண்டு வந்து அடம்பிடித்த அரசியை அகற்றிவிட்டு நிம்மதியாக வாழ்ந்தார்.

புத்தியுடையவள் என்றும், நன்னடத்தையை அறியாதவள் என்றும் கடிகிறார்.

கம்பர்: பட்டத்தரசியாகிய கைகேயியைக் கண்டிக்கும் உரிமையைக் கம்பர் வசிட்டர் ஒருவருக்கே அளித்துள்ளார். வசிட்டர் அவளது முறையற்ற செயலால், மன்னன் மரண மடையவும், அதனால் அவள் பழிபாவங்களுக்கு ஆளாக வும் நேரும் என்று எச்சரிக்கிறார். அவளது பிடிவாத குணத்தைக் கண்டு சினம் கொண்ட முனிவர் அவளை, ''நீ பெண்ணா? பேயா?'' என்று கேட்டு, புண்ணில் நுழைந்த நெருப்புக்கும், விடத்திற்கும் அவளை உவமை கூறிப் பழிக்கிறார்.

துளசிதாசர்: கைகேயியின் நண்பர்கள் இராமனின் உத்தம குணங்களையும், அவன் இல்லாத அயோத்தி சூரியன் இல்லாத பகலையும், உயிர் இல்லாத உடலையும், சந்திரன் இல்லாத இரவையும் போலப் பொலிவிழந் திருக்குமென்றும் அவளிடம் எடுத்துக் கூறி, அத்தகைய உத்தம மைந்தனைக் காட்டிற்கு அனுப்பத் துணிந்த அவளது செயலைக் கண்டிக்கிறார்கள். ஆயினும், அவர் களது அறிவுரைகள் விரும்பிய பயனை அளிக்கவில்லை. இவ்விடத்தில் துளசி இராமனை, 'துளசிதாசரின் தெய்வம்' என்று குறிப்பிடுவது அவரது இராமபக்தியைப் புலப்படுத்துகிறது.

16. இலக்குவன் இராமனுடன் கானகம் செல்லுதல்

வான்மீகி: கைகேயியின் அழைப்பின் பேரில் அவ ளைக் காண அவளிருக்கும் மாளிகைக்குச் செல்லும் இராம னுடன் இலக்குவனும் செல்லுகிறான். அங்கே தந்தை கிடக்கும் அவலநிலை கண்டும், கைகேயி தான் வரம் பெற்ற செய்தியைத் தன்வாயால் கூறக்கேட்டும், கைகேயி யின் சூழ்ச்சியால் இராமன் கானகம் செல்லப் போவதை இலக்குவன் உணர்ந்து கொள்கிறான். இராமன் தந்தை யையும், தாயையும் வணங்கி விடைபெற்று வெளிவந்த போது, இலக்குவனும் கோபத்தோடு அவன் பின் செல்லு கிறான்.

கைகேயிக்கு வரமளித்த தந்தையை இலக்குவன் 'இந்திரிய சுகங்களை ஒழிக்க முடியாதவர்' என்று கடி கிறான்; கைகேயியின் கொடுமையைப் பழித்துக் கூறி, அவள் மன்னரிடமிருந்து வஞ்சத்தால் பெற்ற நாட்டை ஆற்றலைக் காட்டிக் கைப்பற்றி ஆளவேண்டுமென்று இராமனிடம் கூறுகிறான். இராமன் யாவும் விதியின் செயல் என்று கூறியபோது, இலக்குவன் 'விதி என்பது மனோபலமில்லாதவனின் பிழைப்புக்கு வழி' என்று கூறி அக்கருத்தை மறுக்கிறான். இராமன் சாந்தமான சொற் களைக் கூறி இலக்குவனின் கோபத்தைத் தணிக்கிறான். பின்பு இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும், தசரதரையும் கோசலை, சுமித்திரை ஆகியோரையும் வணங்குகின்றனர். சுமித்திரை இலக்குவனிடம் "இனி மேல் இராமனே உனக்குத் தந்தை; சீதையே உனக்குத் தாய்; அவர்கள் வசிக்கும் வனமே உனக்கு அயோத்தி. இராமன் ஆணைப்படி நடப்பதே உனக்கு நன்மை" என்று கூறுகிறாள். (சுமித்திரை இலக்குவனுக்குக் கூறிய இவ் வுபதேசத்தைக் கம்பரும், துளசியும் தத்தம் நூல்களில் பாடுகிறார்கள் )

கம்பர்: இராமன் கானகம் செல்லும் செய்தியை, இலக்குவன் வீதியில் மக்கள் சொல்லி அறிகிறான். உடனே சினம் மூண்டு எழுந்து கைகேயியின் செயலைப் பழிக் கிறான். போர்க்கோலம் பூண்டு, நாட்டைத் தன் வலிமை யால் கைப்பற்றி, இராமனுக்கு முடிசூட்டப்போவதாக வீர முழக்கம் செய்கிறான். சுமித்திரையின் மாளிகையில் இருந்த இராமன் இதைக்கேட்டு, இலக்குவனிடம் சென்று, அவனுக்கு ஆறுதல் மொழி கூறி, அழைத்து வருகிறான்' இராமன் இலக்குவனைத் தந்தைக்கு உதவியாக நாட்டில் இருக்குமாறு கூறுகிறான். இலக்குவன் இராமனைப் பிரிந்து தன்னால் உயிர்வாழ இயலாது என்று கூற, இராமன் தம்பியின் சகோதர பாசத்தை அறிந்து அவனைத் தன்னுடன் அழைத்துச் செல்ல இணங்குகிறான்.

துளசிதாசர்: இராமன் கானகம் செல்லும் செய்தியை இலக்குவன் அறிந்ததும் சஞ்சலத்தோடு கூடிய முகத்துடன் இராமனை அடைந்து, அவன் பாதத்தைப் பற்றிக் கொண்டு கண்ணீரை உகுக்கிறான். (இலக்குவன் கைகேயியின் மீது சினம் கொண்டதாகவோ, அவள் செயலைக் கடிந்து கூறியதாகவோ, வீரமுழக்கம் செய்ததாகவோ துளசி பாடவில்லை.) 'இராமன் தன்னையும் கானகத்திற்கு அழைத்துச் செல்வானா? மாட்டானா?' என்பதே அவனது கவலை. அந்நிலையில் அவனால் எதையும் பேசமுடியவில்லை. இராமன் இலக்குவனை நாட்டிலிருந்து, தன் பிரிவால் வருந்தும் தந்தை, வசிட்டர் முதலியவர்களுக்கு ஆறுதல் அளிக்குமாறு கூறுகிறான். இலக்குவன் தன்னையும் இராமனுடன் செல்ல அனுமதிக்க வேண்டுமென்றும், இராமனே தனக்குக் குரு, தந்தை, தாய் அனைத்தும் என்றும் கூறி, இராமனின் பாதங்களைப் பற்றிக் கொள்ளுகிறான். இராமன் மனங்கனிந்து, சுமித்திரையிடம் விடைபெற்று வரும்படி கூறி அனுப்புகிறான். இலக்குவன் வாடிய முகத்துடன் வருவதைக் கண்டு சுமித்திரை அதன் காரணத்தை வினவுகிறாள். இலக்குவன் நடந்ததைக் கூறுகிறான். அவள் துக்கத்தால் தலையில் அடித்துக்கொள்கிறாள். (அவள் இதுவரையிலும் நடந்த செய்தியை அறியாள் போலும்!) சுமித்திரை இலக்குவனிடம் 'சீதை உன் தாய்; 'இராமன் தந்தை' என்றிவ்வாறு மேலே குறிப்பிட்ட அறிவுரைகளைக் கூறி அனுப்புகிறாள். இராமன் அவனைத் தன்னுடன் அழைத்துச் செல்கிறான்.

### 17. சீதையைத் தன்னுடன் வர இராமன் இசைதல்

வான்மீகி: இராமன் முடிசூடி வருவான் என்றெண்ணி, அவன் பாதத்தில் பாத பூசை செய்வதற்காகச் சீதை அவனுடைய வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறாள். இராமன் தான் கானகம் செல்லும் செய்தியைச் சீதையிடம் எவ்வாறு கூறுவது என்ற கவலை

யோடு வருகிறான், அவன் மகிழ்ச்சியற்றிருப்பதன் காரணத்தை வினவிய சீதைக்கு அவன் நடந்ததைக் கூறுகிறான். இராமன் கானக வாழ்க்கையின் கஷ்டத்தை எண்ணிச் சீதையைத் தன்னுடன் அழைத்துச் செல்லத் தயங்குகிறான். அப்போது சீதை அவனிடம் 'மனைவி கணவனின் பாதி' என்பதை எடுத்துச் சொல்லி, தான் கணவனுடன் இருக்கும்போது துன்ப வாழ்க்கையும் தனக்கு இன்பமாக மாறிவிடும் என்று கூறுகிறாள். அதன் பின்னரும் அவன் அவளை அழைத்துச்செல்ல உடன்படாத போது, சீதை சற்றுக் கோபத்தோடு பின்வருமாறு பேசுகிறாள். ''நீர் என்னைக் கானகத்திற்கு அழைத்துச் செல்லாவிடில் என் தந்தை உம்மைப்பற்றி என்ன நினைப்பார்? 'இராமன் ஓர் ஆண்மகன் என்றல்லவா எண்ணினேன். இப்பொழுதுதான் உண்மை தெரிகிறது. அவன் பார்வைக்குத்தான் புருஷன்; மெய்ம்மையில் பெண்பிள்ளையே. இதை முன்பு தெரியாமல் மோசம் போனேனே' என்றல்லவோ எண்ணுவார்''. இவ்வாறு கடுமையாகக் கூறி, இராமன் தன்னை அழைத்துச் செல்லாவிட்டால் விஷத்தைக் குடித்து உயிரை விட்டுவிடப் போவதாகச் சொல்லி அழுதாள். சீதையின் மனவுறுதியை உணர்ந்து கொண்ட இராமன் அவளைக் கூட்டிப்போக இணங்கினான்.

கம்பர்: இராமன், சீதையிடம், அரசைப் பரதனுக்கு அளித்துவிட்டுக் கானகம் செல்லுமாறு தந்தை தன்னைப் பணித்திருக்கிறார் என்று அறிவித்தபோது அவள், இராமன் அரசை இழந்ததற்காக வருந்தவில்லை. அவன், 'நான் போய் வருவேன்; நீ வருந்தாதே'' என்று கூறி அவளை அழைத்துப்போக மறுத்ததற்காகவே அழுகிறாள். அவன் 'காடு சுடும்' என்றபோது, அவள் 'அவன் பிரிவினும் சுடுமா?' என்று வினவுகிறாள். இதற்குள்ளாகச் சீதை அரண்மனைக்குள் சென்று மரவுரியை உடுத்துக் கொண்டு வெளிவந்து இராமனின் கையைப்பற்றி, அவனுடன் புறப்படுவதற்குத் தயாராகிவிடுகிறாள்.

துளசிதாசர்: இராமன் தான் கானகம் போகும் செய்தியைக் கோசலையிடம் கூறிக்கொண்டிருக்கும் போது, சீதை அச்செய்தியை எப்படியோ அறிந்து அங்கே வருகிறாள். வந்தவள், நிலைமையைக் குறிப்பால் உணர்ந்து கொண்டு கண்ணீர் வடிக்கிறாள். கோசலை, அவள் அரச குலத்தில் பிறந்து, அரச குலத்தில் வாழ்க்கைப்பட்டதையும், அவளுடைய பெண்மையையும் எண்ணுகிறாள். விளக்கைத் தூண்டுவதற்குக்கூட, அனுமதிக்காமல் அவளைத் தான் பேணிவந்ததும், கோசலையின் நினைவுக்கு வருகிறது. சீதை கானக வாழ்க்கைக்குத் தகுதியுடையவளா என்பது பற்றிச் சிந்தித்து முடிவெடுக்குமாறு இராமனிடம் கூறுகிறாள். இராமன் காட்டிலுள்ள கஷ்டங்களைச் சீதையிடம் விளக்கிக்கூறி, அவளைத் தன் தாயின் ஆதரவில், பெற்றோர்களுக்கு உதவியாக இருந்து வரும்படி கூறுகிறான். சீதை, கணவனைப் பிரிந்த வாழ்க்கை துன்பத்தையே தரும் என்றும், தன்னை அழைத்துச் செல்லாவிட்டால் அவன் திரும்பி வரும்போது தான் உயிருடன் இருத்தலில்லை என்றும் உறுதியாகக் கூறுகிறாள். இராமன் சீதையை விட்டுவிட்டுப் போனால் அவள் பிழைக்கமாட்டாள் என்பதை உணர்ந்து, அழைத்துப்போக இணங்குகிறான்.

## 18. இராமன் மரவுரி அணிதல்

வான்மீகி: இராமன் தான் கானகம் செல்வதற்காக வருந்தும் தந்தையைச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கும் வேளையில், கைகேயி தானே மரவுரியைக் கொண்டு வந்து, ''இதை உடுத்துக் கொள்'' என்று கூறிக் கொடுக்கிறாள். இராம லட்சுமணர்கள் தாம் உடுத்துள்ள விலையுயர்ந்த ஆடைகளுக்குப் பதில் மரவுரியை அணிகிறார்கள். சீதை மரவுரியை உடுத்தத் தெரியாமல் தயங்குகிறபோது இராமன் அதை அவள் அணிந்திருந்த வெண்பட்டின் மீது சுற்றுகிறான்.

கம்பர்: சுமித்திரையிடம் விடைபெறுவதற்காக அவள் மாளிகைக்கு வரும் இராமன், தெருவில் இலக்குவன் கைகேயியைப் பழித்து வீரமுழக்கம் செய்வதைக் கேட்டு, அங்குச் சென்று அவனை அமைதிப்படுத்தி சுமித்திரையின் மாளிகைக்கு அழைத்து வருகிறான். அப்போது கைகேயி அனுப்பிய பெண்கள் மரவுரியைக் கொண்டு வருகிறார்கள். அதை இராமனும் இலக்குவனும் அணிகின்றனர். சீதைக்கு யார் மரவுரியை அளித்தார் என்ற செய்தி கூறப் படவில்லை. ஆனால் இராமன் சீதையைக் கானகத்திற்கு அழைத்துச் செல்லத் தயங்கி நின்றபோது அவள் உள்ளே சென்று தானே மரவுரியை அணிந்து வெளிவருகிறாள்.

துளசிதாசர்: இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் காட்டிற்குச் செல்ல மன்னரிடம் விடைபெறும் பொருட்டு அவர் இருக்கும் இடத்திற்கு வருகிறார்கள். அவ்வேளையில் கைகேயி மரவுரி, அணிகள், பாத்திரங்கள் இவற்றைக் கொண்டுவந்து இராமன் முன் வைத்து அவனிடம், "தசரதர் மென்மையானவர்; தன்வாக்கை நிறைவேற்றத் தயங்குபவர்; அவருக்குப் பழிவராதபடி நடந்து கொள்" என்று கூறுகிறாள். மூவரும் மரவுரியை உடுத்துப் பெற்றோர்களை வணங்கிவிட்டுப் புறப்படுகிறார்கள்.

### 19 இராமன் சீதையுடனும் இலக்குவனுடனும் கானகம் செல்லுதல்

வான்மீகி: இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் கானகம் செல்லுமுன் மன்னரைக் கண்டு வணங்கி விடைபெற வருகிறார்கள். மன்னர் விடையளிக்குமுன் தமது 350 மனைவிமார்களையும் அழைத்துவரச் செய்து, அவர்கள் முன்னிலையில் இராமனைக் கட்டி அணைக்கிறார். (தசரதருக்கு உரியராகக் கூறப்படும் அறுபதினாயிரம் மனைவிமார்களுள் இவர்கள் முதன்மையுடையவர் போலும்!) ஆற்றாமையால் மூர்ச்சையடைந்து விழுபவரை மூவரும் தாங்குகின்றனர். மூர்ச்சை தெளிந்ததும், தசரதர் இராமனிடம் தாம் கைகேயிக்கு அளித்த வரத்தைப்

பொருட்படுத்தாது, நாட்டை ஆளும்படி கூறுகிறார். இராமன் தந்தை சத்தியம் தவறுவதற்குத் தான் காரணமாகக் கூடாதென்றும், 9-ம் 5-ம் வருடங்களில் திரும்பிவந்து விடுவதாகவும் சொல்லுகிறான். (கம்பர் ஏழிரண்டாண்டில் என்று கூறியதோடு இதனை ஒப்பிடுக.) தசரதர் இராமனைப் பிரியமாட்டாமலும், சத்தியத்தைக் கைவிட முடியாமலும், இருதலைக் கொள்ளி எறும்புபோல், சஞ்சலமடைகிறார். இராமனைப் பார்த்து, நாக்குழற, கண்ணீர வார, "நீ போய் வா; செல்லும் வழியில் உனக்கு மங்களம் உண்டாகுக" என்று கூறுகிறார். கைகேயி இராமனை அன்றைக்கே கானகம் செல்லும்படி நெருக்குகிறாள். தசரதர் இராமனிடம் தான் கைகேயியால் ஏமாற்றப்பட்டதாகச் சொல்லி வருந்தி, அவனை அன்று ஒருநாள் தம்முடன் தங்கி மறுநாள் செல்லுமாறு வேண்டுகிறார்.

தசரதர் 'அரசாங்கக் கருவூலம் இராமனுடன் செல்க' என்று கூறியபோது, 'அவன் காட்டில் வாழப்போகும் தனக்குப் பொருள் தேவையில்லை' யென்று கூறிவிடுகிறான். முன்பு ஜனகரின் யாகத்தின்போது வருணனால் அளிக்கப்பட்டு, வசிட்டரின் வீட்டில் இருந்துவரும் இவ்விரண்டான வில், அம்பறை, கத்தி, கவசம் ஆகியவற்றையும், மண்வெட்டி, கூடை, கோடரி முதலிய கருவிகளையும் எடுத்துக் கொள்ளுகிறான். இச் சமயத்தில்தான் கைகேயி மரவுரியைக் கொடுத்தனுப்புகிறாள் அங்கிருந்தவர்கள், சீதையை நாட்டில் விட்டு விட்டுப் போகும்படி இராமனிடம் வேண்டுகிறார்கள். அக்கருத்து சீதைக்கு உடன்பாடாக இல்லை. வசிட்டர், 'மனைவி கணவனின் பாதியாதலால் இராமனுக்குரிய அரியணையில் அமர்ந்து சீதை நாட்டை ஆளட்டும்' என்கிறார்; சீதைக்கு நல்ல ஆடை அணிகளை அளிக்குமாறு கூறுகிறார். இராமன் தன் தாயை அன்போடு நடத்துமாறு தந்தையை வேண்டுகிறான். தசரதர் கருவூலக் காவலனிடம், சீதைக்கு 14 வருடத்திற்குத் தேவையான ஆடை அணிகளை அளிக்குமாறு பணிக்கிறார் சீதை ஆடை அணி

களால் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொள்ளுகிறாள். மூவரும் தேரிலேற, சுமந்திரர் அதனை ஓட்டுகிறார். தசரதர் "இராமா! இராமா!" என்று கதறிக்கொண்டு தேர் மறையுமட்டும் அதன் பின்னால் தள்ளாடிச் செல்கிறார். பின்னர் ஆற்றாமையால் கீழே விழுகிறார். கோசலை மன்னரை மெதுவாகத் தாங்கி அரண்மனைக்கு அழைத்து வருகிறாள். கைகேயியும் தேரின் பின்னால் செல்கிறாள். இராமன் நாட்டைவிட்டு அகன்றதை உறுதிப்படுத்துவதற்கு அவள் சென்றிருக்க வேண்டும். மன்னர் கீழே விழும்போது கைகேயி அவரைத் தாங்கச் செல்லவில்லை.

நகரமாந்தர்கள் இராமன் செல்லும் தேரைப் பின் தொடர்கின்றனர். இராமன் அவர்கள் தன்மீது வைக்கும் அன்பைப் பரதனிடம் வைக்குமாறு சொல்லித் திரும்பிப் போகும்படி கூறியும் அவர்கள் போகவில்லை. அன்றிரவு எல்லோரும் தமஸா நதிக்கரையில் தங்குகிறார்கள். நள்ளிரவில் இராமன் சுமந்திரரிடம் தேரை நகரை நோக்கிச் சிறிது தூரம் ஓட்டிச்சென்றுவிட்டுப் பின் ஓர் உபாயத்தால் சுவடு தெரியாமல் திருப்பிக் கொணருமாறு கூறுகிறான். சுமந்திரர் அவ்வாறே செய்கிறார். இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் தேரில் ஏறுகின்றனர். சுமந்திரர் தேரை ஓட்டி, சிருங்கிபேரபுரத்தை அடைகிறார். அங்கு மூவரும் ஒரு மரத்தினடியில் தங்குகிறார்கள். தமஸா நதிக்கரையில் துயிலுணர்ந்த நகரமக்கள் தேரின் சுவட்டைப் பார்த்து, இராமன் அயோத்திக்குத் திரும்பிப் போய்விட்டதாக எண்ணி, நகருக்கே மீளுகின்றனர்.

கம்பர்: கைகேயிக்கு வரத்தைக் கொடுத்துவிட்டு, அதை நிறைவேற்ற முடியாமல் அல்லலுறும் தசரதர், இராமன் கானகம் செல்வதையும் தம் கண்ணாற்கண்டு, மேலும் துக்கத்தில் ஆழ்வதற்கான சந்தர்ப்பத்தைக் கம்பர் தமது நூலில் அமைக்கவில்லை கைகேயி தான் மன்னரிடமிருந்து பெற்ற வரத்தை இராமனிடம் கூறி, அவனைக் காட்டிற் கனுப்புவதற்காக, சுமந்திரரை ஏவி,

அவனை அழைத்துவரச்சொல்லி, அவன் வந்ததும், மாளிகை வாயிலில் வைத்தே வரத்தைக் கூறி அவனை அனுப்பிவிடுகிறாள். இராமனும் தான் கானகம் செல்வதைத் தந்தையிடம் நேரில் சென்று கூறினால் அவரது துன்பம் அதிகரிக்கக்கூடும் என்றெண்ணி, அவரைக் காணாமல், மாளிகை வாயிலில் வைத்தே திசைநோக்கி வணங்கிவிட்டு வெளியேறுகிறான்.

துளசிதாசர்: இராமன் கானகம் செல்வதற்குத் தன் அன்னை கோசலையின் உடன்பாட்டைப் பெற்றபின், தசரதரை வணங்கி விடைபெறுவதற்காக, அவரிருக்கும் அரண்மனைக்குச் சீதையுடனும், இலக்குவனுடனும், செல்கின்றான். அவர்களைக் கண்டபோது தசரதரின் துக்கம் பீறிட்டெழுகிறது அவர் இராமனிடம், ''ஒருவன் செய்யும் வினையின் பயனை அவனே அனுபவிப்பான் என்று வேதம் கூறும். ஆனால் இங்கே நான் செய்த தீவினையின் (கைகேயிக்கு வரமளித்தது) பயனை நீ அனுபவிக்கப் போகிறாய்'' என்று கூறிக் கண்ணீர் மல்கக் கதறுகிறார்.

மன்னர் சீதையைக் கானகம் செல்லவேண்டாமென்றும், அவளுடைய தந்தையுடனாவது, தன்னுடனாவது தங்குமாறும் கூறுகிறார். வசிட்டர், சுமந்திரர் இவர்களின் மனைவிமார்களும் அவ்வாறே கூறுகிறார்கள். கைகேயி இராமனைக் காட்டிற்குப் புறப்படுமாறு விரைவுபடுத்துகிறாள். அவள் பேச்சு தசரதருக்கு அம்பு துளைத்தது போல் இருந்தது. அவர், 'என் உயிர் போகாதா?' என்று சொல்லி வருந்துகிறார். இராமன் மரவுரி தரித்துக் கொண்டு தந்தை, தாயர், வசிட்டர் இவர்களை வணங்கிவிட்டுக் கால்நடையாகவே புறப்படுகிறான். இராமன் புறப்பட்டபோது இலங்கையில் தீய சகுனங்கள் நிகழ்ந்தனவாகத் துளசி பாடுகிறார். இச்செய்தி, தசரதர் கண்ணாடியில் தமக்கு நரை தோன்றியதைக் கண்டதை,

*தீங்கு இழை இராவணன் செய்த தீமைதான்*
*ஆங்கு ஒரு நரையதாய் அணுகிற்று.*
(மந்திரப் பட. 3)

என்றும், பட்டாபிஷேக தினத்தின் தலைநாளில் மக்கள் நகரை அலங்கரிப்பதை மந்தரை காணவந்ததை,

*இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல்*
*துன்ன அருங் கொடுமனக் கூனி தோன்றினாள்.*[1]
(மந்தரை சூழ். 39)

என்றும், கம்பர் பாடியவற்றோடு ஒப்புநோக்கத் தகும்.

தசரதர் சுமந்திரரிடம் மூவரையும் தேரிலேற்றிக் காட்டைச் சுற்றிக் காட்டிவிட்டு, 3-4 தினங்களில் திரும்பி வரும்படியும்[2], இராம லட்சுமணர்கள் வர மறுத்தால், சீதையையாவது அழைத்து வரவேண்டுமென்றும் கூறுகிறார். நகர மாந்தர்கள் இராமனின் தேரைப்பின்தொடர்கிறார்கள். இராமன் அவர்களை நகரத்திற்குத் திரும்பிப் போகுமாறு வேண்டுகிறான். அவ்வாறே அவர்கள் சிறிது தூரம் நகர்நோக்கி நடந்துவிட்டுப் பின்னர் இராமனால் மீண்டும் கவரப்பட்டு அவனைப் பின்தொடர்கிறார்கள். (தசரதர் இராமனின் தேரின் பின்னால் நடந்து போனதாக வான்மீகி பாடியதைக் கம்பரும், துளசியும் கூறவில்லை.)

---

[1] துன்ன அரும் - பிறரால் அணுகுதல் அரிய.

[2] இச்செய்தி, இராமன் தான் கானகம் செல்வதற்காக வருந்தும் சுமித்திரையைச் சமாதானப் படுத்துவதற்காக அவளிடம், ''நான் கானகம் சென்று அதைச் சற்றுக் கண்டுவிட்டு மீண்டு வந்துவிடுவேன்.''

*கார்வான் நெடுங்கான் இறைகண்டு இஙன்*
*மீள்வென்.* (நகர் நீங்கு. 145)

என்று கூறியதாகக் கம்பர் பாடுவதோடு ஒருபுடை ஒத்திருத்தல் காண்க.

இறை - சற்று. இஙன் - இங்கே.

20. யாத்திரா தானம்

வான்மீகி: இராமன் கானகத்திற்குப் புறப்படும் போது, முனிவர்கள், ஞானிகள், வித்வான்கள், அந்தணர்கள், வேலைக்காரர்கள், ஏழைகள் முதலியோருக்கு நகைகள், படுக்கை, ஆடு, மாடு, யானைகள் என்பனவற்றை வாரி வழங்குகிறான். சீதையும் அந்நிகழ்ச்சியில் அவனுடன் பங்கு கொள்ளுகிறாள். தானம் பெற்றவர்களுள் திரிஜடர் என்ற அந்தணர் குறிப்பிடத்தக்கவர். இராமன் தன் பசுக்கூட்டத்தில் திரிஜடரைக்கொண்டு கழி ஒன்றை எறியச்செய்து, அது சென்று வீழ்ந்த இடம் வரையிலுமுள்ள பசுக்களை அவருக்குத் தானமாக அளிக்கிறான்.

கம்பர்: முதனூலைப் பின்பற்றி இராமன் திரிஜடருக்கு அளித்த கோதானத்தைக் கம்பரும் பாடுகிறார். ஆனால் அவர் அச்செய்தியை அதற்குரிய நகர் நீங்கு படலத்தில் குறிப்பிடாமல், சுந்தரகாண்டத்தில் காட்சிப் படலத்தில் கூறுகிறார். அசோகவனத்தில் சிறையிருக்கும் சீதைக்குப் பழைய நிகழ்ச்சிகள் நினைவுக்குவருகின்றன. இராமன் காட்டிற்குப் புறப்படும் வேளையில் தானம் பெறவந்த அந்தணரான திரிஜடருக்குத் திரளான பசுக்களை அறம் செய்த பின்பும், அவரது, ஆசை தணியாமை கண்டு, இராமன் புன்முறுவல் பூத்ததை நினைவு கூர்ந்து, சீதை வருந்தியதாகக் கம்பர் பாடுகிறார்.

துளசிதாசர்: வசிட்டரின் வீட்டுவாசலில் கூடிநின்ற அந்தணர்களுக்கு ஒரு வருடத்திற்குப் போதுமான பொருள்களை அளிக்குமாறு இராமன் முனிவரை வேண்டுகிறான்.

21. மூவரும் சுமந்திரரிடம் செய்தி சொல்லி அனுப்புதல்

வான்மீகி: சுமந்திரர் தம்மையும் கானகத்திற்கு அழைத்துச் செல்லும்படி இராமனிடம் மன்றாடுகிறார். அவருடைய சேவை நாட்டிற்கும், தசரதருக்கும் தேவைப்

படுவதை எண்ணி, இராமன் அவரை நாட்டிற்கே திரும்பிச் செல்லும்படி வற்புறுத்துகிறான். சுமந்திரர் இராமனது ஆணைக்குக் கட்டுப்பட்டு அயோத்திக்குத் திரும்புகிறார். அவரிடம் இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் அயோத்தியிலுள்ள தமது உறவினர்களுக்கு அறிவிக்குமாறு சில செய்திகளைச் சொல்லுகிறார்கள்.

*இராமன் கூறும் செய்தி:* முதலில், தந்தையைத் தான் வணங்குவதாக அவரிடம் அறிவிக்கும்படியும், அன்னை அக்கினி காரியங்களைத் தவறாமல் செய்து வருவதுடன் தந்தைக்கும் பணிவிடை புரிய வேண்டுமென்று தாம் வேண்டிக்கொண்டதாக அவளிடம் அறிவிக்கும்படியும் கூறுகிறான். அதன்பின், பரதனைத் தான் நலம் விசாரித்ததாகவும், தந்தையை நாட்டில் இருத்தி, அவருக்குப் பணிவிடைகளைக் குறைவின்றிச் செய்ய வேண்டும் என்றும், கைகேயியைப் போலக் கோசலையையும் அன்பாக நடத்த வேண்டுமென்றும் தான் கேட்டுக் கொண்டதாகவும் பரதனிடம் அறிவிக்குமாறு கூறுகிறான்.

*இலக்குவன் கூறும் செய்தி:* தசரதர் எந்தக் குறைகளை இராமனிடம் கண்டு நாட்டை அவனுக்கு அளிக்காமல் பரதனுக்கு அளித்தார்? இராமனுக்கு முதலில் அளித்த அரசைப் பிறகு கைகேயி கேட்டதற்காகப் பரதனுக்கு அளிக்கலாமா? என்னும் இரு கேள்விகளையும் தான் வினவியதாக மன்னரிடம் அறிவிக்கும்படி கூறுகிறான். மேலும், 'மூத்த புதல்வனைத் தள்ளக்கூடாது' என்று ஸ்மிருதி கூறுவதையும், 'அறநெறியிலிருந்து விலகிய தந்தையை அகற்றிவிட வேண்டும்' என்று சாஸ்திரங்கள் சொல்வதையும் அரசருக்கு நினைப்பூட்டி, அறநெறியில் வழுவிய அவரைத் தான் தந்தையாக நினைக்கவில்லை என்பதையும் அவரிடம் அறிவிக்குமாறு சுமந்திரரை வேண்டுகிறான்.

*சீதை:* செய்தி எதையும் சொல்லி அனுப்பவில்லை.

கம்பர்: இராமன் சுமந்திரரிடம், வசிட்டரையும், தந்தையையும், தாய்மார்களையும் தான் வணங்கும் செய்தியை அவர்களுக்கு அறிவிக்குமாறும், தந்தை தன்னிடம் வைக்கும் அன்பைச் சிற்றன்னையிடமும், பரதனிடமும் வைக்கும்படி அவரைத் தான் வேண்டியதாகக் கூறுமாறும், தான் கானகம் வந்தது சிற்றன்னையால் நிகழ்ந்ததன்று என்பதைப் பரதனுக்கு உணர்த்துமாறும் கேட்டுக் கொள்ளுகிறான். (இதன் விரிவை இந்நூல் 8-ஆம் அதிகாரத்தில்காண்க.)

துளசிதாசர்: இராமன் சுமந்திரரிடம், தந்தை தன் பொருட்டுக் கவலைப்படாதபடி அவருக்கு ஆறுதல் கூறுமாறு வேண்டுகிறான். இலக்குவன் மன்னரிடம் அறிவிக்குமாறு வன்சொற்களைக் கூறத் தொடங்கியதை இராமன் தடுத்து விடுகிறான். சீதை மாமிமார்கள் தனக்காகக் கவலைப்படா திருக்குமாறு தான் வேண்டிக் கொண்டதாக அவர்களிடம் அறிவிக்குமாறு கூறுகிறாள்.

---

## 16. ஒப்பாய்வு — பிற்பகுதி

### (பரதன் இராமனிடம் பாதுகை பெறுதல் வரை)

**22.** சுமந்திரர் இராமனைக் கானகத்து உய்த்து மீளுதல்

வான்மிகி: இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரையும் தேரிலேற்றி, நகரமாந்தர் பின் தொடரக் காடுநோக்கிச் செல்லும் சுமந்திரர் முதல் நாளிரவில், தமஸா நதிக்கரையில் பயணத்தை முடித்துக்கொள்ளு கிறார். எல்லோரும் துயிலில் ஆழ்ந்திருக்கும் நள்ளிர வில் சுமந்திரர். இராமன் கூறியபடி தேரைச் சிறிது தூரம் அயோத்தி நோக்கி ஓட்டிச் சென்றுவிட்டுப் பின் ஓர் உபாயத்தால் தேரின் சுவடு தெரியாமல் திருப்பிக் கொண்டு வந்து, அதில் மூவரையும் ஏற்றி யாருமறியாமல் சிருங்கிபேரபுரத்திற்குக் கொண்டு செல்கிறார். காலையில் விழித்தெழுந்த மக்கள் இராமனைக் காணாமையால், சுமந்திரர் அவனை நாட்டிற்குக் கொண்டு சென்றிருப்பார் என்ற நம்பிக்கையில் ஊர் திரும்புகிறார்கள் (இவ்வாறு துயிலுணர்ந்த மக்கள் சுமந்திரர் இராமனை நகரத்திற்கு அழைத்துச் சென்றிருப்பார் என்ற நம்பிக்கையில் தாமும் நகர் திரும்பிய செய்தியைக் கம்பரும், துளசியும் பாடு கிறார்கள்,) சிருங்கிபேரபுரத்தில் சுமந்திரர் உட்பட நால் வரும் குகனுடன் ஒருநாள் தங்குகின்றனர். மறுநாள் இராமன் சுமந்திரரை அயோத்திக்குச் செல்லுமாறு விடை கொடுத் தனுப்பிவிட்டுச் சீதையுடனும் இலக்குவனுடனும் குகன் அமைத்து வைத்த படகிலேறிக் கங்கையைக் கடந்து தன் பயணத்தைத் தொடர்கிறான்.

இராமனிடம் விடைபெற்ற சுமந்திரர் உடனே அயோத் திக்கு மீளவில்லை. இராமன் மனம் மாறித் திரும்பி வர மாட்டானா என்ற ஆசைப் பெருக்கில் மூன்று நாள்கள் குகனுடன் தங்குகிறார். இராமன் பரத்துவாசரைச் சந் தித்துவிட்டு, சித்திரகூட மலைக்குச் சென்று, அங்குப் பர்ணசாலை அமைத்துத் தங்கிய செய்தியைக் குகனின்

ஒற்றர்கள் அறிந்து வந்து சொல்வது வரைக்கும் சுமந்திரர் அங்குத் தங்கிப் பின் நிராசையுடன் புறப்பட்டு, 3 நாள்களாகச் செய்த பயணத்தின் பின் நகருக்குத் திரும்புகிறார். சுமந்திரர் இராமனைக் காட்டிற்கு இட்டுச்சென்ற நாளிலிருந்து பத்துத் தினங்கள் கழிந்தபின்னரே அயோத்திக்கு மீளுகிறார் எனபதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். (வான்மீகியின் கணக்கின்படி கங்கையை அடைய 3 நாள்கள். இராமன் குகனுடன் தங்கிய நாள் 1. இராமன் கானகம் சென்றபின், ஒற்றர்கள் மூலம் செய்தியறியக் குகனுடன் தங்கியிருந்த நாள்கள் 3. அங்கிருந்து அயோத்திக்கு மீண்டுவரத் தேவையான நாள்கள் 3 ஆக 10 நாள்கள்.)

கம்பர்: சுமந்திரர் இராமன் முதலிய மூவரையும் தேரிலேற்றி, முதல்நாள் முன்னிரவில் முனிவர்கள் வாழும் ஒரு சோலைக்கு இட்டுச்செல்கிறார். அன்று நள்ளிரவில் அவர் இராமன் பணித்தபடி அங்கிருந்து புறப்பட்டு மறுநாள் அயோத்தி வந்தடைகிறார்.

*கடிகை ஓர் இரண்டு முன்றில் கடிமதில்*
*அயோத்தி கண்டார்.* (தைலமாட்டு. 55)

(சுமந்திரர் தமஸா நதிக்கரை வரைக்கும் சென்று அன்றிரவு அங்குத் தங்கியதாகவோ, மறுநாள் மூவரையும் அங்கிருந்து சிருங்கிபேரபுரத்திற்குக் கொண்டு சென்றதாகவோ கம்பர் பாடவில்லை. இதனால் சிருங்கிபேரபுரத்தை ஆளும் குகனைச் சந்திப்பதற்குரிய வாய்ப்பு சுமந்திரருக்கு அமையவில்லை.)

துளசிதாசர்: இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும், அவர்களைப் பின்தொடர்ந்து செல்லும் நகர மாந்தர்களும் முதல் நாளிரவில் தமஸா நதிக்கரையில் தங்குகிறார்கள். நள்ளிரவில் இராமன் கூறியபடி சுமந்திரர் மூவரையும் தேரிலேற்றி, வெகுதூரம் பயணம் செய்து கங்கைக் கரையை அடைகிறார். அங்கு இராமன் குகனைச் சந்திக்கிறான். இராமனைக் கங்கைக் கரையில் விட்டு

விட்டுச் சுமந்திரர் அயோத்திக்குத் திரும்புகிறார். இராமன் சுமந்திரரைத் 'தந்தை' என்று அழைப்பதால் அவன் அவரிடம் வைத்த நன்மதிப்புப் புலனாகிறது.

(சுமந்திரர், இராமன் முதலிய மூவரையும் தேரிலேற்றிக் கங்கைக்கரை வரைக்கும் சென்று அங்கு விட்டுவிட்டு மீண்டதாக வான்மீகியும், துளசியும் பாடும்போது, கம்பர் கங்கைக்கு இப்பால் முனிவர்கள் வசிக்கும் ஒரு சோலையில் விட்டுவிட்டு மீண்டதாகப் பாடுகிறார்.)

23. தசரதர் சலபோச முனிவர்பால் பெற்ற சாப வரலாறு

இச்செய்தியை வான்மீகியும் துளசியும் பாடும் சந்தர்ப்பம் ஒன்றாகவும், கம்பர் பாடும் சந்தர்ப்பம் வேறாகவும் உள்ளன.

வான்மீகி: இராமனைக் காட்டில் உய்த்துவிட்டு மீண்டுவந்த சுமந்திரர் அச்செய்தியை மன்னரிடம் கூறிய அன்று நள்ளிரவில், மகனின் பிரிவால் அலமரும் மன்னர் கோசலையிடம் சாப வரலாற்றைக் கூறுகிறார்; கூறிய சிறிது நேரத்தில் உயிர் துறக்கிறார். சாப நிகழ்ச்சி தசரதர் திருமணமாகுமுன், இளவரசராக இருந்த காலத்தில் நடந்தது.

கம்பர்: இராமன் கானகம் செல்லுமுன், அவன் தம்மைப் பிரிந்தால் தாம் இறத்தல் உறுதி என்பதைத் தசரதர் கோசலைக்குக் கூறும்போது, அதை வலியுறுத்துவதற்காகச் சாபச் செய்தியைச் சொல்லுகிறார். சாப நிகழ்ச்சி, தசரதர் மணமாகி மக்கள் பிறப்பதற்கு முன்பு, நடந்தது. முனிவரிட்ட சாபம் மன்னர்க்கு வருத்தத்தை உண்டுபண்ணுவதற்குப் பதிலாகத் தமக்கு மகன் பிறப்பான் என்ற நம்பிக்கையை ஊட்டி, அவரை மகிழ்ச்சியடையச் செய்தது. (சாப வரலாற்றை இந்நூல் 6 ஆம் அதிகாரத்தில் காண்க)

துளசிதாசர்: இராமன் நாடு திரும்பவில்லை என்பதைச் சுமந்திரர் வாயிலாக அறிந்து அங்கலாய்க்கும்

தசரதருக்குக் கோசலையும் சுமந்திரரும் ஆறுதல் கூறும் வேளையில், தசரதர் சாபச் செய்தியைக் குறிப்பிடுகிறார். அவர் சாப நிகழ்ச்சியை விளக்கிக் கூறியதாகத் துளசி பாடவில்லை.

24. தசரதரின் மரணம்

வான்மீகி: இராமனைக் காட்டிற்குக் கொண்டு சென்ற சுமந்திரர், அவனை அழைத்து வருவார் என்ற நம்பிக்கையில், 10 நாள்கள் உயிர் தாங்கியிருந்த மன்னரிடம், சுமந்திரர் மீண்டுவந்து, 'இராமன் வரவில்லை' என்ற செய்தியை அறிவிக்கிறார். நம்பிக்கை இழந்த தசரதர் இராமனின் பிரிவை ஆற்ற இயலாது அன்றிரவே மரணமடைகிறார். பக்கத்திலிருந்த கோசலையும், சுமித்திரையும், மக்களைப் பிரிந்த சோகத்தில் அயர்ந்து உறங்கிவிட்டமையால், மன்னர் இறந்ததை அறியவில்லை. மறுநாள் காலையில் அரண்மனைப் பெண்கள் மன்னர் உடலில் உயிர்த்துடிப்புத் தென்படாமை கண்டு, மன்னர் இறந்து விட்டார் என்று அழத் தொடங்கினார்கள். உடனே எல்லோரும் விழித்தெழுந்து அழுகிறார்கள். கோசலையின் பிரலாபத்தைக் கண்டு, சில பெண்கள் அவளை வேறிடத்திற்கு அழைத்துச் செல்கிறார்கள்.

கம்பர்: சுமந்திரர் இராமனை அழைத்து வருவார் என்றெண்ணி, அவர் வரவை ஆவலோடு எதிர்பார்த்திருக்கும் மன்னரிடம் 'தேர் வந்தது' என்ற செய்தி அறிவிக்கப்படுகிறது. அரசர் பக்கத்தில் நின்ற வசிட்டரிடம் "இராமன் வந்தானா?" என்று வினவுகிறார். அவர் பதில் கூறமாட்டாது அவ்விடம் விட்டகல்கிறார். அவ்வேளையில் அங்கு வந்த சுமந்திரரிடமும் மன்னர் "இராமன் எங்குள்ளான்?" என்று வினவுகிறார். அவர் உண்மையை உரைத்த அக்கணமே மன்னர் உயிர் நீங்கினார். செய்தியறிந்து வசிட்டர் விரைந்து வருகிறார். எல்லாத் தேவிமார்களும் அழுது சாம்புகின்றனர்.

(இராமன் பிரிந்தபின்பும் பத்துத் தினங்கள் தசரதர் உயிர் வாழ்ந்திருந்ததாக வான்மீகி அமைத்த கதையை விட, இராமன் பிரிந்த மறுநாளிலேயே, அவன் திரும்பி வாரான் என்பதை அறிந்த அக்கணமே தசரதர் ஆவி போனார் என்று கம்பர் கூறும் வரலாறு, மன்னர் இராமனைத் தம் உயிருக்கு உயிராக மதித்து வந்த உண்மையை அரண் செய்வதாகவும், அவர் முன்பு இராமனது பிரிவை ஆற்றாது வருந்தும்போது,

*நெகுதற் கொத்த நெஞ்சும் நேயத்தால் ஆவி*
*உகுதற் கொத்த உடலு முடையேன்.*[1]
(நகர் நீங்கு. 60)

என்றும்,

*வான் இன்றே அடைய மாட்டேனாகில் அன்றோ*
*வன்கண் என்கண்.*[2] (ஷை 64)

என்றும் கூறியதற்குப் பொருத்தமாகவும் அமைந்து, கம்பரது மேதைக்குச் சான்றாகிறது.)

துளசிதாசர்: சுமந்திரர் இராமனைக் காட்டில் உய்த்து விட்டு நாட்டிற்குத் திரும்புகிறார். இராமன் வரவில்லை என்ற செய்தியை மன்னரிடம் கூறத் தயங்கி, பகற்பொழுதை ஒரு மரத்தடியில் கழித்துவிட்டு, இரவு வேளையில் நகருக்குள் வருகிறார். தேரை அரண்மனை வாயிலில் நிறுத்திவிட்டு, உள்ளே புகுந்து, கோசலாதேவியின் அறைக்குள் மன்னர் தரையில் பரிதாபநிலையில் கிடப்பதைக் காண்கின்றார். சுமந்திரர் மன்னர்முன் வீழ்ந்து வணங்குகிறார். மன்னர் மயக்கத்துடன் எழுந்து சுமந்திரரை மார்போடு அணைத்துத் தழுவுகிறார். இராமன் சொல்லியனுப்பிய செய்தியைச் சுமந்திரர் அரசர்க்குக் கூறுகிறார். கேட்ட மன்னர் மகனின் பிரிவை ஆற்றாது தளர்கிறார். சுமந்திரரும், கோசலையும் அவரைச் சமா

---

[1] நெகுதல்-நெகிழ்தல் நேயம்-அன்பு உகுதல்-விடுதல்.

[2] வான் - விண்ணுலகம். வன்கண் - கொடுமை. என்கண்-என்னிடம்.

தானப்படுத்துகிறார்கள் அவ்வேளையில் தசரதர், சாப வரலாற்றைக் கூறுகிறார். கூறிமுடித்ததும் உயிர் உடலை விட்டு அகன்றுவிடுகிறது.

25. இராமன் – குகன் சந்திப்பு

வான்மீகி: இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் சிருங்கிபேரபுரம் வந்து, ஒரு மரத்தடியில் தங்கியிருப்பதை, அந்நாட்டை ஆளும் வேடர்குலத் தலைவனும், இராமனுக்கு முன்பே உயிர்த்தோழனுமான குகன் என்பவன் அறிகிறான். குகன் வயதானவன். தண்டகாரண்யத்தில் பிறந்து வளர்ந்து, அதைப் பற்றிய செய்திகளை நன்கறிந்தவன். குகன் தன் அமைச்சர்களோடும், உறவினர்களோடும், மாமிசம் உட்படப் பலவகை உணவுப் பொருள்களைக் கையுறையாகக் கொண்டு இராமனைக் காணவருகிறான். இராமனும், இலக்குவனும் எதிர்சென்று அவனை வரவேற்கிறார்கள். குகன் தனக்கு உள்ளவெல்லாம் இராமனுக்கு அளிப்பதாகக் கூறி, அங்கிருந்து தன் நாட்டை ஆளும்படி அவனை வேண்டுகிறான். இராமன் குகன் கொண்டுவந்த பொருளைத் தான் ஏற்பது தன் தவ வாழ்விற்குப் பொருந்தாது என்று கூறி மறுத்துவிடுகிறான். மேலும், தான் அரச குலத்தவனாதலால் பிறர்க்கு ஒன்றைக் கொடுப்பதையன்றி, எதையும் அவர்களிடமிருந்து பெறக் கூடாதென்றும் கூறுகிறான். இராமன் இரவில் உணவு எதையும் அருந்தாமல் கங்கை நீரைப் பருகிப் படுத்துக்கொள்ளுகிறான் (சரு.87). இராமனும், சீதையும் துயிலும்போது குகன், இலக்குவனுடனும், சுமந்திரருடனும், இராமனின் கல்யாண குணங்களைப் பற்றிப் பேசிக்கொண்டே கையில் வில்லும் அம்பும் தாங்கி அவர்களைக் காவல்புரிகிறான் மறுநாள் இராம லட்சுமணர்கள் குகன் அளித்த ஆலம்பாலால் தமது முடியைச் சடையாகத் திரித்துக் கொள்ளுகிறார்கள். (முடியைச் சடையாகத் திரித்த செய்தியைத் துளசி பாடுகிறார்; கம்பர் பாடவில்லை.) அப்போது அவர்கள் துறவிகள் போல் காட்சி அளித்தனர். இராமன் தன்னுடன் வரவிரும்பிய

சுமந்திரரின் வேண்டுகோளை ஏற்காமல், அவரை அயோத்திக்குச் செல்லுமாறு விடை கொடுத்தனுப்பு கிறான். பின்னர், குகன் ஏற்பாடு செய்த ஓடத்தில் ஆடை அணிகளையும், வில். அம்பு, கத்தி, கவசம் முதலிய படைக் கலங்களையும் வைத்துக்கொண்டு மூவரும் ஏறி, படகைக் குகனின் ஆட்கள் இயக்கக் கங்கையைக் கடந்து மறுகரை எய்துகின்றனர்.

**கம்பர்:** இராமன் சீதையுடனும், இலக்குவனுடனும் கங்கைக் கரையில் முனிவர்களின் ஆசிரமத்தில் தங்கி யிருக்கும் செய்தியைக் குகன் அறிகிறான். குகன் நாகரிக மற்ற துடுக்கான இளைய வேடன். அவன் இராமனை முன்பு அறியாதவன்; எனினும் இராமன் மீது காரணம் கூறமுடியாத பேரன்பு வைக்கிறான். குகன், மீனும் தேனும் கையுறையாகக்கொண்டு இராமனைக் காண வரு கிறான். அவனுடைய தூய அன்பைக் கண்டு இராமன் அவனைத் தன்னுடன் இருக்க அனுமதிக்கிறான். இரவில் இராமன் துயிலும்போது இலக்குவனுடன், குகனும் அவ னது வீரர்களும் காவல் புரிகிறார்கள். மறுநாள் குகன், இராமன் முதலிய மூவரையும் ஒரு படகில் ஏற்றித் தானே ஓட்டிக் கங்கையைக் கடத்தி மறுகரை சேர்க்கிறான். குகன் இராமனுக்குத் தொண்டு செய்யத் தன்னையும் கூட்டிச் செல்லுமாறு வேண்டுகிறான். அவனது அன்பை வியந்த இராமன் அவனைத் தன் உடன்பிறந்தவர்களுள் ஒருவனாகக் கூறிப் பாராட்டுகிறான். தான் திரும்பி வரும் போது சந்திப்பதாகக் கூறிக் குகனை விடைகொடுத்து அனுப்புகிறான். (இராமன் குகனைத் தன் உடன்பிறந்த வனாகப் பாராட்டிய செய்தியை வான்மீகியும் துளசியும் பாடவில்லை.)

**துளசிதாசர்:** இராமன் கங்கைக்கரைக்கு வந்திருப் பதைக் குகன் அறிகிறான். உடனே இராமன் முன் போந்து வணங்கி, அவனைத் தனது நகரத்துக்கு அழைக் கிறான். இராமன் வனவாச வாழ்க்கையில அது கூடா தென்று மறுக்கிறான். குகன் கொணர்ந்த காய், கனி,

கிழங்குகளைச் சுமந்திரர் உட்பட நால்வரும் அருந்து கின்றனர். இராமன் துயிலச்சென்றபோது இலக்குவன் அவனுக்குக் கால் பிடிக்கிறான். இராமன் துயின்றவுடன் இலக்குவன் சற்றுத் தொலையில் இருந்து அவனைக் காவல் புரிகிறான். சுமந்திரரும், இலக்குவனும் இரா மனின் மகிமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது, குகனும் அவனது வீரர்களும் இராமன் உறங்கும் இடத் தைச் சுற்றிக் காவல் புரிகின்றனர். இராமன் சீதையிடம், தன் தந்தை அவளை நாட்டிற்கு அழைத்து வரும்படி சுமந்திரரிடம் சொல்லியனுப்பிய செய்தியை அறிவித்து, அவளைச் சுமந்திரருடன் நாட்டிற்குச் செல்லும்படி வற் புறுத்திக் கூறுகிறான். ஆனால், சீதை இராமனுடன் இருப்பதையே தான் விரும்புவதாகவும், அதுவே தனக்கு மகிழ்ச்சி அளிக்குமென்றும் கூறி, நகரத்துக்குச் செல்லு தலை மறுத்து விடுகிறாள். சுமந்திரர் இராமனிடம் தம்மையும் அவனுடன் அழைத்துப்போக வேண்டுமென்று இரந்து வேண்டுகிறார். இராமன் தக்க சமாதானங் களைக் கூறி, அவரை ஊருக்குச் செல்ல இணங்க வைக்கிறான்.

சுமந்திரரை அனுப்பிவிட்டு இராமன் கங்கையைக் கடக்க ஒரு படகோட்டியை அழைத்தான். துளசிதாசர் இங்கு ஒரு புதுமையான நிகழ்ச்சியைச் சித்திரிக்கிறார். படகோட்டி இராமனிடம், ''ஐயா உமது கால் தூளியால் கல் பெண்ணானதாகக் கேள்விப்பட்டேன். நீர் படகில் ஏறி, உமது பாத தூளிபட்டு எனது படகும் ஒரு பெண் ணாக மாறிவிட்டால் எனது பிழைப்புக் கெட்டுவிடும். ஆதலால் நீர் படகில் ஏறுமுன் உமது பாதத்தைக் கழுவி, தூசியைப் போக்குவதற்கு எனக்கு அனுமதி தாரும்'' என்று வேண்டினான். இராமன் அதற்கு இணங்கவே, படகோட்டி இராமனின் திருப்பாதங்களைக் கழுவி, அப் புனித நீரைத் தானும் பருகி, தன் உறவினர்களுக்கும் அளித்தான். பின்னர், படகோட்டி மூவரையும் தன்படகில் ஏற்றி அக்கரை சேர்த்தான். சீதை அவனுக்குக் கூலி

யாகத் தனது மோதிரத்தைக் கொடுத்தாள். அவன் இராமனைப் படகில் ஏற்றி வந்ததால் தன் வறுமை, துன்பம் யாவும் அகன்று விட்டதாகக் கூறி, ஆழியை ஏற்க மறுத்து விட்டான். இராமன் கங்கைக்கரையில் மண்ணில் சிவலிங்க உருவம் செய்து வழிபட்டான். சீதை கங்கையை வணங்கினாள். கங்காதேவி, ''நீங்கள் மகிழ்ச்சி யோடு திரும்புவீர்கள்; உங்கள் புகழ் எங்கும் பரவுக'' என்று ஆசி கூறினாள். (இவ்வாறு தெய்வங்கள் பேசியன வாகத் துளசிதாசர் பாடும் இடங்கள் பல உள்ளன. தெய்வங்கள் பேசின என்பதை அவை அசரீரியாகப் பேசின எனக் கொள்ளுதலே தகும்.)

இராமன் குகனைத் திரும்பிப் போகச் சொன்னான். அவன் இராமனுடனிருந்து அவனுக்குப் பணிபுரிய விரும் பினான். இராமன் அதற்குச் சம்மதித்துச் சில தினங்கள் அவனைத் தன்னுடன் வைத்துக்கொள்ளுகிறான். இரா மன் பரத்துவாசர் ஆசிரமத்துக்குச் செல்லும்போது குக னையும் தன்னுடன் அழைத்துப் போகிறான். முனிவரை வணங்கி அவர் ஆசிரமத்திலிருந்து வெளிவரும்போது இராமன் குகனுக்கு அன்பு மொழியும், அறிவுரையும் கூறி ஊருக்கு அனுப்பி வைக்கிறான். குகன் சிருங்கிபேரபுரம் வந்ததும், அங்குத் தனக்காகக் காத்திருக்கும் சுமந்திர ரைச் சந்தித்து அவருக்கு விடைகொடுத்து அயோத்திக்கு அனுப்புகிறான்.

26. இராமன் பரத்துவாசரைச் சந்தித்தல்

*வான்மிகி:* இராமன் முதலிய மூவரும், கங்கையும் யமுனையும் சேரும் பிரயாகை நோக்கி வரும்போது, சூரியன் மறையும் வேளையில், பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தை அடைகிறார்கள். பரத்துவாசர் தவ வலிமை மிக்கவர். முக்காலமும் உணர்பவர். அவர் இராமனைக் கண்டதும் மகிழ்ச்சியோடு ''உன்னையே நான் நினைத் துக் கொண்டிருக்கிறேன். இன்று உன்னைக் காணக் கிடைத்தது எனது பாக்கியம்'' என்று கூறி வரவேற்

கிறார். முனிவரின் இச்சொற்களிலிருந்து அவர் இராமனைப் பரம்பொருளின் அவதாரமாகவே உணர்கிறார் என்பது புலனாகிறது. முனிவர் அவர்களுக்கு உணவளித்து உபசரித்தபின் இராமனைப் பிரயாகையின் பக்கமே தங்கும்படி கூறுகிறார். இராமன் தான் அங்கிருந்தால் அயோத்தி மக்கள் அடிக்கடி வந்து, தன் அமைதியைக் குலைப்பார்கள் என்று கூறி, வேறிடம் செல்லும் தன் விருப்பத்தை வெளியிடுகிறான். பரத்துவாசர் சித்திரகூட மலையின் சிறப்புக்களைச் சொல்லி, அங்குச் செல்லுமாறு கூறுகிறார். மலையின் சிறப்பைக் குறிப்பிடும்போது, அது இயற்கை வனப்பு மிக்கதென்றும், அங்குத் தேன், பழம், கிழங்குகள் மிகுதியாகக் கிடைக்குமென்றும் கூறி, அவற்றுடன் அங்குத் தவம் செய்யும் முனிவர்கள் சரீரத்தோடு சொர்க்கத்தை அடைகிறார்கள் என்னும் புதுமையான கருத்தொன்றையும் கூறுகிறார். மூவரும் முனிவரை வணங்கிப் பிரியும்போது அவர் அவர்களுடன் சிறிது தூரம் நடந்துசென்று, சித்திரகூடத்திற்குச் செல்லும் வழியைக் கூறி அனுப்பி வைத்தார்.

கம்பர்: மூவரும் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தை அடுத்தபோது அவர் எதிர்சென்று வரவேற்கிறார். கம்பர் இங்கு இராமனைப் 'பிறவி நோய்க்கு மருத்துவன்' என்று குறிப்பிடுகிறார். இராமனின் துறவி வேடத்தைக் கண்டு முனிவர் வருந்துகிறார். இராமன் நாட்டில் நடந்தவற்றைக் கூறுகிறான். முனிவர் எல்லோர்க்கும் உண்டியும், உறையுளும் அளித்து உபசரிக்கிறார். முனிவர், இராமனருகில் தாம் வசிக்க நேர்ந்தால் தமக்கு நற்கதி கிடைக்கும் என்ற கருத்தில், பிரயாகையின் புனிதத் தன்மையையும், வாழ்க்கைச் சௌகரியங்களையும் இராமனிடம் எடுத்துச்சொல்லி, அங்குத் தங்குமாறு வேண்டுகிறார். இராமன் அதை ஏற்காமல் வேறிடம் செல்ல விரும்பியபோது, முனிவர் சித்திரகூட மலையைக் குறிப்பிட்டு, அங்குச் செல்லுமாறு கூறி, வழியனுப்பி வைக்கிறார்.

துளசிதாசர்: இராமன் பிரயாகையில் சிவ வழிபாட்டை முடித்துக்கொண்டு, சீதை, இலக்குவன், குகன் இவர்களுடன் பரத்துவாசரின் ஆகிரமத்துக்குச் செல்லுகிறான். இராமனைக் கண்டதும் முனிவர் கடவுளே தம் முன் காட்சியளிப்பதான, பக்தி அனுபவத்தில் திளைக்கிறார். முனிவர் தாம் செய்த தவம் முற்றி, அன்று பயன் விளைத்ததாக இராமனைப் போற்றுகிறார். முனிவர் அவர்களுக்கு உணவளிக்கிறார். இராமனைக் காண அக்கம்பக்கத்திலுள்ள துறவிகள் அங்கு வந்து குழுமுகின்றனர். மறுநாள் முனிவரை வணங்கிவிட்டு, அவர் அனுப்பிய சீடர்கள் வழிகாட்ட மூவரும் சித்திரகூடம் நோக்கிப் பயணமாயினர். வழியில் சில பெண்கள் நாணத்தோடு சீதையை அணுகி, "இரு ஆடவர்களும் யாவர்?" என்று வினவுகிறார்கள். சீதையும் நாணம் மேலிட்டு, இலக்குவனைக் கொழுந்தன் என்று கூறிப் பின் முகத்தை முன்றானையால் மறைத்துப் பார்வையை இராமன் பக்கமாகத் திருப்பி அவனே தன் கணவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தினாள்.

## 27. சித்திரகூடத்தில் மூவரும் பர்ணசாலை அமைத்துத் தங்குதல்

வான்மீகி: பரத்துவாசரிடமிருந்து விடைபெற்று மூவரும் சித்திரகூடத்தை நோக்கிப் பயணமாகி, எதிர்ப்பட்ட காளிந்தி நதியைத் தெப்பத்தால் கடந்து, ஒரு காட்டை அடையும்போது பொழுது சாய்கிறது. அன்றிரவை அவர்கள் அக்காட்டில் கழிக்கிறார்கள். மறுநாள் காலையில் இராமன் இலக்குவனைத் துயிலெழுப்புகிறான் என்றும், அவன் தூக்கம் கலைந்து, வழி நடந்த இளைப்பையும், சோம்பலையும் போக்கி எழுகிறான் என்றும் வான்மீகி பாடுகிறார். (இச்செய்தி இலக்குவன் இராமனது வனவாச காலமான 14 ஆண்டுகளும் உறக்கம் தவிர்ந்திருந்தான் என்று கம்பர் பாடிய கருத்தோடு மாறுபடுகிறது. முரண்பட்ட இச் செய்திகள் ஆராயத்தக்கன.) வழியில் மூவரும் வான்மீகி முனிவரின் ஆசிரமத்துக்குச்

சென்று அவரை வணங்குகிறார்கள். சித்திரகூடத்தை அடைந்ததும் இலக்குவன் பர்ணசாலை அமைக்கிறான். அதனுள் குடிபுகும்போது இராமன், சிவ விஷ்ணு சம்பந்த மான இரு யாகங்களைப் புரிகிறான். அதில் அவன் மானின் மாமிசத்தைத் தேவர்களுக்கு ஆகுதியாக அளிக் கிறான். பின்னர் மூவரும் அப் பர்ணசாலையில் மகிழ்ச்சி யோடு வசித்து வருகிறார்கள்.

கம்பர்: காளிந்தியாற்றைக் கடந்து செல்லும்போது ஒரு பாலைவனம் குறுக்கிடுகிறது. அதன் வெப்பத்தைச் சீதை தாங்குவாளா என்று இராமன் எண்ணியதும், அது சில்லெனக் குளிர்கிறது. பாலைவனத்தைக் கடந்ததும் சித்திரகூடத்தை அடைகிறார்கள். இராமன் அதன் எழிலனைத்தும் சீதைக்குக் காட்டுகிறான். கம்பர் 37 கவிகளில் அக்காட்சியை வர்ணிக்கிறார். வர்ணனை முடிந்ததும், இலக்குவன் பர்ணசாலை அமைப்பதை 5 கவிகளில் பாடுகிறார். அப் பர்ணசாலையில் மூவரும் மகிழ்ந்துறைகின்றனர். (இராமன் வான்மீகி முனிவரைச் சந்தித்ததைக் கம்பர் பாடவில்லை.)

துளசிதாசர்: மூவரும் வழியில் வான்மீகி முனிவரை வழிபடுகின்றனர். அவரே சித்திரகூடமலையில் சென்று தங்குமாறு இராமனுக்குக் கூறுகிறார். (இராமனைச் சித்திர கூடத்தில் சென்று தங்குமாறு பரத்துவாசர் கூறியதாக வான்மீகியும், கம்பரும் பாடும் கருத்தோடு இது மாறுபடு கிறது.) வான்மீகி முனிவர் இராமனை உலக நாயக னென்றும், சீதையை, தெய்வசக்தியாகிய மாயையென்றும், இலக்குவனை ஆதிசேடனின் அவதாரம் என்றும் கூறி, அவர்களது தெய்விக மேன்மையை வெளிப்படுத்துகிறார். சித்திரகூட மலையில் மந்தாகினி நதியின் அருகிலுள்ள ஆசிரமத்தில் அத்திரி முனிவரும், அவரது முனிபத்தினி அநசூயையும் வசித்து வருவதையும் கூறுகிறார். சித்திர கூடத்தில் பர்ணசாலையை இலக்குவன் இயற்றவில்லை. விசுவகர்மா தேவர்களுடன் வந்து பெரிதும் சிறிதுமான இரு பர்ணசாலைகளை அமைத்தளிக்கிறார்.

(இராமன் அத்திரி முனிவரை அவரது ஆசிரமத்தில் சென்று வணங்கியதும், அவ்வேளையில் முனிபத்தினியாகிய அநசூயை சீதைக்கு ஆடை அணிகளை அணிந்ததும் ஆகிய செய்திகளை மூன்று காவியப் புலவர்களும் பாடுகின்றனர். முன்பே அணிகளை அணிந்து கானகம் வந்ததாக வான்மீகியும், துளசியும் கூறும் சீதைக்கு, அநசூயை அணிகளை அணிவதைவிட, நகை எதுவும் அணியாமல் கானகம் வந்ததாகக் கம்பர் கூறும் சீதைக்கு அநசூயை அணிகளை அணிவதே, கதை நிகழ்ச்சிக்குத் தேவையாக உள்ளது.)

28. பரதன் அயோத்திக்கு வந்து தந்தையின் ஈமக்கடனை நிறைவேற்றுதல்

வான்மீகி: தசரதர் மரணமடைந்த செய்தியை அறிந்து மார்க்கண்டேயர், மௌத்கல்யர், காசியபர், ஜாபாலி முதலிய முனிவர்கள் பலர் அரண்மனையில் கூடுகிறார்கள். அவர்கள் நாட்டில் அரசனில்லாமையால் வரும் ஏதங்களைக் குறித்துச் சிந்திப்பதை வான்மீகி ஒரு நீண்ட பட்டியலாகக் கூறுகிறார். கேகய நாட்டிலிருக்கும் பரதனை, ‘ஒரு முக்கிய காரியத்திற்காக வசிட்டர் அழைக்கிறார்’ என்று கூறி, அவனைக் கொணர்வதற்காகத் தூதர்கள் செல்கின்றனர். பல தீய சொப்பனங்களைக் கண்டு கவலையுற்றிருக்கும் பரதன், தூதர்களிடமிருந்து செய்தி அறிந்ததும், சத்துருக்னனுடன் உடனே புறப்படுகிறான். வரும் வழியில் கோசலநாடும், அயோத்தி நகரும் பொலிவிழந் திருப்பதைக் கண்டு கவல்கின்றான். கைகேயியைக் கண்ட பின்னர்தான் அவளுடைய சூழ்ச்சியால் இராமன் கானகம் சென்றதையும், தசரதர் மரணமுற்றதையும் அறிகிறான். அவள் மீது கொண்ட கடுங்கோபத்தால் அவளை வன்சொற் கூறி நிந்திக்கிறான். தான் நிரபராதி என்பதைத் தான் செய்த கோரமான சபதத்தின் மூலம் கோசலைக்கு நிரூபிக்கிறான். (சபதம் செய்த நிகழ்ச்சியைக் கம்பரும் துளசியும் பாடுகின்றனர்) வசிட்டர் தசரதரின் உடலைத் தகனம் செய்வதற்கான ஏற்பாடு

களைச் செய்கிறார். பரதன் சிதைக்கு எரியூட்டுகிறான். 14-ஆம் நாளில் உத்தரக்கிரியைகள் நடைபெறுகின்றன.

கம்பர்: (பரதன் தீக்கனாக் கண்டதாகக் கம்பர் பாடவில்லை.) கேகய நாட்டிலிருக்கும் பரதனுக்குத் தூதுவர் மூலம் அறிவிக்க வேண்டிய செய்தியை வசிட்டர் வாய்மொழியாகக் கூறாமல் தாம் அனுப்பும் திருமுகத்தின் வாயிலாக அறிவிக்கிறார். தசரதர் தாம் மரணமடையுமுன் வசிட்டரிடம், 'கைகேயியைத் துறந்தேன். பரதன் உரிமைக்காகான்' எனக் கூறியதை, முனிவர் நிறைவேற்ற எண்ணி, ஈமக்கடனைப் பரதனை விலக்கி, சத்துருக்னனைக் கொண்டு செய்விக்கிறார். நாட்டிற்கு அரசன் இன்றியமையாதவன் என்ற கருத்தை வான்மீகி, தசரதர் இறந்த சந்தர்ப்பத்தில் முனிவர்கள் வாயிலாக விளக்குவதைக் கம்பர், தசரதரின் உத்தரக்கிரியை முடிந்தபின் பரதனை அரசை ஏற்றுக்கொள்ளுமாறு வசிட்டர் கூறும்போது அவர் வாயிலாக விளக்குகிறார்.

துளசிதாசர்: (அரசனில்லாமையால் நாட்டிற்கு உண்டாகும் கேட்டினைத் துளசி பாடவில்லை.) கேகய நாட்டின் தலைநகராகிய இராசகிருகத்தில் வைத்துப் பரதன் துன்னிமித்தங்களைக் கண்டு, அவற்றின் பரிகாரமாகச் சிவ வழிபாட்டினைப் புரிகிறான். பரதன் அயோத்திக்கு வந்து மாளிகை வாயிலைக் குறுகியதும், கைகேயி ஆரத்தி எடுத்து மகனை வரவேற்கிறாள். தசரதரின் இறுதிச் சடங்குகளைப் பரதனே செய்கிறான். ஈமப்படுக்கையில் ஏறி உயிர் துறக்க முன்வந்த தாய்மார்களைப் பரதன் தடுத்துவிடுகிறான். இராமன் மீண்டு வருதலைக் காணும் ஆசையால் அவர்கள் உடன்கட்டை ஏறும் எண்ணத்தைக் கைவிடுகின்றனர். (தசரதரின் இறுதிச்சடங்கைப் பரதன் செய்யாதபடி வசிட்டர் தடுத்து, சத்துருக்னனைக் கொண்டு செய்வித்த செய்தியைக் கம்பர் மட்டுமே பாடுகிறார். அதுபோலவே, தசரதரின் தேவிமார்கள் சககமனம் செய்ய வந்தபோது பரதன் அவர்களைத் தடுத்துவிட்ட செய்தியைத் துளசி ஒருவரே பாடுகிறார்.)

29 சத்துருக்னன் மந்தரையைத் தாக்குதல்

கைகேயிக்குத் துர்ப்புத்தி புகட்டி, நாட்டை இன்னல்களுக்கு உள்ளாக்கிய மந்தரையைச் சத்துருக்னன் தாக்கச் சென்றதையும், இராமனுக்கு அச்செயல் உடன்பாடாக இராது என்ற காரணத்தைக் கூறி, பரதன் அவனைத் தடுத்துவிட்டதையும் மூன்று காவியப் புலவர்களும் பாடுகின்றனர். ஆனால் அந்நிகழ்ச்சி நடந்த சந்தர்ப்பங்கள் வெவ்வேறாக உள்ளன.

வான்மீகி: கேகய நாட்டிலிருந்து பரத சத்துருக்னர்கள் மீண்டு வந்ததை அறிந்த மந்தரை, பரதனுக்கு அபிஷேகம் நடக்கும் என்ற நம்பிக்கையில் தன்னை அலங்கரித்துக்கொண்டு அப்பக்கமாக வருகிறாள். காவல்காரர்கள் அவளைப் பிடித்துச் சத்துருக்னனின் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றனர். சத்துருக்னன் அவளைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளுகிறான். அவள் கதறுகிறாள். அவ்வொலி கேட்டுக் கைகேயி அங்கே வருகிறாள். அவளைக் கண்டவுடன் சத்துருக்னனின் கோபம் அதிகமாகிறது. அவன் அவளைக் கடுமையாக நிந்திக்கிறான். அவள் அஞ்சி, பரதனிடம் சென்று கூனியை விடுவிக்குமாறு வேண்டுகிறாள். பரதன் தம்பியிடம் கூறி, மந்தரையை விடுவிக்கிறான்.

கம்பர்: பரதன், அரசை ஏற்க மறுத்து, இராமனைக் காட்டில் சென்று அழைத்துவர வசிட்டர், சுமந்திரர், தாய்மார்கள் முதலியவர்களுடன் புறப்படும்போது மந்தரையும் பின்தொடர்கிறாள். அவளைக் கண்ட சத்துருக்னன் அடங்காத கோபத்தில் அவளைப் பற்றுகிறான். பரதன் அவனைத் தடுத்து விடுகிறான்.

துளசிதாசர்: கேகய நாட்டிலிருந்து திரும்பி வந்த பரதன் தானில்லாதபோது நாட்டில் நடந்த பொல்லாங்கை அறிந்து, தாயை நிந்திக்கும் வேளையில், மந்தரை ஆடை அணிகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டு அங்கு வருகிறாள். அவளைக் கண்டதும் சத்துருக்னன்

கோபம் மீதூர அவள் மீது குதித்துப் பாய்ந்து முதுகில் குத்துகிறான். அவள் குப்புற வீழ்ந்து அலறுகிறாள். அவளுடைய கூன் முதுகு உடைந்தது; பல் தெறித்தது; வாய் இரத்தம் கக்கியது. அவள் ''நான் செய்த உதவிக்கு இதுவா கைம்மாறு'' என்று சொல்லி அழுகிறாள். பரதன் தலையிட்டு அவளை விடுவிக்கிறான்.

### 30. பரதன் குகனைச் சந்தித்தல்

வான்மீகி: தசரதர் இறந்த 14 - ஆம் நாள் தசரதரின் உத்தரக்கிரியை நிறைவேறியபின் வசிட்டரும், சுமந்திரர் முதலிய அமைச்சர்களும் பரதனை அணுகி, அவனை முடிசூடி அரசாளுமாறு வேண்டுகிறார்கள். பரதன் அவர்கள் கருத்தை ஏற்க மறுத்து, இராமனைக் காட்டில் வைத்தே அபிஷேகம் செய்து, சக்கரவர்த்தியாக நாட்டிற்கு அழைத்து வருவதற்கான ஏற்பாடுகளுடன், வசிட்டர், அமைச்சர்கள், தாய்மார்கள், நாற்படை வீரர்கள் இவர்களைத் தம்முடன் கொண்டு புறப்படுகிறான். கங்கைக் கரையில் வசிக்கும் குகன், படைகளுடன் வரும் பரதனின் நோக்கம் இன்னதென்று அறிவதற்காகக் கையுறையோடு அவனைக் காணச் செல்கிறான் சுமந்திரர் பரதனுக்குக் குகனை 'இராமனின் அன்புத் தோழன்' என்று அறிவிக்கிறார், குகன் பரதனிடம் படைகளுடன் வருவதன் காரணம் யாதென்று வினவுகிறான். பரதன் இராமனை அழைத்துப் போகவே வந்துள்ளதாகக் கூறியபோது குகன் அவனைப் புகழ்கிறான். குகன் பரதனுடன் வந்த பரிவாரங்களுக்குத் தான் விருந்தளிக்க விரும்புவதாகக் கூறுகிறான். அச்செயல் குகனுக்குச் சிரமம் தருவதாக இருக்கும் என்று எண்ணிய பரதன் அதனை மறுத்து, அவனது அன்புள்ளத்தைப் பாராட்டுகிறான்.

இராமன் முன்பு அங்குத் தங்கியிருந்த வேளையில், இரவில் துயிலும்போது இலக்குவன் அவனைக் காவல் புரிந்ததையும், தானும் (குகனும்) 'இராமனை ஒரு தம்பி (பரதன்) நாட்டைவிட்டுத் துரத்திவிட்டான்; மற்றொரு

தம்பியாகிய இவ் இலக்குவன் அவனை உறக்கத்தில் என்ன செய்துவிடுவானோ' என்ற கவலையில் கண் துஞ்சாமல் இலக்குவனைக் கண்காணித்துக் கொண்டே இராமனைப் பாதுகாத்து நின்றதையும் குகன் பரதனிடம் ஒளிக்காமல் கூறுகிறான். (அரிய தம்பி இலக்குவனையும் ஐயுறும் அளவுக்குக் குகனுக்கிருந்த இராமபக்தியின் சிறப்பை ஸ்ரீவசனபூஷணமும், மணவாள முனிவரின் வியாக்கியானமும் போற்றுவதற்குரிய மூலக்கருத்து வான்மீகத்தில் உளது என்பதை நாம் தெரிதல் வேண்டும்.)[1]

பரதன் அங்கு வைத்து, இனிமேல் மரவுரி மான் தோல் இவற்றையே உடுத்து, காய், கனி, கிழங்கு வகைகளையே உண்ணப்போவதாக விரதம் எடுத்துக் கொள்ளுகிறான். பரதன், குகன் அமைத்த ஓடங்களில் ஏறிக் கங்கையைக் கடந்து தன் பரிவாரங்களுடன் மறுகரை சேர்கிறான். பின்பு பரதன் அங்கிருந்து புறப்படும்போது குகன் அவனுக்கு வழிகாட்டிக் கொண்டு தானும் இராமனைக் காணச் செல்கிறான். (குகன் பரதனுடன் இராமனைக் காணச் செல்வதை மூன்று கவிஞர்களும் பாடுகின்றனர்.)

கம்பர்: படைகளோடு வரும் பரதனைக் கண்ட குகன் அவன் இராமனைக் காட்டிலிருந்து, துரத்துவதற்காகவே வருகிறான் என்று துணிந்து, அவனுடன் போர் தொடுக்கப் போவதாக வீரமுழக்கம் செய்வதும், தனது வீரர்களைப் போருக்கு ஆயத்தமாகும்படி கட்டளையிடுவதும், இராமன் மீது தான் வைத்த ஆழ்ந்த அன்பை வெளிப்படுத்துவதும் ஆகிய, வான்மீகி கூறாத செய்திகளைக் கம்பர் நாடகவியல்பு புலப்படச் சிறந்த சொல்லோவியமாகச் சித்திரித்துள்ளார். பின்பு பரதனின் துறவுக் கோலத்தைத் தூரத்தில் நின்று கண்ட குகன், தான் வீணாக அவனைக் குறித்து ஐயுற்றதற்காக வருந்தி, அவ

[1] இச்செய்தி இந்நூல் 9 - ஆம் அதிகாரத்தில் விளக்கப் பட்டுள்ளது

னைக் காணும் பொருட்டுக் கையுறையுடன் செல்கிறான் குகன் தொலையில் வரும்போதே சுமந்திரர் அவனை 'இராமனின் உயிர் நண்பன்' என்று பரதனுக்கு அறிமுகம் செய்கிறார். (முன்பு இராமனை முனிவர்கள் வாழும் சோலையில் விட்டுப் பிரிந்து, அதனால் இராமன் குகனுடன் நட்புச் செய்ததையோ, அவனைத் தன் சகோதரனாகப் பாராட்டியதையோ அறியும் வாய்ப்பைப் பெறாத சுமந்திரர், அவற்றைத் தாம் உடனிருந்து அறிந்தவர் போலக் குகனை இராமனின் ஆருயிர் நண்பன் என்று பரதனிடம் கூறுவதன் பொருத்தத்தை அறிஞர்கள் சிந்திக்கக் கடவர்.)

துளசிதாசர்: இராமனைக் காட்டில் வைத்து அபிஷேகம் செய்து நாட்டிற்கு அழைத்துப் போகும் எண்ணத்துடன் வரும் பரதனைக் குகன் தவறாக எண்ணி, அவனுடன் போர் தொடுக்க ஆயத்தமாகும் வேளையில் ஒருவன் தும்முகிறான். குறி சொல்பவன் யாவும் நன்மையாக முடியும் என்று கூறுகிறான். முதியவன் ஒருவன், ''போர் நடவாது. பரதன் இராமனை நாட்டிற்கு அழைத்துப் போகவே வருகிறான்; சகுனம் அவ்வாறு சொல்கிறது'' என்று கூறுகிறான். அவற்றைக் கேட்டு மனம் மாறிய குகன் கையுறைகளுடன் பரதனைக் காணச் செல்கிறான். வசிட்டர் குகனை இராமனின் நண்பர் என்று பரதனுக்கு அறிமுகம் செய்கிறார். (சுமந்திரர் குகனைப் பரதனுக்கு அறியப்படுத்தியதாக வான்மீகியும் கம்பரும் கூறும் கருத்தோடு இது மாறுபடுகிறது.) குகன் தன் ஊரையும் பேரையும் சொல்லிக் கொண்டு பரதன் முன் நிலம்படிய வீழ்ந்து வணங்குகிறான். இராமனும் சீதையும் துயின்ற இடத்தைக் குகன் பரதனுக்குக் காட்டுகிறான். அங்குப் பரதன் சில தங்கத் தகடுகளைக் கண்டு, (அவை சீதையின் அணிகளிலிருந்து உதிர்ந்து வீழ்ந்தவை போலும்!) அவற்றை எடுத்துத் தன் தலைமேல் வைத்துப் பக்திப் பரவசமடைகிறான்.)

31. பரதன் பரத்துவாசரைச் சந்தித்தல்

வான்மீகி: பரத்துவாசர் தவத்தாலும், ஞானத்தாலும் சிறந்தவர். அவரும் வசிட்டரும் ஒத்த வயதினர். ஆதலால் அவர்கள் சந்தித்தபோது, ஒருவரையொருவர் வணங்காமல் முகமன் மட்டும் கூறுகின்றனர். பரத்துவாசர் பரதனிடம், ''இராமனுக்குக் கேடு செய்ய வருகிறாயா?'' என்று வினவுகிறார். அவன் முனிவரிடம் தன்னை அவ்வாறு நினைக்க வேண்டாமென்றும், இராமனை அழைத்துப் போகவே வருவதாகவும் கூறுகிறான். முனிவர் அவனைப் புகழ்கிறார். பரத்துவாசர் தமது தவவலிமையால், விசுவகர்மா, மயன், இந்திரன், குபேரன் முதலிய தேவர்களை வரழைத்து, அவர்களைக்கொண்டு, மாடமாளிகைகள், அறுசுவை உணவு, பான வகைகள் – இவற்றை உண்டுபண்ணி, பரதனுடன் வந்த பரிவாரங்களுக்கு அளித்து எல்லோரையும் இன்ப அனுபவத்தில் திளைப்பிக்கிறார். (முனிவர் வானுலகை வரவழைத்து, பரதனைச் சார்ந்தவர்களுக்கு விருந்தளித்த செய்தியைக் கம்பரும் துளசியும் பாடுகின்றனர்.)

கம்பர்: பரத்துவாசரின் ஆசிரமத்தில் அவரும் வசிட்டரும் சந்தித்ததாகவோ, பேசியதாகவோ கம்பர் பாடவில்லை. பரத்துவாசர் இராமனைக் காண்பதற்காகப் பரதனுடன் சித்திரகூடமலைக்குச் செல்லுகிறார். அவ்வேளையிலும், சித்திரகூடத்தில் தங்கியிருந்தபோதும் இரு முனிவர்களும் சந்தித்து உரையாடியதாகக் கம்பர் ஏனோ பாடவில்லை. (பரத்துவாசர் இராமனைக் காண்பதற்காகப் பரதனுடன் சித்திரகூடத்திற்குச் சென்றதை வான்மீகியும், துளசிதாசரும் கூறவில்லை.)

துளசிதாசர்: பரத்துவாசர் பரதனிடம் அயோத்தியில் நடந்தவற்றையெல்லாம் தாம் அறிந்துள்ளதாகவும், விதியை யாராலும் வெல்ல முடியாதென்றும் கூறுகிறார். முனிவர் இராமனைக் குறிப்பிடும்போது 'சிவபெருமானாலும் தம் மனக்கண்ணால் காணமுடியாத பெருமை படைத்தவர்' என்று புகழ்கிறார்.

32 பரதன் கைகேயியைப் பழித்தும், மற்றிரு தாயரையும் புகழ்ந்தும் கூறுதல்

வான்மீகி: பரத்துவாச முனிவரின் ஆசிரமத்திலிருந்து எல்லோரும் சித்திரகூடத்திற்குப் புறப்படும்போது, முனிவர், பட்டத்தரசிகள் மூவரையும் யாவர் என்று பரதனிடம் வினவுகிறார். அவன் கோசலையைச் சுட்டிக்காட்டி, ''சோகத்தாலும், பட்டினியாலும் இளைத்துத் தர்ம தேவதை போல் காட்சியளிக்கும் இவளே இராமனைப் பெற்ற கோசலாதேவி. அவளுடைய இடதுகையைத் தாங்கிக் கொண்டு, வெயிலால் வாடிய பூங்கொம்பு போன்று பொலிவிழந்து நிற்பவளே இலக்குவனையும், சத்துருக்னனையும் ஈன்ற சுமித்திராதேவி'' என்று கூறினான். பின்பு கைகேயியைச் சுட்டிக்காட்டி, தசரதர் புத்திர சோகத்தால் மரணமடையக் காரணமாக இருந்தவளும், கடுங்கோபம், கர்வம், பேராசை முதலிய தீயகுணங்களையுடையவளுமான இவளே கைகேயி. நான் முற்பிறப்புக்களில் செய்த பாவத்தால் இவள் வயிற்றில் வந்து பிறந்தேன். நான் அனுபவிக்கும் துன்பங்கள் யாவும் இவளால் விளைந்தனவே'' என்று கூறினான். முனிவர் பரதனிடம் கைகேயியைக் குறை கூறுவது தக்கதன்று என்றும், தேவர்கள், முனிவர்கள் இவர்களின் நன்மைக்காகவே இராமன் காடு சென்றுள்ளான் என்றும் கூறுகிறார்.

கம்பர்: கம்பர் இச்செய்தியையே பரதன் அன்னைமார் மூவருடன் குகனின் படகில் அமர்ந்து கங்கையைக் கடக்கும்போது குகனுக்குக் கூறியதாகப் பாடுகிறார். (கம்பர் பாடும் முறையை இந்நூல் 11-ஆம் அதிகாரத்தில் காண்க.)

துளசிதாசர்: பரதன் தன் அன்னையைப் பிறரிடம் இகழ்ந்து கூறும்படியான ஒரு சந்தர்ப்பத்தைத் துளசிதாசர் தமது நூலில் அமைக்கவில்லை.

## 33. பரதன் இராமனிடம் பாதுகை பெறுதல்

வான்மீகி: பரதனின் படைகள் சித்திரகூடத்தை நெருங்குகிறபோது இலக்குவன் கண்டு, பரதன் இராமன் மீது போர்தொடுக்க வருகிறான் என்று அனுமானித்துக் கொண்டு, அவனைக் கொல்லப் போவதாக வீரமொழி புகல்கிறான். (இச் செய்தியைக் கம்பரும் துளசிதாசரும் பாடுகிறார்கள்.) இராமன் பரதனது நற்பண்புகளை விளக்கிக்கூறி, அத்தகைய உத்தமனைக் கொல்வதால் வரும் செல்வம் தனக்கு வேண்டாமென்று ஆயுதங்களைத் தொட்டு ஆணையிடுகிறான். பரதன் தன்னுடன் வந்தவர்களைச் சற்றுத் தொலையில் நிறுத்தி விட்டு, சத்துருக்னன், சுமந்திரர் ஆகிய இருவருடன் இராமனிருக்கும் பர்ணசாலையை நோக்கி வருகிறான். உள்ளே இராமன் தர்ப்பாசனத்தில் இருப்பதைக் கண்டு ஓடிச்சென்று அவன் காலடியில் வீழ்ந்து வணங்குகிறான். பரதனைக் கண்டதும் இராமன் அவனே நாட்டை ஆள்வதாக எண்ணி, 60 வகையான அரசியல் நீதிகளை அவனுக்கு உபதேசிக்கிறான். (நீண்ட உபதேசம் முடியும் வரை, பரதன் தான் வந்த காரியத்தைக் கூறாமலும், இராமனும் தன் தந்தையின் நலம் பற்றி விசாரிக்காமலும் இருந்தார்கள் என்பது பொருத்தமாக அமையவில்லை.) பரதன் அரசாள விரும்பாத தனக்கு உபதேசங்களால் பயனில்லை என்று பணிவுடன் கூறுகிறான். பின்னர்ப் பரதன் தந்தையின் மரணச்செய்தியை இராமனுக்கு அறிவிக்கிறான். அதைக் கேட்டதும் இராமன் மூர்ச்சையடைகிறான். தம்பிமார்கள் மூர்ச்சை தெளிவிக்கிறார்கள்.

சுமந்திரர் இராம லக்குமணர்களை நீர் நிலைக்கு அழைத்துச்சென்று இறந்த தந்தைக்கு ஆற்றவேண்டிய நீர்க்கடனைச் செய்விக்கிறார். (நீர்க்கடனைச் செய்விப்பதற்கு அமைச்சராகிய சுமந்திரரை விடப் புரோகிதரும் குருவுமான வசிட்டரே தகுதியுடையவராவர். பரதன் பரிவாரங்களைத் தொலையில் நிறுத்துவிட்டு இராமனைக் காணவந்தபோது சுமந்திரரைத் தன்னுடன் அழைத்து

வந்ததற்குப் பதில் வசிட்டரை அழைத்து வந்திருந்தால், அவன் இராமனைச் சந்திக்கும் செயலுக்கும், பின்னர் இராமன் நீர்க்கடனாற்றும் நிகழ்ச்சிக்கும் பொருத்தமாக வும் சிறப்பாகவும் இருந்திருக்கும். அல்லது சற்றுப் பொறுத்து, வசிட்டர் இராம லக்குமணர்களைச் சந்தித்த பின், அவரே அவ்விருவரையும் நீர் நிலைக்கு இட்டுச் சென்று நீர்க்கடனைச் செய்வித்தார் என்று கதை அமைந் தால் அதுவும் சிறப்பாக இருக்கும்.)

இராமன் நீர்க்கடனை நிறைவேற்றிவிட்டுப் பர்ண சாலைக்கு மீண்டபின் வசிட்டர், அரசிகளுடனும், பரி வாரங்களுடனும் பர்ணசாலைக்கு வருகிறார். இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் அவர்களை வணங்கு கிறார்கள். அவ்வேளையில் பரதன் இராமனிடம், கைகேயி யின் வயிற்றில் பிறந்து பாவத்திற்கு ஆளாகியிருக்கும் அடிமையாகிய தனது வேண்டுகோளை ஏற்று, நாட்டைப் பரிபாலனம் செய்யும்படி பிரார்த்திக்கிறான். இராமன் தந்தையின் ஆணையைத் தன்னால் மீறமுடியாதென்றும், தந்தை கைகேயியை மணம் புரிந்த நாளில், அவள் வயிற்றில் பிறக்கும் மகனுக்கு நாட்டைத் தருவதாகக் கேகயருக்கு அளித்த வாக்குறுதியின்படி பரதனுக்கு உரிமைப்பட்ட நாட்டை அவனே ஆளவேண்டும் என்றும் உறுதிபடக் கூறுகிறான்.

அவ்வேளையில் ஜாபாலி என்ற முனிவர், சார்வாக மதத்தின் அடிப்படையில், 'தாய் தந்தையர்களின் வாக்கை நிறைவேற்ற வேண்டும் என எண்ணுவது பயனற்ற செயல்' என்றும், 'கிடைத்த நாட்டை வேண்டாமென்று மறுப்பது அறிவின்மை' என்றும் கூறுகிறார். இராமன் முனிவரது கொள்கை வேத விரோதமானதென்றும், அவர் நிந்தனைக்குரியார் என்றும் கடிந்து பேசுகிறான். உடனே வசிட்டர் தாம் இராமனின் குருவாதலால் தமது சொல்லை மறுக்காமல் ஏற்று, இராமன் நாட்டை ஆளவேண்டு மென்று கூறுகிறார். இராமன் முதலில் வந்த தந்தையின் ஆணையை நிறைவேற்றுவதே தனது முதற்கடமை

யென்று கூறி, முனிவரின் விருப்பத்தை நிறைவேற்றத் தன்னால் இயலாதிருப்பதற்கு வருந்துகிறான். (வசிட்டர் கூறும் கருத்தை, இராமன் மறுத்துரைக்கும் இச்செய்தியைக் கம்பரும் பாடுகிறார்; துளசி பாடவில்லை )

இவ்வுரையாடல்களைக் கேட்டுக்கொண்டு அங்கிருந்த முனிவர்கள் இராவண வதம் நிறைவேறும் வகையை மனத்துள் எண்ணியவராய், இராமன் கருத்துக்கு இணங்குமாறு பரதனுக்கு அறிவுரை கூறுகிறார்கள். பரதனும் அவர்கள் சொல்லை ஏற்று இராமனின் பாதத்தில் வீழ்ந்து வணங்கும்போது, இராமன் தம்பியை எடுத்துத் தன் மடியில் வைத்துக்கொள்ளுகிறான். இராமனது திருமேனி தீண்டப் பெற்றதும் பரதனுக்கு மெய்ஞ்ஞானம் பிறந்து, மனச் சஞ்சலம் அகன்றுவிட்டதாக வான்மீகி பாடுகிறார். பரதன் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட இரு மரவடிகளில் இராமனை ஏறச்செய்து, அவற்றை இராமனின் பிரதிநிதியாக மதித்துப் போற்றித் தன் தலைமீது வைத்துக் கொள்ளுகிறான். பரதன் இராமனிடம் 14 ஆண்டுகள் கழிந்த மறுநாளில் அரசைத் தன்னிடமிருந்து திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும், இல்லாவிட்டால் தான் நெருப்பில் வீழ்ந்து உயிர்துறப்பதாகவும் கூறி, இராமனது சம்மதத்தைப் பெற்று, அவனை வணங்கி விடைபெற்றுத் தன் பரிவாரங்களுடன் நாடு திரும்புகிறான்.

பரதன் நந்திக்கிராமத்தில் துறவிக்கோலத்துடனிருந்து, பாதுகைகளை இராமனாகப் பாவித்து, ஆட்சிப் பொறுப்பை வசிட்டரிடமும், சுமந்திரரிடமும் ஒப்புவித்து அவர்கள் அறிவுரைப்படி ஆண்டு வருகிறான். (பரதன் துறவியாக நந்திக்கிராமத்திலிருந்து பாதுகைகளின் ஆளாக ஆண்டுவந்த செய்தியைக் கம்பரும், துளசியும் பாடுகின்றனர்.)

கம்பர்: இறந்த தந்தைக்கு இராம லக்குமணர்கள் ஆற்றவேண்டிய நீர்க்கடனை வசிட்டரே முன்னின்று அவர்களைக் கொண்டு செய்விக்கிறார். பரதன் இராமனை

நாட்டிற்கு வந்து அரசு புரியுமாறு வேண்டியபோது இராமன் அவனிடம், தந்தை அவன் அன்னை கைகேயிக்கு அளித்த வரத்தின்படி ஆட்சி அவனுக்கே உரிமையாகியுள்ளதை எடுத்துக் கூறுகிறான். பரதன் அக் கருத்தை உடன்பட்டாற்போல, அரசு தனக்கு உரியதாயின் தான் அதனை இராமனுக்கு அளிப்பதாகக் கூறி, இராமன் அதை ஏற்று, நாட்டில் வந்து ஆட்சிபுரியுமாறு வேண்டுகிறான். அப்போது இராமன் 'பரதனது கோரிக்கையைத் தான் ஏற்பதானால் முன்பு தந்தையிடம் தான் ஏற்ற 14 வருட வனவாழ்வு நிறைவேறுவது எங்ஙனம்?' என்று கேட்டுப் பரதனைப் பதில் கூறமுடியாதபடியும், தன் கருத்தையே ஏற்கும்படியும் செய்துவிடுகிறான்.

இங்கு நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் வானுலகிலிருந்து அறிந்து கொண்டிருந்த தேவர்கள், இராவண வதம் நிறைவேறுவதற்கு இராமன் கானகம் செல்வதன் இன்றியமையாமையை உணர்ந்து, அசரீரியாக, ''இராமன் 14 ஆண்டுகள் வனத்தில் வாழ்க; பரதன் அக்கால மட்டும் நாட்டை ஆள்க'' என்று கூறினர். பரதன் அத் தெய்விக ஆணைக்குப் பணிந்து நாடு திரும்ப எண்ணி, இராமன் அளித்த பாதுகைகளையும், 14 ஆண்டுகள் முடிந்த மறுநாளே ஆட்சியைத் தன்னிடமிருந்து திரும்பிப் பெற்றுக் கொள்வதாகக் கூறிய உறுதி மொழியையும் பெற்றுக்கொண்டு, தன் பரிவாரங்களுடன் அயோத்திக்குப் பயணமானான். (இராமனுடனிருந்த முனிவர்கள் கூறிய அறிவுரைப்படி பரதன் நாட்டை ஆள இணங்கினான் என்று வான்மீகி கூறிய கருத்தைச் சிறிது வேறுபடுத்தி, கம்பர் அசரீரியைப் பேசவைத்து, பரதன் அதனை ஆணையாக ஏற்று அமைந்தான் என்று கூறுகிறார் )

துளசிதாசர்: சித்திரகூடத்தை நோக்கித் தன் பரிவாரங்களுடன் செல்லும் பரதன் இரவில் ஓரிடத்தில் தங்குகிறான். அன்றிரவு சீதை, பரதன், அண்ணனைக் காண வருவதாகக் கனவுகண்டு, அதை இராமனுக்குக் கூறுகிறாள். மறுநாள் பரதன் சித்திரகூடத்திற்கு வந்து

கொண்டிருக்கும் செய்தியைச் சில வேடர்கள் இராமனிடம் அறிவிக்கிறார்கள். பரதனின் வருகையைப் பிழையாக எண்ணி இலக்குவன் அவனை எதிர்த்துப் போர்புரிய ஆயத்தமாகிறான் அவ்வேளையில் ஓர் அசரீரி, 'ஆத்திரப் படாமல் சிந்தித்துச் செயல்படுக' என்று கூறுகிறது. அதைக்கேட்டு இலக்குவன் நாணமடைகிறான்.

பரதன் தன்னுடன் வந்தவர்களை மந்தாகினி யாற்றின் கரையில் நிறுத்திவிட்டுச் சத்துருக்னனுடனும், குகனுடனும் அண்ணனைக் காணவருகிறான். இராமன் சீதையுடன் ஒரு மேடையின் மீது, துறவிகள் சூழ அமர்ந்திருப்பதைக் கண்ட பரதன், ''என்னைக் காப்பாற்று'' என்று ஓலமிட்ட வண்ணம் ஓடிச் சென்று அண்ணனின் பாதங்களில் விழுகிறான். இராமன் அவனைத் தூக்கியெடுத்துத் தன் மார்புறத் தழுவுகிறான்; சத்துருக்னனையும் அணைத்துக்கொள்ளுகிறான்; குகனையும் கண்டு பேசுகிறான். பரதன் இலக்குவனை அன்போடு தழுவுகிறான். பின்னர்ப் பரத சத்துருக்னர்கள் சீதையை வணங்குகிறார்கள்.

குகன், இராமனிடம், வசிட்ட முனிவர், அவர் மனைவி அருந்ததி, அன்னைமார் மூவர், மற்றும் பலர் வந்திருப்பதை அறிவிக்கிறான். இராம லக்குமணர்கள் விரைந்து சென்று அவர்களை வணங்குகிறார்கள். இராமன் தாய்மார்களுள் கைகேயியை முதலில் வணங்கி, ''நடந்தன யாவும் விதியின் விளைவு'' என்று கூறி, அவளைச் சமாதானப்படுத்திவிட்டுப் பின்னர் மற்றிரு தாயரையும் வணங்குகிறான். கைகேயி தான் செய்த பிழைக்கு வருந்துகிறாள். (வசிட்டருடன் அருந்ததி வந்த செய்தியை மற்றிரு புலவர்களும் பாடவில்லை.)

இப்பொழுது வசிட்டர், தசரத மன்னர் மரணமுற்ற செய்தியை இராமனுக்குக் கூறுகிறார். அத்துக்கச் செய்தி கேட்டு இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் அவலக் கடலுள் ஆழ்கின்றனர். மறுநாள் இராம லக்கு

மணர்கள் வசிட்டர் கூறியபடி தந்தைக்கு நீர்க்கடன் ஆற்றுகிறார்கள். எல்லோர்க்கும் தேவையான காய், கனி, கிழங்கு முதலிய உணவு வகைகளை அப்பகுதியில் வாழும் வேட்டுவ மக்கள் கொண்டு வந்து அளிக்கின்றனர். சீதை மூன்று மாமிமார்களையும், மூன்று வடிவத்தில் சம அளவில் உபசரித்தாள் என்றும், இதன் இரகசியத்தை இராமன் மட்டுமே அறிவான் என்றும் துளசிதாசர் கூறுகிறார். (இராமனும், சீதையும் மனித இயல்புக்கு மேம்பட்ட அணிமா முதலான எண்வகை ஆற்றல்களைப் பெற்றிருந்தமையைத் துளசி இதன் மூலம் குறிப்பால் உணர்த்தினார் ஆவர்.)

மறுநாள், பரதன் வந்த காரியத்தைப் பற்றிச் சிந்திப்பதற்காக எல்லோரும் கூடுகிறார்கள். வசிட்டர் இராமனுடைய தெய்விக ஆற்றல், சொன்ன சொல் தவறாமை முதலிய உயர்பண்புகளைக் குறிப்பிட்டு, அவன் எடுக்கும் முடிவு எல்லோர்க்கும் நன்மையாக இருக்கும் என்று சொல்லிப் பேச்சைத் தொடங்குகிறார். பரதன் வசிட்டரையே ஒரு முடிவு கூறுமாறு வேண்டுகிறான். அவர் இராமன், சீதை, இலக்குவன் ஆகிய மூவரும் நாடு செல்வதும், பரதனும் சத்துருக்னனும், தந்தை இராமனுக்கு அளித்த ஆணையைத் தாம் ஏற்று நிறைவேற்றும் பொருட்டுக் காடு செல்வதும் எல்லோர்க்கும் நன்மை பயக்கும் செயல்களாகும் என்று தமது கருத்தைக் கூறுகிறார். (வான்மீகியும் கம்பரும் படைக்கும் வசிட்டரின் கருத்துடன் இது ஒத்திருக்கிறது.) கேட்ட பரதன் அதையே நிறைவேற்றி வைக்குமாறு முனிவரை வேண்டுகிறான். இராமன் தன் மனம் குழப்பமாக இருப்பதாகவும், தந்தை சொல்லை மீறத் தான் தயங்குவதாகவும் கூறுகிறான்.

(இங்கு இவ்வாறு ஒரு தேக்கநிலை நிலவும்போது, வானுலகில் தேவர்கள் இராவணவதமாகிய தமது நோக்கம் நிறைவேறாமல் போய்விடுமோ என்று கவல்கின்றனர்.) பரதன் இராமனின் கட்டளைக்குப் பணிவதே தனது

கடமை என்பதை உணர்ந்து, அவனிடம் ''உனக்கு எது நன்மையோ அதன்படி செய்'' என்று கூறுகிறான். மாற்றுக் கருத்துக்கள் சிலவற்றையும் அவன் சிந்தனைக்குத் தருகிறான். அவை:

1. இராமன் நாட்டில் அபிஷேகம் செய்யப் பெறுதலும், பரதனும் சத்துருக்னனும் காடேகுதலும்.
2. இலக்குவனும் சத்துருக்னனும் காடு செல்லுதலும், இராமன் அரசாள்வதற்கும், பரதன் அவனுக்கு அடித்தொழில் புரிவதற்குமாக இருவரும் நாடேகுதலும்.
3. மூன்று தம்பியரும் காடு செல்லுதலும், இராமனும், சீதையும் நாடு சென்று அரசாள்தலும்.

இப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் வேளையில் ஜனக மகாராஜா தமது அரசியான சுனயானா, புரோகிதரான சதானந்தர், மற்றும் பரிவாரங்களுடன் அங்கு வந்து கொண்டிருப்பதாக அவர் அனுப்பிய தூதர்கள் வந்து அறிவிக்கிறார்கள். உடனே, எல்லோரும் எழுந்து ஜனகரை வரவேற்கச் செல்கின்றனர். ஜனகர் தசரதரின் மரணச் செய்தியை மிதிலையில் வைத்து அறிந்து, துக்கம் விசாரிப்பதற்காக அயோத்திக்குச் சென்றவர், அங்கு வைத்து, இராமன் காடு சென்றதையும், அவனை அழைத்துவரப் பரதனும் அங்குச் சென்றுள்ளதையும் அறிந்து, அவர்களைக் காண்பதற்காகக் காட்டிற்கே வந்துவிடுகிறார். ஜனகர், மறைந்த தசரதரின் அருங்குணங்களைப் பாராட்டிக் கூறி, அவர் மரணமடைந்ததற்காக வருந்துகிறார். வசிட்டர் அவருக்கு ஆறுதல் கூறுகிறார். ஜனகரும், அவரது மனைவியும் சீதை மரவுரி தரித்திருப்பதைக் கண்டு, அவள் பிறந்த இடத்திற்கும், புகுந்த இடத்திற்கும் சிறப்பை உண்டுபண்ணுவதற்காக அவளைப் பாராட்டுகிறார்கள்.

வசிட்டர் நாட்டில் ஏற்பட்டுள்ள அரசியல் நிலைக்கு ஒரு தீர்வு காணும்படி ஜனகரிடம் வேண்டுகிறார். அப்

போது இராமன், ஜனகரும் வசிட்டரும் கூறும் முடிவைத் தான் ஏற்றுக்கொள்வதாகக் கூறுகிறான். பரதன் எல்லோர்க்கும் நன்மை அளிக்கும் வகையில் இராமன் எடுக்கும் முடிவைத் தான் சிரமேற்கொள்வதாகச் சொல்லுகிறான். இச்சமயத்தில் வானுலகில் தேவர்கள் பரதனின் உள்ளத்தைக் கலைப்பதற்காகச் சாரதா தேவியின் உதவியை நாடுகிறார்கள். சாரதாதேவி பரதனின் உறுதியைக் குலைக்கத் தன்னால் ஆகாதென்று கூறிவிடுகிறாள். (முன்பு மந்தரையின் மனதைக் குலைத்த சாரதாதேவி இப்பொழுது பரதனின் உள்ளத்தைக் குலைக்கத் தன்னால் இயலாதென்று கூறுவது, பரதனுக்குப் பெருமை அளிப்பதோடு, அறநெறியில் பயின்ற அவன் உள்ளத்தின் உறுதிக்குச் சான்றுமாகிறது.)

இராமன் பரதனிடம், தாய் தந்தையரின் விருப்பத்தை நிறைவேற்றுவதால் இருமை நலன்களும் கைக்கூடும் என்றும், பரதன் நாட்டிலிருந்து ஆளவேண்டும் என்பதே தனது கருத்து என்றும் கூறுகிறான். பரதன் அதை ஆணையாக ஏற்று மனச் சஞ்சலம் அகலப் பெறுகிறான்; பரதன் இராமனிடம் அவன் பாதுகைகளைத் தருமாறு வேண்டிப் பெற்று, அதனால் மனநிறைவடைகிறான். பின்னர் அவன் அம்மலையில் தவம் செய்யும் அத்திரி முனிவரின் ஆசிரமத்துக்குச் சென்று, அவரையும் அவர் மனைவி அநசூயையும் தொழுகிறான். தான் அயோத்தியிலிருந்து கொண்டு-வந்த தீர்த்தத்தை அங்குள்ள ஒரு கிணற்றில் ஊற்றுகிறான். அதனால் அக்கிணறு 'பரதகுபா' என்று வழங்கப்படுகிறது.

பரதன் இராமனை வணங்கி, அவன் அளித்த பாதுகைகளைத் தலையில் வைத்துக் கொண்டு, தன் பரிவாரங்களுடன் அயோத்திக்குப் புறப்படுகிறான். குகனும் இராமனை வணங்கி விடைபெற்றுப் பிரிகிறான். சிருங்கிபேரபுரத்தில் குகன் எல்லோரையும் உபசரிக்கிறான். பின்னர் அவர்கள் அயோத்திக்குத் திரும்புகின்றனர். ஜனகரும் அயோத்திக்கு வந்து பரதனிடம், வசிட்டர், சுமந்திரர்

துணையுடன் ஆட்சியைச் செவ்விதின் நடத்துமாறு அறிவுரை கூறிவிட்டு, மிதிலைக்குப் புறப்பட்டுப் போகிறார்.

பரதன் ஒரு நல்லநாளில் பாதுகைகளைச் சிம்மாசனத்தில் வைத்துத் தான் அதன் பிரதிநிதியாக நத்திக் கிராமத்தில் துறவிக் கோலத்துடனிருந்து ஆட்சி புரிந்து வந்தான். (குகன் பரதனுடன் சித்திரகூடத்திற்குச் சென்ற செய்தியைத் துளசியைப் போல வான்மீகியும், கம்பரும் பாடுகிறார்கள். ஜனகர் தசரதரின் மரணச்செய்தியை விசாரிப்பதற்காக அயோத்திக்குச் செல்வதும், பின்பு அங்கிருந்து சித்திரகூடத்திற்கு வருவதும், அங்கு வைத்து எடுக்கப்பட்ட அரசியல் முடிவில் அவரும் பங்கு கொள்வதும் ஆகிய செய்திகள் துளசிதாசரின் கற்பனையின் விளைவுகளாம்.)

## 34. இராமனின் உணவு

வான்மீகி: இராமன் புலால் உண்பவன். அவன் தான் கானகம் செல்லும் செய்தியைக் கோசலையிடம் அறிவிக்கும்போது, 'மாமிசத்தை விலக்கி, தவசியாக வாழப் போகிறேன்' என்று கூறுகிறான். இதிலிருந்து அவன் இதுகாறும் மாமிசம் உண்ணும் வழக்கமுடையவனாக இருந்தமை புலனாகும். கானக வாழ்க்கையில் அவன் மானை வேட்டையாடி அதன் புலாலைப் புசித்ததுபற்றிய குறிப்புக்கள் 55 முதலியசருக்கங்களில் காணப்படுகின்றன.

கம்பர்: இராமன் புலால் உண்ணாதவன்; தாவர உணவு வகைகளையே உண்பவன். குகன் மீனும் தேனும் கையுறையாகக் கொண்டு இராமனைக் காணவந்தபோது, இராமன் அருகிலிருந்த முனிவர்களைப் புன்முறுவலோடு நோக்குகிறான். புலால் உண்ணாத தனக்குக் குகன், அவன் உண்ணும் மீனை அன்பின் மிகுதியால் அளிக்கிறான் என்பதை அம்முறுவலால் புலப்படுத்துகிறான். பரத்துவாசர் சித்திரகூடமலையில் காயும் கனியும் கிழங்கும் தேனும் மிகுதியாகக் கிடைக்குமென்று கூறி இராமனை அங்குச்சென்று தங்குமாறு கூறுகிறார்.

துளசிதாசர்: இராமன் கங்கைக் கரைக்கு வந்திருப்பதை அறிந்து, குகன் அவனைக் காண வரும்போது, பழம், கிழங்குகளையே கூடையில் வைத்து முதுகில் தொங்கவிட்டுக் கொண்டு வந்து இராமன் முன்வைத்து வணங்குகிறான். பின்பு குகன், இராமன் முதலிய மூவரையும் சுமந்திரரையும் ஒரு அசோகமர நிழலுக்கு அழைத்துச்சென்று அவர்களுக்கு அளிக்கும் உணவும் காய் கனி வகைகளேயாம். (வடநாட்டில் வைதிக மதத்திற்கு எதிராக எழுந்த சமண பௌத்த சமயங்களுக்குரிய கொல்லாமை, புலாலுண்ணாமை ஆகிய கொள்கைகள் தென்னாட்டில் பரவியிருந்தமைக்கு, கம்பரும், துளசியும், வான்மீகி கூறியதற்கு மாறாக இராமன் காய்கனிகளை உண்டதாகக் கூறும் செய்திகள் சான்றாகும்.)

### 35. நம்பிக்கைகள்

தும்முதல், கனாக்காணுதல், கண் தோள் முதலிய உறுப்புக்கள் துடித்தல், நிமித்தம் பார்த்தல், நல்ல நாள் கணித்தல், ஜாதகம் பார்த்தல், காப்புக் கட்டுதல், ஆரத்தி எடுத்தல் முதலிய மக்களின் நம்பிக்கை பற்றிய குறிப்புக்கள் சிலவும் பலவுமாக மூன்று நூல்களிலும் வந்துள்ளன.

### 36. பழக்க வழக்கங்கள்

1. விரதத்தை மேற்கொள்ளும் போது ஆடவர் பெண்டிரைத் தொடுதலைத் தவிர்தல்.
2. அழுதுகொண்டிருப்பதால் உண்டாகும் அசுத்தத்தை ஆசமனம் செய்து அகற்றுதல். (ஆசமனம் - வலக்கையில் நீரை எடுத்து மந்திர பூர்வமாக மும்முறை உண்ணுதல்.)
3. குளிர்ந்த நீரில் குளிக்க இயலாதவர்களுக்கு மந்திர ஸ்நானம் விதிக்கப்படுதல்.
4. வாங்கிய கடனைத் திரும்பக் கொடாத கடனாளியின் வீட்டு வாசற்படியில் கடன் கொடுத்த பிராமணன்

ஆகாரமில்லாமல், முகத்தை மறைத்துக் கொண்டு படுகிடத்தல்.

5. நலத்துடன் திரும்பி வரவேண்டுமென்று விரும்புகிற உறவினர்களை வழியனுப்பும்போது, அவர்களை நெடுந்தூரம் பின் தொடராதிருத்தல்.
6. ஒத்த வயதுடைய துறவிகள் சந்தித்தால் வணங்காது உபசரித்தல்.
7. படைவீரர்கள் தாம் தங்கியிருந்த இடத்தை விட்டு அகலும்போது அவ்விடத்தை நெருப்பை வைத்துக் கொளுத்தி விட்டுச் செல்லுதல்.

37. பக்தி, இறைவழிபாடு பற்றிய செய்திகள்

வான்மீகி:

1. இராமனது மாளிகையில் பூசை அறையில் ஸ்ரீரங்க நாதரின் உருவச்சிலை உளது.
2. முடிசூட்டு விழாவின் தலைநாளிரவில் இராமன் நியமத்துடனிருந்து காலையில் திருமாலை வழிபடுகிறான்.
3. இராமன் தான் காட்டிற்குப் போய் நலமாகத் திரும்பி வருவதற்காக, சாந்திஹோமம், புஷ்டிஹோமங்களைச் செய்யும்படி தாய் கோசலையை வேண்டுகிறான்.
4. சித்திரகூடத்தில் பர்ணசாலை அமைத்து, அதில் குடிபுகும் நாளில் இராமன் திருமால் சார்பாகவும், சிவன் சார்பாகவும் இரு யாகங்களைப் புரிகிறான்.

கம்பர்: கம்பர் பாடும் இறைவழிபாட்டுச் செய்திகள் பெரும்பாலும் திருமால் பற்றியனவாக அமைந்துள்ளன.

1. கோசலை இராமனின் முடிசூட்டுவிழா நன்மையாக முடிவதற்காகத் திருமாலை வழிபடுகிறாள்.
2. இராமன் தன் மாளிகையில் திருமாலின் பள்ளி கொண்ட திருவுருவை வைத்து வழிபடுகிறான்.
3. முடிசூட்டுவிழாவின் தலைநாளில் வசிட்டர் இராமனுக்கு அரசியல் நீதிகளை உபதேசித்துவிட்டு, திருமாலின் கோயிலுக்கு அழைத்துச் செல்கிறார்.

துளசிதாசர்:

1. இராமன் காட்டிற்குப் புறப்படும்போது விநாயகர், பார்வதி, சிவன் ஆகிய தெய்வங்களை வணங்குகிறான்.
2. பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்குப் புறப்படும்போது சிவனையும், கணபதியையும் வணங்குகிறான்.
3. சீதை கங்கையில் நீராடுகையில் கங்காதேவியை வழிபடுகிறாள். அத்தேவியும் அசரீரியாகச் சீதையை வாழ்த்துகிறாள். (துளசிதாசர் பாடுவது திருமாலின் அவதாரமான இராமனது வரலாறேயாயினும் அவர் அந்நூலில் சைவக் கடவுளர்கள் பற்றிய செய்திகளையும் குறிப்பிடுவது அவரது சமயப் பொதுநோக்கிற்குச் சான்றாகும்.)

38. துளசிதாசர் கம்பராமாயணத்தைக் கற்றிருந்தாரா?

துளசிதாசர் பாடிய சில செய்திகள் அவர் முதனூலாகக்கொண்ட வான்மீகி ராமாயணத்தில் காணப்படாமல் கம்பராமாயணத்தில் காணப்படுகின்றன. அயோத்தியா காண்டத்தில் கண்ட அத்தகைய ஒப்புமைச் செய்திகளில் சில வருமாறு:

1. தசரதர் முடி வெளுத்திருப்பதைக் கண்டு, தமது முதுமையை உணர்ந்து, இராமனுக்கு முடிசூட்ட எண்ணுதல்.
2. முடிசூடப் போகும் இராமனுக்கு அரசியல் ஞானத்தை வசிட்ட முனிவர் உபதேசித்தல்.
3. மந்தரையைக் கடிந்து பேசும் கைகேயி அவள் நாக்கைச் சிதைக்க வேண்டுமென்று கூறுதல்.
4. இராமனைப் புலால் அருந்தாமல் காய்கனிகளை உண்பவனாகப் படைத்தல்.
5. இராமன் கங்கைக் கரையில் தன் தந்தைக் காற்றும் நீர்க்கடனை வசிட்டர் செய்வித்தல்.

இச் செய்திகள், துளசிதாசர் கம்பராமாயணத்தை அறிந்திருந்தார் எனக் கருதுவதற்கு இடமளிக்கின்றன. கம்பராமாயணம் 14ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டிற்கு அப்பால் கன்னட நாட்டில் பயிலப்பட்டு வந்ததாக அங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. (வையாபுரிப்பிள்ளை நூற்களஞ்சியம், தொகுதி 3, பக்கம் 191) துளசிதாசர் வாழ்ந்த 16ஆம் நூற்றாண்டில் அந்நூல் வடமாநிலங்களில் மேலும் பரவி, இராம சரிதத்தை அறியும் ஆர்வமுடைய துளசியால் கற்கப்பட்டிருக்கக் கூடும் எனக் கருதுவது ஏற்புடையதே

---

## பிழை – திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 27 | கொல்விக்து | கொல்வித்து |
| 56 | 27 | தனர்தல் | தளர்தல் |
| 111 | 18 | சிருங்க | சிருங்கி |
| 126 | 14 | பொலிவற்றிருப்தை | பொலிவற்றிருப்பதை |
| 133 | 22 | நிலைக்கெட்டு | நிலைகெட்டு |
| 142 | 17 | அவளிடம் | அவனிடம் |
| 152 | 12 | தோன்றுகிறது. | தோன்றுகிறது.) |
| 158 | 33 | குரவர்கள் | ''குரவர்கள் |
| 198 | 11 | சாணையிலிட்டு | சாணையிலிட்டுத் |
| 224 | 32 | நேரிலும் | நேரினும் |
| 229 | 8 | பெண்மையையும் | மென்மையையும் |